

கடவுள் துணை.

# பிராணரக்ஷாமிர்தசிந்து

என்னும்

## வைத்தியரத்ன சங்கிரகம்.

### 1-வது அத்தியாயம்.

### தேகத்தில் வாதம், பித்தம், சிலேஷ்மம் இவைகள் வியாபிக்கும் ஸ்தானங்கள்.

வாதமானது அனுஷ்ணசீத ரூபமாக பாதம்முதல் நாபிவரையிலும் பித்தமானது அதிஉஷ்ண ரூபமாக நாபிமுதல் கண்டம் வரையிலும், சிலேஷ்மமானது அதிசீத ரூபமாக கண்டம்முதல் சிரசு வரையிலும் வியாபிக்கும்.

### வாதம், பித்தம், சிலேஷ்மம் இவைகளின் குணங்கள்.

| *தோஷம். | சுபாவ குணம். | விருத்த குணம். | சீரண குணம். |
|---|---|---|---|
| வாதம். | 7 தாதுக்கள், 11 வெளிப்பிராணர்களின் முதலியவைகளால் சரீரத்தைக் காப்பாற்றி சுபாவரூபமாயிருப்பதாம். | தேகத்தில் பலஹீனம், மலஜலக்கட்டு, உப்பிசம் இவைகளை உண்டாக்கும். | பேச்சு இராணியில்லாமை, ஞாபகமறதி இவைகளை உண்டாக்கும். |
| பித்தம். | சுபாவ உஷ்ணத்தால் சரீரத்தைக் காப்பாற்றி சுபாவரூபமாயிருப்பதாம். | மலம், மூத்திரம், கண்கள் இவைகள் மஞ்சள் நிறமாயிருக்கும். | மந்தம், சீதளம் இவைகளை உண்டாக்கும். |
| சிலேஷ்மம். | சுபாவ சீதளத்தால் சரீரத்தைக் காப்பாற்றி சுபாவ ரூபமாயிருப்பதாம். | உப்பிசம், மந்தம், நித்திரை இவைகளை உண்டாக்கும். | புத்திமாறும், சிலேஷ்மம் குறையும். |

*தோஷம் என்பது வாதம், பித்தம், சிலேஷ்மம் இவைகளுக்குப் பொதுப் பெயராம்.

## வாதம், பித்தம், சிலேஷ்மம் இவைகளை அறியும் குறிகள்.

மலத்தால் வாதகுணமும், மூத்திரத்தால் பித்தகுணமும், விந்துவால் சிலேஷ்மகுணமும் அறியவேண்டியது.

---

## அஷ்டவிதபரிக்ஷைகளால் ரோகங்களை நிக்ஷயிக்கப்படும்.

| பரிக்ஷிக்கவேண்டியவைகள். | வாதரோகியின் லக்ஷணங்கள். | பித்தரோகியின் லக்ஷணங்கள். | சிலேஷ்ம ரோகியின் லக்ஷணங்கள். |
|---|---|---|---|
| சரீரம் | கறுப்புநிறம் | மஞ்சள்நிறம் | வெள்ளைநிறம் |
| பரிசம் | சிலயிடத்தில் சீதளம் சிலயிடத்தில் உஷ்ணம் | அதிஉஷ்ணம் | சீதளம் |
| கண்கள் | கறுப்புநீர்வடிதல் | சிவந்தமஞ்சள்நிறம் | வெள்ளைநிறம் |
| மலம் | கறுப்புநிறம் | சிவந்தமஞ்சள்நிறம் | வெள்ளை நிறமும சீதமும் |
| மூத்திரம் | வெள்ளைநிறம் | சிவந்தமஞ்சள்நிறம் | வெள்ளைநிறமாயும் குழம்பாயும். நுரையாயும் இருக்கும். |
| நாக்கு | கறுப்புமுள்ளும்வெடிப்பும் | சிவந்தமஞ்சள்நிறம் | வெள்ளைநிறமும்ஜலம் ஊறுதலும் |
| சத்தம் | சமதொனி | உரத்ததொனி | ஹீனதொனி |
| நாடி | பாம்பு, அட்டை, தவளை, ஒணான், இவைகளின் நடைகள். | தாரா, மயில், அன்னம் இவைகளின்நடைகள். | கோழி, ஊர்க்குருவி இவைகளின்நடைகள். |

---

## நாடியை பரிக்ஷிக்கும் ஸ்தானங்கள்.

(1). கை, (2) கண்டம், (3) கண்ணைச்சுழி, (4) காலின்பெரும் விரல், (5) கணுக்கால் இவைகளில் பரிக்ஷிக்கலாம். ஆனால் கையை பரிக்ஷிப்பதுதான் உத்தமம்.

---

## நாடி நடக்குங் காரணங்கள்.

இருதயம் விரியவும் சுருங்கவும், நாடிநரம்புகளும் விரியவும் சுருங்கவும் செய்யும். இருதய நடைக்கு நாடிநடை ஒத்திருப்பதால், தேகத்திலிருக்கின்ற ரோகங்களை இருதயம் அறிந்து நாடிகளின் வழியாய்த்தெரிவிக்கின்றது.

## நாடிபரிக்ஷிக்கும் விதங்கள்.

கையின் பெருவிரல் பக்கமாய் ஓடும் நாடியை, மணிக்கட்டுக்கு ஒரு அங்குலம்மேலாக மூன்றுவிரல்களால் அழுத்தியும், தளர்த்தியும், சமமாகவும் மாறிமாறி பரிக்ஷிக்க நாடிநடை அறியலாம். புருஷர்களுக்கு வலதுகையும், ஸ்திரீகளுக்கு இடதுகையும் பரிக்ஷிக்கவேண்டியது. ஆனால் இரண்டு கைகளும் பரிக்ஷிப்பது உத்தமம்.

---

## ஒரு மினிட்டுக்கு நாடி நடை பிரமாணம்.

| பருவம். | ஒருமினிட்டுக்கு நாடி நடக்கும் பிரமாணம். | நாடி பரீக்ஷிக்கும் நிலமை. | ஒரு மினிட்டுக்கு நாடி நடக்கும் பிரமாணம். |
|---|---|---|---|
| அப்போது பிறந்த சிசுவுக்கு | 140 | மனிதன் நிற்கும்போது | 79 |
| பால்லியத்தில் | 120—130 | ,, உட்கார்ந்திருக்கும்போது | 70 |
| குழந்தையில் | 100 | ,, படுத்திருக்கும்போது | 67 |
| யௌவனத்தில் | 90 | ஆகையால் மனிதன் நிற்கும்போது நாடியைப்பரீக்ஷிக்கலாகாது. | |
| சம்பூர்ண பருவபுருஷனுக்கு | 70—75 | | |
| மேற்படி ஸ்திரீக்கு | 75—80 | | |
| க்ஷீணபருவத்தில் | 70 | | |
| விருதாப்பியத்தில் | 75—80 | | |

---

## நிரோகியாயிருக்கையில் தேகத்தில் வாதம், பித்தம், சிலேஷ்மம் இவைகளிருக்கவேண்டிய அளவுகள் காண்க.

சரீரத்தில் சிலேஷ்மம் பங்கு 1, பித்தம் பங்கு 2, வாதம் பங்கு 4, இவ்விதமாய் இருக்குமாகில் ரோகமில்லை.

## நாடிகளின் சேர்க்கைகளாலுண்டாகும் ரோகங்கள் முதலியவைகளைக் காண்க.

| நாடிகளின் பெயர்கள். | நாடிகளின் குணங்கள். | ரோகங்களின் குணங்கள். | ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|
| வாதபித்தநாடி | பாரஞ்சுமந்து நடப்பதுபோல் நடக்கும். | வயிற்றுவலி, உப்பிசம், தாகம் | பாண்டு, காமாலை, மகோதரம், கிராமடல், முதலியவைகள். |
| வாதசிலேஷ்மநாடி | முறிந்த அரணைவால் துடிப்பதுபோல நடக்கும். | தலைவலி, கைகால் திமிருதல், வயிற்றுப்பொருமல். | சன்னி, மயக்கம், சோபை, பாண்டு, மூர்ச்சை, முதலியவைகள். |
| பித்தவாதநாடி | வீணை அடிப்பதுபோல் நடக்கும். | தேகவலி, எரிவு, நாக்கு, நெஞ்சு வறளல், நோவு. | பீநிசம், மூலம், வலிப்பு, பவுத்திரம், அடைப்பு, முதலியவைகள். |
| பித்தசிலேஷ்மநாடி | பிள்ளைத்தொட்டிலில்ஆடுவதுபோல நடக்கும். | வயிறுஉப்பல், பிதற்றல், கண் மஞ்சள் நிறமாயிருக்கும். | தலைசுற்றல், வயிற்றுவலி, பிடரிவலி, முதலியவைகள். |
| சிலேஷ்மவாதநாடி | புணர்ச்சிபோல் நடக்கும். | [illegible], தாகம். | ஜன்னி, தலைவலி, முதலியவைகள். |

| | | | |
|---|---|---|---|
| சிலேஷ்ம பித்தநாடி | வண்டிச்சக்கரம் சுழலுவது போல நடக்கும். | மண்டையிடி, காதுகேளாது, நாக்கு இனிப்பு. | ஜன்னி, முதலியவைகள். |
| அதிவாதநாடி | வாதநாடி அதிகமாக நடக்கும். | தேகநோவு, தேகபதற்றல், அன்னத்துவேஷம். | வாதரோகங்கள். |
| அதிபித்தநாடி | பித்தநாடி அதிகமாய் நடக்கும். | கிறுகிறுப்பு, பிதற்றல், சத்தி, இளைப்பு, தேகம் உலர்ந்து வீங்கும். | பித்தரோகங்கள். |
| அதிசிலேஷ்மநாடி | சிலேஷ்மநாடி அதிகமாய்நடக்கும். | உயிர்பிரியும். | ஜன்னி, சர்த்தியம். |
| வாதபித்தசிலேஷ்மநாடி | நாடி மூன்றும் படபடவென்று நடக்கும். | சன்னிக்குறிய விகாரங்கள். | ஜன்னி, முதலியவைகள், |

**1-வது அத்தியாயம் முற்றிற்று.**

## 2-வது அத்தியாயம்.

### பருவங்களின் வகுப்புகள் காண்க.

| நம்பர். | பருவங்கள். | | வருஷம். | |
|---|---|---|---|---|
| | | | முதல் | வரை |
| 1 | பாலயம் | (1) முலைப்பால் உண்ணும் பருவம் | பிறப்பு | 1 |
| | | (2) பால்குடிக்கும் பருவம் | 2 | 2 |
| | | (3) பாலயம் பருவம் | 3 | 15 |
| 2 | எவ்வனம் | (1) விருத்திபருவம் | 16 | 20 |
| | | (2) எவ்வனபருவம் | 21 | 30 |
| | | (3) சம்பூர்ணபருவம் | 31 | 40 |
| | | (4) க்ஷீண பருவம் | 41 | 70 |
| 3 | விருதாப்பியம் | | 71 | 100 |

### ஸ்திரீகள், புருஷர்கள் இவர்களின்பருவகாலங்கள்.

புருஷர்கள் 25-வது வயதிலும், ஸ்திரீகள் 16-வது வயதிலும், பருவ காலத்தை அடைவார்கள்.

### அவுஷதங்களின் அளவு நிர்ணியங்கள்.

இந்த புஸ்தகத்தில் ஒவ்வொருவேளைக்குக் கொடுக்கும்படிச் சொல்லிய மருந்தின் அளவு யவ்வனபருவமுடைய புருஷர்களுக்குத் தகுதியானது.

### மருந்துக்கொடுக்குமுன் கவனிக்கவேண்டியவைகள் காண்க.

நோயாளியின் (1) வயது, (2) வாதபித்தசிலேஷ்ம குணங்கள், (3) தேகபலம், (4) அப்பியாசம், (5) தொழில், (6) மலபாந்த,

(7) தேசத்தின் உஷ்ண சீதள ஸ்திதி, (8) புருஷனுக்கு இப்படி ஸ்திரிக்கு இப்படி என்னும் பேதம், (9) ரோகம் நிலைத்தகாலம், (10) தீபனம், (11) நாடிநடை, (12) தேகசுபாவம், இவைகளை அறிந்து மருந்தின் அளவை நிச்சியிக்கவேண்டியது.

---

## டாக்ட்டர்பெரிரு துரையானவர் ஒருவேளைக்குக் கொடுக்கும் மருந்துகளின் ஏர்ப்படுத்தின அளவைகாண்க. (Dr. Pereira)

| நோயாளின்வயது | ஒருஅவுன்ஸாகில். | ஒருதிராமாகில். | 20-கிறேன்ஸாகில். |
|---|---|---|---|
| மாதம் 1 வரை | திராம் ½ (𑿑) | கிறென் 3 | கிறென் 1 |
| ,, 3 ,, | —— | ,, 4 | —— |
| ,, 6 ,, | ஸ்குருபில் 2 | ,, 6 | ,, 2 |
| ,, 9 ,, | —— | ,, 7 | —— |
| வருஷம் 1 ,, | திராம் 1 | ,, 8 | ,, 3 |
| ,, 2 ,, | ,, 1½ (௧𑿑) | ,, 10 | ,, 4 |
| ,, 3 ,, | ,, 1½ (௧𑿑) | ,, 12 | ,, 4 |
| ,, 4 ,, | ,, 2 | ,, 15 | ,, 5 |
| ,, 5 ,, | ,, 2½ (௨𑿑) | ,, 13 | ,, 6 |
| ,, 6 ,, | ,, 3 | ,, 20 | ,, 7 |
| ,, 7 ,, | ,, 3½ (௩𑿑) | ,, 25 | ,, 8 |
| ,, 8 ,, | ,, 4 | ,, 30 | ,, 10 |
| ,, 10 ,, | ,, 4½ (௪𑿑) | ,, 35 | ,, 12 |
| ,, 12 ,, | ,, 5 | ,, 40 | ,, 14 |
| ,, 13 ,, | ,, 5½ (௫𑿑) | —— | ,, 15 |
| ,, 15 ,, | ,, 6 | ,, 45 | ,, 16 |
| ,, 18 ,, | ,, 6½ (௬𑿑) | —— | ,, 17 |
| ,, 20 ,, வரைக்கும். | ,, 7 | ,, 50 | ,, 18 |
| 21-முதல் 45 ,, | அவுன்ஸ் 1 | திராம் 1 | ,, 20 |
| 50 ,, | திராம் 7 | கிறென் 50 | ,, 18 |
| 60-முதல் 70 ,, | ,, 6 | ,, 45 | ,, 16 |
| 80-முதல் 90 ,, | ,, 5 | ,, 40 | ,, 14 |
| 100 ,, | ,, 4 | ,, 30 | ,, 10 |

## இப்புஸ்தகத்தில் ஒருதடவைக்குக் கொடுக்கும்படி சொல்லிய மருந்துகளின் அளவை வயதுக்குத்தக்கபடி பாகித்துக் கொடுக்க வேண்டியதைக் காண்க.

| வயது ஆரம்பம் முதல். | வயது முடியும் வரையில். | வயதுக்குத் தக்கபடி ஒருதடவைக்குக் கொடுக்கும் அளவின் பாகங்கள். |
|---|---|---|
| பிறப்பு. | 3 மாசம் | 16-ல் ஒருபாகம் ($\frac{1}{16}$) |
| 4-வது மாதம் | 1 வருஷம் | 12-ல் ஒருபாகம் ($\frac{1}{12}$) |
| 2-வது வருஷம் | 2 வருஷம் | 8-ல் ஒருபாகம் ($\frac{1}{8}$) |
| 3-வது ,, | 3 ,, | 6-ல ஒருபாகம் ($\frac{1}{6}$) |
| 4-வது ,, | 4 ,, | 4-ல் ஒருபாகம் ($\frac{1}{4}$) |
| 5-வது ,, | 7 ,, | 3-ல் ஒருபாகம் ([illegible]) |
| 8-வது ,, | 14 ,, | 2-ல் ஒருபாகம் ($\frac{1}{2}$) |
| 15-வது ,, | 20 ,, | 3-ல் இரண்டுபாகம் ($\frac{2}{3}$) |
| 21-வது ,, | 60 ,, | பூர்ணஅளவு (1) |

### அவுஷதங்களைச் சாப்பிட நல்லநாள்கள்.

மருந்துகள் தொடர்ச்சியாய் வெகுகாலம் சாப்பிடவேண்டியதாய் இருந்தால் அடியில்கண்ட நட்சத்திரங்களும் வாரங்களும் அநுசரித்து ஆரம்பிக்கவேண்டியது.

* ரேவதி, அசுவனி, புனர்வசு, பூசம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, திருவோண, அவிட்டம், சதயம், அனுஷம், மூலம், மிருகசீரிடம் இந்த நட்சத்திரங்களிலும், நாயிறு, வியாழம் இந்தவாரங்களிலும் மருந்தைச்சாப்பிடுவதற்கு ஆரம்பிக்கவேண்டியது.

* पौष्णद्वयेचादितिभद्वयेच हस्तत्रयेच श्रवणत्रयेच ॥
मैत्रेच मूलेच मृगेच शस्तं भैषज्यकर्म प्रवदंति सद्यः ॥

# 3-வது அத்தியாயம்.

## அடியில்கண்ட நிறைகளின்படியும், அளவுகளின் படியும், அவுஷதங்கள் நிறுக்கவும், அளக்கவும் வேண்டியது.

| அளவுகள். | நிறைகள். |
|---|---|
| ரசம் ஜலரூபமாயிருந்தபோதிலும் நிறுத்துக்கொள்ளவேண்டியது | 4 நெல்லிடை=1 குன்றிமணி |
| சுமார் 1½ (சஉ) துளி=1 மினிம் | 4 குன்றிமணி=1 பணவிடை |
| 60 மினிம்=1 ப்ளூயிட் திராம் | 2 குன்றிமணி = $\frac{1}{16}$ (பஉ) விராகனிடை |
| 8 திராம்=1 ப்ளூயிட் அவுன்ஸ் | 32 குன்றிமணி=1 விராகனிடை |
| 20 அவுன்ஸ்=1 பையிண்ட | 10 விராகனிடை=1 பலம்= 3 ரூபாயிடை |
| 8 பையிண்ட=1 காலன் | 8 பலம்=1 சேர்=24 ரூபாயிடை |
| 4 திராம்=1 டெபில்ஸ்பூண் | 5 சேர்=1 வீசை |
| 2 திராம்=1 டெஸர்ட்ஸ்பூண் | 8 வீசை=1 மணங்கு |
| 1 திராம்=1 டீஸ்பூண் | 20 மணங்கு=1 பாரம் |
| 6 அவுன்ஸ்=1 ஆழாக்கு | சுமார் ½ (உ) குன்றிமணி=1 கிறேன் |
| 4 ஆழாக்கு=சுமார் 1 புட்டி | 20 கிறேன்=1 ஸ்குருபில் |
| 8 ஆழாக்கு=1 படி | 3 ஸ்குருபில்=1 திராம் |
| 2 ஆழாக்கு=1 ஒழக்கு | 8 திராம்=1 அவுன்ஸ் |
| 2 ஒழக்கு=1 உரி | 12 அவுன்ஸ்=1 பவுண்டு |
| 2 உரி=1 படி | 1 ரூபாயிடை=3 திராம் |
| 2 படி=1 குருணி (மரக்கால்) | |
| 2 மரக்கால்=1 பதக்கு | **காலங்கள்.** |
| 2 பதக்கு=1 தூணி | 60 விநாடி (ஸெகண்டு)=1 நிமிஷம் (மினிட்டு) |
| 3 தூணி=1 கலம் | 60 நிமிஷம்=1 மணி (அவர்) |
| 1 காலன்=76800 மினிம் | 24 மணி=1 நாள் (டே) |
| 1 பையிண்ட=9600 மினிம் | 7 நாள்=1 வாரம் (வீக்) |
| 1 அவுன்ஸ்=480 மினிம் | 4 வாரம்=1 மாதம் (மன்த்) |
| 1 திராம்=60 மினிம் | 12 மாதம்=1 வருஷம் (இயர்) |
| 1 டேபில்ஸ்பூன்= சுமார் 240 மினிம் | 12 வருஷம்=1 மாமாங்கு |
| 1 டெஸர்ட்ஸ்பூன்=120 மினிம் | 48 நாள்=1 மண்டலம் |
| 1 டீஸ்பூன்=60 மினிம்=90 துளி | |

## 4-வது. அத்தியாயம்.

## மருந்துகளை குணங்களின்படி பலவகுப்புகளாக்கினது காண்க.

1. அங்காகர்ஷண நாசகாரிகள்—[Antisposmodics.] இசிவு ரோகங்களை தடுக்கும் மருந்துகள்.

2. ஆம்ல நாசகாரிகள்—[Antacids] வயிற்றிலுள்ள புளிப்பைக் கண்டிக்கும் மருந்துகள்.

3. உதரவாத ஹரகாரிகள்—[Carminatives] வயிற்றில் உஷ்ணஞ் செய்து வாயுவைக்கண்டிருக்கும் மருந்துகள்.

4. உச்சாகசகாரிகள்—[Stimulants] நாடி நடையும் சரீரத்தில் உஷ்ணத்தையும் அதிகரிக்கிற மருந்துகள்.

5. கபஹரகாரிகள்—[Expectorants] கபத்தை அதிகரித்து வெளியாக்கி, இருமலைநீக்கும் மருந்துகள்.

6. கிருமிநாஷ காரிகள்—[Anthelmintics] வயிற்றிலுள்ள நாக்குப்பூச்சிகளை வெளியாக்கும் மருந்துகள்.

7. ஸ்மிரிதிரோதகாரிகள்—[Anaesthetics] பிரக்ஞையில்லாமல் செய்து நோயைத் தெரிவிக்காமல் செய்யும் மருந்துகள்.

8. சமனகாரிகள்—[Sedatives] உஷ்ணிக்காமல் தாதுக்களின் கொதுப்பைத்தணித்து வேதனையைகுறைத்து நித்திரையை வரும்படிச் செய்யும் மருந்துகள்.

9. சீதளகாரிகள்—[Refrigerants] அதிகரித்திருக்கிற உஷ்ணத்தைத் தணித்து தாகத்தைஉண்டாக்காமல் செய்கிற மருந்துகள்.

10. சினிக்தகாரிகள்—[Demulcents] தாதுக்களின் எரிச்சலை குறைத்து அவைகளை துவளச்செய்யும் மருந்துகள்.

11. சுரஹரகாரிகள்—[Febrifuges] சுரத்தை நீக்கும மருந்துகள்.

12. சுவேதகாரிகள்—[Diaphoretics.] வியர்வையையுண்டாக்கும் மருந்துகள்.

13. சோபாநாசகாரிகள்—[Deobstruents] வீக்கம், கட்டி இவைகளைக் கரைக்கும் மருந்துகள்.

14. சோணகாரிகள்—[Rubefacients] மருந்து உபயோகித்தயிடத்தை சிவப்பாக்கி எரிச்சல், உஷ்ணம் இவைகளை உண்டாக்கிற மருந்துகள்.

15. தாருட்டியகாரிகள்—[Tonics] தேகத்திற்கு பலத்தையுண்டாக்கும் மருந்துகள்.

16. திரவகாரிகள்—[Sialogogues] எரிச்சலையுண்டாக்கும் மருந்துகள்.

17. துவக்ஸபோடகாரிகள்—[Vesicants] மருந்து போட்டவிடம் நீர்க்கொப்பளத்தை உண்டாக்கும் மருந்துகள்.

18. நஸ்யங்கள்—[Sternutatories] நாசிநீரை விருத்திசெய்யும் மருந்துகள்.

19. நித்திராகாரிகள்—[Narcotics] நோயைத்தணித்து நித்திரையையுண்டாக்கும் மருந்துகள்.

20. பிரசவகாரிகள்—[Parturifacients] பிரசோதவாயுவை அதிகரித்து கருப்பையை சுருங்கச்செய்யும் மருந்துகள்.

21. பித்தகாரிகள்—[Cholagogues] பித்த நீரை விருத்திசெய்யும் மருந்துகள்.

22. பூதி நாசகாரிகள்—[Disinfectants] சரீரத்தின் தாதுக்களை அழுகிப்போகாமல் தடுக்கிறமருந்துகள்.

23. மூத்திரவர்த்தனகாரிகள் —[Duiretics] மூத்திரத்தை அதிகமாக்கும் மருந்துகள்.

24. ரக்தஸ்தம்பனகாரிகள்—[Styptics] ரத்தத்தை அதிகரிக்காமல் நிறுத்தும்படிசெய்யும் மருந்துகள்.

25. ஜாடராக்கினி வர்த்தனகாரிகள்—[Stomachics] தீபனத்தை உண்டாக்கும் மருந்துகள்.

26. ருதுவர்த்தனகாரிகள் —[Emmenagogues] சுரோணிதத்தை வெளியாக்கி சுவாபீகஸ்திதியை உண்டாக்கும் மருந்துகள்.

27. வமனகாரிகள்—[Emetics]வாந்தியை ஆக்கும் மருந்துகள்.

28. விரேசனகாரிள்—[Cathartics] பேதியை உண்டாக்கும் மருந்துகள்.

29. விரணகாரிகள்—[Caustics] புண்ணாக்கும் கார மருந்துகள்.

30. விஷநாஷகாரிகள்—[Antidotes] விஷத்தை முறிக்கும் மருந்துகள்.

31. வியதாபேதகாரிகள்—[Alteratives] வியாதியைநாளுக்குநாள் குணமாக்கி சரீரத்தை ஆரோக்கிய ஸ்திதியில் கொண்டுவரும் மருந்துகள்.

32. வீரிய வர்த்தனகாரிகள்—[Aphrodisiacs] காமம், போகம் இவைகளை விருத்தியாக்கும் மருந்துகள்.

33. வேதனைசாந்தகாரிகள்—[Anodynes] நோவைத்தணிக்கும் மருந்துகள்.

34. ஜலவர்த்தனகாரிகள்—[Diluents] ரத்த நீரைவிருத்தியாக்கும் மருந்துகள்.

35. வீரியநாஷகாரிகள்—[Anaphrodisiacs.] காமம், போகம், இவைகளை க்ஷீணமாக்கும் மருந்துகள்.

36. ஹஸ்மரிஹரகாரிகள்—[Lithics] மூத்திரத்தில் கல்லைக்கரைத்தாவது அல்லது கல்லை உத்பத்தியாக்காமல் செய்யும் மருந்துகள்.

37. சங்கோசனகாரிகள்—[Astringents] சதை, நரம்புமுதலியவைகளை சுருங்கச்செய்யும் மருந்துகள்.

---

## 5-வது. அத்தியாயம்.

---

## காற்று—வாயு— (Air.)

காற்று பூமியிலிருந்து சுமார் 45 மைல் உயரம் அளாவி இருக்கின்றது. ஆக்ஸிஜென், நைட்ரோஜன், என்னும் இரண்டுவித வாயுகள் சேர்ந்து நமது பிராணனுக்கு ஆதாரமாகிய காற்று உண்டாயின. நூறுபங்கு காற்றில் 20 பங்கு ஆக்ஸிஜென் வாயுவும், 80 பங்கு நைட்ரோஜன் வாயுவும் இருக்கின்றன. காற்றில் வேறு சில வாயுகள் கலந்திருக்கும், அதாவது கார்போனிக் ஆஸிட், ஜலம்முதலியவைகளாம். காற்றோட்டம் இல்லாத இடத்தில் கும்பல் சேர்ந்திருந்தால் அவ்விடத்தில் கார்போனிக் ஆஸிட் அதிகமாயிருக்கும். இந்த வாயுவை ஆக்கிராணித்தால் இறந்துவிடுவார்கள். அழிந்துபோன பதார்த்தங்கள், சாக்கடைகள், எரிகிற விளக்குகள் முதலியவைகளிலும் இந்த வாயு ஜெனித்து காற்றில் சேர்ந்திருக்கும். காற்று இல்லாவிட்டால் சகலமும் நாஷமடையும்: காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென் வாயுதால் நமது பிராணனை நிலைபெற்றிருக்கின்றது.

---

## 6-வது. அத்தியாயம்.

---

## ஜலம்—(Water.)

சுத்தமான ஜலத்துக்கு வாசனை, நிறம், ருசி இவைகள் இல்லை, சாதாரணமாய் ஜலம் வாயுருபமாகிக் காற்றில் கலந்துவிடுகிறது. காற்றில் ஜலம் அதிகமாயிருந்தால் சீதளமாயும், குறைந்திருந்தால் உஷ்ணமாயும்

இருக்கும். குளிர்ந்தஜலத்தை மிதமாகச்சாப்பிட்டால் தாகத்தை அடக்கும், உஷ்ணத்தைத் தணிக்கும், திபனத்தை உண்டாக்கும், ரத்தநீரை சமரசப் படுத்தும். அதிகமாவது, போஜனம் செய்கிறதற்கு முன்னமேயாவது ஜலஞ்சாப்பிட்டால அக்கினிமந்தரோகங் காணும். மிதமாய் போஜனம் செய்யும்பொழுது சாப்பிட்டால் பதார்த்தங்களோடுச்சேர்ந்து மெத்த பிரயோஜனத்தைத் தரும். குளிர்ந்த ஜலஸ்தானம் தேகத்தை பலப்படுத்தும். ஆனால் பலஹீனர், கர்ப்பஸ்திரிகள், ரோகிகள், சிசுக்கள் இவர்கள் குளிர்ந்த ஜலத்தில்ஸ்தானஞ் செய்யக் கூடாது. குளிர்ந்தஜலத்தில் கார்பொனிக் அஸிடவும், ஆகாயமும் சேர்ந்திருப்பதால் இதற்கு ருசி உண்டு. ஜலத்தைக் காய்ச்சும்போது அதிலுள்ள இரண்டு வாயுக்களும் வெளியேபோக ருசியும் நீங்கிவிடுகிறது. வெந்நீர்ஸ்தானம் தேகத்தில் ரத்தத்தை பரவ செய்து சமரசப்படுத்தும், மாம்ஷதாதுக்களை தளர்ச்சிசெய்யும். வெந்நீர்குடிக்க சுரம், காசம், குன்மம், தலைவலி முதலியவைகளைத் தீரும். குடிக்கிற வெந்நீரின் உஷ்ணம் 100-டிக்கிரி இருக்கவேண்டியது.

---

## பற்பல ஜலங்களின் பெயர்களும் குணங்களும் காண்க.

| ஜலங்களின் பெயர்கள். | ஜலங்களின் குணங்கள். |
|---|---|
| ஆற்று ஜலம். | வாத பித்த சிலேஷ்மங்களாலுண்டாகும் பற்பலரோகங்கள் தீரும். |
| குளத்து ஜலம். | வாதம், மதுமூத்திரம், சீதளம் உண்டாக்கும். |
| ஏரி ஜலம். | வாதம் உண்டாகும். |
| கிணற்று ஜலம். | மயக்கம், வீக்கம், சுவாசம், பித்தந்தீரும். |
| ஊற்று ஜலம். | பித்தம், தாகந்தீரும். |
| பாறை ஜலம். | வாதம், சுரம் உண்டாக்கும். |
| சுக்கான் ஜலம். | நீர்எரிவு, கபம், பித்தம், உண்டாகும், வாதம் தீரும். |
| சமுத்திர ஜலம். | பீலிகம், குன்மம், குஷ்டம், உதரரோகம், கண்டமாலைத்தீரும். |

## 7-வது அத்தியாயம்.

### மருந்துகள் இவ்வளவு காலம் பிரயோகிக்கலாமென்பதையும், பத்தியங்களின் விதிகளையும், பத்தியபதார்த்தங்களையும் காண்க.

### மருந்துகள் பிரயோகிக்கும் காலம்

| மருந்துகளின் பெயர்கள். | காலம். | | மருந்துகளின் பெயர்கள். | காலம். | |
|---|---|---|---|---|---|
| | வருஷம். | மாதம். | | வருஷம். | மாதம். |
| பஸ்மங்கள். | 600 | ,, | வடகங்கள். | ,, | 3 |
| செந்தூரங்கள். | 500 | ,, | கிருதங்கள். | ,, | 2 |
| கட்டுவகைகள். | 100 | ,, | ஷர்பத்துகள். | ,, | 1 |
| திராவகங்கள். | 50 | ,, | மெழுகுகள். | 1 | ,, |
| ரசாயனங்கள். | 1 | ,, | தாதுவர்க்க மாத்திரைகள். | 100 | ,, |
| தைலங்கள். | ,, | 9 | தாவரவர்க்க மாத்திரைகள். | 2 | ,, |
| லேகியங்கள். | ,, | 8 | பிளாஸ்திரிகள். | ,, | 10 |
| பாவனங்கள். | 1 | ,, | தூபசூரணங்கள். | 1 | ,, |
| ஹால்வாகள். | ,, | ½ | லேபனபில்லைகள். | 3 | ,, |

### பத்திய விதிகள்.

**இச்சாபத்தியம்**— முள்ளுள்ள பாகல்காய், மாங்காய், கத்திரிக்காய், கொத்தவரைக்காய், வெள்ளைப்பூசினிக்காய், அகத்திக்கீரை, கடுகு, எள்ளு, மந்தவகைப்பதார்த்தங்கள் நீக்கி உண்பதாம்.

**உப்பில்லாபத்தியம்**— இந்த பத்தியம் வைத்தநாளும் மறுபத்தியமிருந்து பின்னுளில் உப்பு வறுத்துக்கூட்டி, அதற்கு பின்னுல் முறையே ஓமப்பாலிட்டு முழுகி புளிசேர்த்து பசுநெய்யை தேய்த்து ஸ்நானஞ்செய்யவும்.

---

## பத்தியபதார்த்தங்கள்.

புடலம்பிஞ்சி, அகத்திப்பிஞ்சி, அவரைப்பிஞ்சி, ஆடாதோடைக்காய், அறுக்கீரை, கத்திரிப்பிஞ்சி, துவரை, கோதுமை, சிறுப்பயறு, சிறுக்கீரை, தூதுளை, வசலே, பழம்புளி, பீர்க்கம்பிஞ்சி, புதியநெய், பெருங்காயம், பொன்னுங்காணி, மணத்தங்காளி, மாங்காய்ப்பருப்பு, மாங்காய்வடுவு, முருங்கைப்பிஞ்சி, முன்னை, வாழைப்பிஞ்சி, வாழைப்பூ, வெண்டைப்பிஞ்சி, வெள்ளுள்ளி, வேளை, இவைகளும்; ஜீலவர்க்கங்களில் ஊர்க்குருவி, உடம்பு, உள்ளான், கவுதாரி, காடை, கோழிக்குஞ்சு, முசல், மான், வெள்ளாடு, கச்சைக்கருவாடு, காரைப்பொடி, ஓலைவாளைச்சரகு, குரவை, சுறு, கிழங்கான், சென்னுக்கூனி, திருக்கை, வரால், வெள்ளரு, நெத்திலி, சுதும்பு, இவைகளும்; ஊருகாய்களில், இஞ்சி, கடுக்காய், எலுமிச்சங்காய், களாக்காய், நார்த்தங்காய், மாிமாங்காய், நெல்லிக்காய், மாம்பிஞ்சி இவைகளும்; பழவகைகளில், திராக்ஷை, ஆல்பகோரா, கிச்சிலி, மாதுளம், பேயன்வாழை இவைகளும்; துவயல்களில் பிரண்டை, புளியாரை, வேப்பம்பூ, பொதினு, பச்சைக்கொத்தமல்லி, நாய்க்கடுகு, துவரம்பருப்பு, பச்சைப்பருப்பு, இவைகளும் பத்தியத்துக்குத் தகுதியானது.

---

## 8–வது அத்தியாயம்.

---

## தாது, தாவர வர்க்க பதார்த்தங்களின் சுத்திகள் காண்க.

1. **சுவர்ணம்**—தங்கத்தகடுகளுக்கு செம்மண்ணுல் ஒவ்வொருதடவையும் லேபனஞ்செய்து நெருப்பைப்போல் பத்துதடவை காய்ச்சினுல் சுத்தியாகும்.

2. **ரஜதம்**—வெள்ளித்தகடுகளைக்காய்ச்சி பழுப்பாகல் கிழங்குச்சாற்றில் ஏழுதடவை தவைத்தால் சுத்தியாகும்.

3. **பவளம்**—எலுமிச்சம்பழச்சாற்றில் ஒருநாள் ஊறவைத்து மறுநாள் வெந்நீரால் கழுவசுத்தியாகும்.

4. **வெள்ளைப்பாஷாணம்**—எருக்கம்பாலிலும், எலுமிச்சம்பழச்சாற்றிலும் முறைய ஒவ்வொருநாள் ஊறவைத்து பிறகு எடுத்துக்காடியில் கழுவி, பெருகன்கிழங்கு ஒன்றில் போதுமான பள்ளம்செய்து அதில் அந்த பாஷாணத்தை வைத்து அதின்மேரில தெழகிழங்கின் அறுத்தத்துண்டுகளை வைத்துமூடி அதற்கு சாணித்தடவி உலர்த்தி, அந்த கிழங்கை பாதி எரியும்படியாய் எரித்து எடுத்துக்கொள்ள சுத்தியாகும்.

5. **ரசம்**—ஒரு விதை நீக்கினமொளாக வில் ரசத்தைப்போட்டு நாலு விரற்கடை கனத்தில் கோவைமிலையால் அதைச்சுற்றி ஏழு சீலை மண் வலுவாய் செய்து குக்குடம்புடம் போட்டு எடுத்துக்கொள்ள சுத்தியாகும்.

6. **காந்தம்**—பொற்றல் கையாந்தகரைச்சாற்றில் 21 தடவை காந்தத்தை குகையில் வைத்து உருக்கி ஊறற சுத்தியாகும்.

7. **தாளகம்**—பெரும் பூசினிக்காய்ச் சாற்றில் 2 ஜாமம் வேகவைத்து எடுத்து சுண்ணாம்புக் கல்லுச்குள் 100 தடவை நீற்றி, நல்லெண்ணெயில் 2 ஜாமம் பொரித்துயெடுக்க சுத்தியாகும். தண்ணீரும் கூட்டு இல்லையோ அவியும்

8. **கர்ப்பூரசலாசத்து**—பசும்பாலில்போட்டு காய்ச்சி எடுக்க சுத்தியாகும்.

9. **முத்து**—சங்கம்பழச்சாற்றில் 2 நாள் ஊறவைத்து எடுக்க சுத்தியாகும்.

10. **காரீயம்**—நல்லெண்ணெய், கோமூத்திரம், புளித்தமோர், புளித்தத்தண்ணீர், கொள்ளுவேகவைத்த ஜலம், எருக்கம்பால், வெள்ளாட்டுப்பால் இவைகளில் ஒவ்வொன்றிலும் காரீயத்தை 21 தடவை உருக்கிஊற்றினால் சுத்தியாகும்.

11. **கந்தகம்**—ஒரு புதுகலயத்தில் 2 சேர் பசும்பாலிட்டு சுத்த வஸ்திரத்தினால் வாயைக்கட்டி அதின்மேல் கந்தகம் பொடித்துப் போட்டு அதின்மேல் அகலால் மூடி சீலைமண்செய்து 10 எருவில் தாலிப்போட மேற்படி கந்தகம் மணிகளாக பாலில் இறங்கும். இவைகளை ஜலத்தால்கழுவினால் சுத்தியாகும்.

12. **நாவி**—எருமைமூத்திரத்தில் ஒரு நாள் ஊறவைத்து, பிறகு வேகவைத்துக் கழுவி, உலர்த்தி, பிறகு எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து உலர்த்திக்கொள்ள சுத்தியாகும்.

13. **அப்பிரகம்**— (1) அப்பிரகத்தை துண்டுகளாக்கி அவைகளை ஒரு கட்டாகக்கட்டி, அதற்கு கோவையிலையை நாலு விரற்கடை கனத்தில் சுற்றி ஏழு சீலைமண்செய்து குக்குடம் புடம்போட சுத்தியாகும்.

(2) அப்பிரகத்தை புளித்தமோரில் 3 நாள் ஊறவைத்து, பிறகு உரலில் போட்டு பொடியாக்கி மறுபடியும் புளித்தத் தண்ணீரில் 3 நாள் ஊறவைத்து வடித்து ஜலத்தால் கழுவி உலர்த்திக்கொள்ளச் சுத்தியாகும்.

14. **அயம்**—இரும்பின் அரப்பொடியை எலுமிச்சம்பழச்சாறு, காடி, நாட்டுக் காட்டாமணக்குப்பால் இவைகளில் ஒவ்வொன்றிலும் 3 நாள் ஊறவைத்து எடுக்க சுத்தியாகும்.

15. **மண்டூரம்**—வெள்ளாட்டுநீர், கோமூத்திரம், இவைகளில் ஒவ்வொன்றிலும் மண்டூரத்தை 3 நாள் ஊறவைத்து எடுக்க சுத்தியாகும்.

16. **நாகம்**—இலுப்பை நெய்யில் நாகத்தை 10 தடவை உருக்கி ஊற்ற சுத்தியாகும்.

17. **மான் கொம்பு**—மான் கொம்பைக் கத்தியால் சீவி குப்பைமேனிச்சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து எடுக்க சுத்தியாகும்.

18. **ரசகர்ப்பூரம்**— (1) ஒருபலம் ரசகர்ப்பூரத்திற்கு ¼ (வ) பலம் வெள்ளைப்பூண்டுத் தயிலமும், கோழிமுட்டைத்தயிலமும் சுருக்குக்கொடுக்க சுத்தியாகும்.

(2) ரசகர்ப்பூரத்தை முலைப்பாலில் 10 நாள் ஊறவைத்து யெடுக்க சுத்தியாகும்.

(3) ரசகர்ப்பூரத்துக்கு ஆதளம்பால், முலைப்பால், எலுமிச்சம்பழச்சாறு, வாழைப்பழச்சாறு இவைகளால் வகைக்கு ஒருசாமம் சுருக்குக் கொடுக்க சுத்தியாகும்.

☞ இதை பலவிதங்களாகச் சுத்திசெய்வார்கள்.

19. **வெள்ளீயம்**—நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய், எலுமிச்பழச்சாறு இவைகள் வகைக்கு சேர் 12, வெவ்வேறாக பாத்திரங்களில்போட்டு, வெள்ளீயத்தை ஒவ்வொன்றிலும் 21 தடவை உருக்கி வார்க்க சுத்தியாகும். இவ்விதமாகக் **காரீயத்தையுஞ் சுத்திசெய்யலாம்.**

20. **அமுக்கிராக்கிழங்கு**—இதை பசும்பாலில் வேகவைத்து உலர்த்திக்கொள்ள சுத்தியாகும்.

21. **கஞ்சா**— (1) இதை ஜலத்தில் 12 மணி ஊறவைத்துக் கசக்கி புதுஜலத்தில் 5 தடவை கழுவவும். இவ்விதமாக 3 தடவை செய்து உலர்த்திக்கொள்ள சுத்தியாகும்.

(2) நாசுக சரீரமுடையவர்களுக்கு கஞ்சாவை மேல்சொல்லியபடி சுத்திசெய்து பலம் 1 தூக்கி 5 சேர் பசும்பாலில் போட்டுக் காய்ச்சி உறைக்குத்தி வெண்ணெயை எடுத்து உருக்கி நெய்யாக்கி உபயோகிக்கிறார்கள்.

22. **சாதிக்காய்**— (1) இதை நாலாக நறுக்கி நெய்யால் வறுக்க சுத்தியாகும்.

(2) இதற்கு நெய்யைத்தடவி ஒரு பெரிய ஊசியில் குத்தி நெய்யாலெரியும் தீபத்தில் பிடித்து வெடிக்கும்போது எடுக்க சுத்தியாகும்.

23. **நேர்வாளம்**—இதின் சுத்தி பலவகைகளாக செய்வார்கள். ஒவ்வொரு நேர்வாள கொட்டைக்கு எருமைச்சாணியால் கனமாகக் கவசமிட்டு நெருப்பில் போட்டு வேகவைத்து எடுக்க நல்ல சுத்தியாகும்.

24. **தாம்பிரம்**—நாகூர் சேர்ந்த நாட்டுக்காட்டாமணக்கு அடிமரத்துப் பாலில் 3 நாள் ஊறப்போட்டு பிறகு புளியாரைச்சாற்றில் [illegible] தை நனைத்து நனைத்து உருவின அரப்பொடியை புளியாரைச்சாற்றில் 11 நாள் ஊறப்போட்டு எடுக்க சுத்தியாகும்.

25. **வெடியுப்பு**—4 பவுண்டு உப்பை 2 பயிண்ட வெந்நீரில் கரைத்து குளிரவைத்துக் துளாவினால் உப்பைக் கட்டும்; பிறகு ஜலத்தை வடித்து 3 பயிண்ட குளிர்ந்த ஆவிநீர் விட்டு உப்பைக்கழுவி அடுப்பில்வைத்து உலர்த்திக்கொள்ள சுத்தியாகும்.

26. **கர்ப்பூரம்**—ஒரு பீங்கானின் வாயைப் பட்டுவஸ்திரத்தால் கட்டி அதின்மேல் சூடக்கர்ப்பூரம் பொடித்துப் போட்டு அதின்மேல் ஒரு தாம்பிரத் தட்டில் நெருப்பைப்போட்டுவைத்து புகையை வெளிப்போகாமல் செய்ய கர்ப்பூரம் உருகி பீங்கானில் விழும்; இவ்விதமாகவே 2-தடவை செய்ய சுத்தியாகும்.

27. **வாதுமைபருப்பு**—இதை சுத்த ஜலத்தில் 1-2 மணி ஊறவைத்து மேல்தோலை நீக்க சுத்தியாகும்.

28. **நவச்சாரம்**—2 வீசை நவச்சாரத்தை கொதிக்கிற வெந்நீரில் கரைத்து வடிகட்டி குளிரவைத்து பிறகு ஒரு அகலமான பாத்திரத்தில் ஊற்றி வெய்யிலில் வைத்தால் உப்பைக் கட்டும்; அதை எடுத்துக்கொள்ள சுத்தியாகும்.

29. **சீமைச்சுண்ணாம்பு**—தேவையான சுண்ணாம்பை கல்வத்திலிட்டு ஜலத்தாலரைத்து ஜலம் நிறைந்த குடத்திற் கலக்கித் தெளியவைத்து

பால்போலிருக்கிற ஜலத்தை வேறொரு பாத்திரத்தில் ஊற்றி மிதந்துக்கொண்டிருக்கும் சன்னப்பொடிகளை அடியில் படியும்படி செய்துக்கொள்ளவும். முன்பாத்திரத்தில் படிந்துவிட்டதையும் இவ்விதமாய்ச்செய்து வடிகட்டி சன்னப்பொடியைச் சேகரித்து உலர்த்திக்கொள்ள சுத்தியாகும்.

30. **சேங்கொட்டை**—சேங்கொட்டைகளை துண்டுகளாக்கி நெய் அல்லது ஆமணக்கெண்ணெய்யில் போட்டு வறுத்து எடுக்க சுத்தியாகும்.

---

## 9-வது அத்தியாயம்.

---

### எரிப்புத்திட்டம், புடத்திட்டம், ஊதுத்திட்டம், இவைகளைக்காண்க.

#### எரிப்புத்திட்டம்.

| எரிப்பின் பெயர்கள். | 2 விரல் கன விறகு. |
|---|---|
| தீபாக்கினி | 1 |
| கமலாக்கினி | 3 |
| காடாக்கினி | 4—5 |

#### ஊதுத்திட்டம்.

| ஊதின் பெயர்கள். | துருத்தி |
|---|---|
| கண்ணம் | 1 |
| உருக்கு | 2 |
| சத்து | 4 |

#### புடத்திட்டம்.

| புடத்தின் பெயர்கள். | ஒரு பலம் இடையுள்ள எரு. |
|---|---|
| காடைபுடம். | 1—2 |
| கவுதாரிபுடம். | 3 |
| குக்குடம்புடம். | 10 |
| வராகபுடம். | 50 |
| கெஜபுடம். | 100 |
| கனபுடம். | 1000 |

## 10-வது அத்தியாயம்.

## சில அவுஷதங்கள் ஒன்றோடொன்று சேர்ப்பதில் அவைகளின் குணங்களை மாறிக்கெட்டுப்போவதால், அவுஷத பதார்த்தங்களும் அவைகளுக்கு சத்துரு அவுஷத பதார்த்தங்களும் சொல்லப்படும்.

| பதார்த்தங்களின் பெயர்கள். | சத்துரு பதார்த்தங்களின் பெயர்கள். Incompatibles. |
|---|---|
| கறி உபபுத் திராவகம் (Hydrochloric Acid) | வெள்ளி, ஈயம் இவைகளின் உப்பு இனங்களாம். |
| பொட்டிலுப்புத் திராவகம் Nitric Acid) | உப்பு இனங்கள், செந்தூரங்கள், அன்னபேதி, வங்கஉப்பு, அல்கொஹால். |
| கந்தகத் திராவகம் (Sulphric Acid) | உப்பு இனங்கள், சுண்ணும்பு, வங்க உப்பு இவைகளாம். |
| வாந்தி உப்பு (Tartar Emetic) | உப்புகள், திராவகங்கள், சுண்ணும்பு, வங்க உப்பு, ஷின்கொனு, காசிக்கட்டி. |
| ரஸபஸ்மம் (Calomel) | வங்க உப்பு, நவக்ஷாரம், சுண்ணும்பு, லோகத்திராவகம்; நாகம், தாம்பிரம், அயம் முதலியவைகளின் உப்புகளாம். |
| செவ்வீரம்-வீரம் (Hydrargyri Bichloridum) | சவுக்காரம், சுண்ணும்புத் தண்ணீர், காடிக்காரம், வாந்தி உப்பு, வங்க உப்பு, ஐயோடைட் ஆப் பொட்டாஸியம், கசப்பு, துவர்ப்பு கசாயங்கள். |
| காடிக்காரம் (Lunar Caustic) | சந்தகத்திராவகம், கறி உப்புத் திராவகம், உப்புகள், சுண்ணும்புஜலம், ஆற்று ஜலம், கிணற்று ஜலம், வெள்ளைக்கரு, பால், துவர்ப்புக் கசாயங்கள். |
| அபினி (Opium) | கார உப்புகள், துவர்ப்புப் பாதார்த்தங்கள், சுண்ணும்பு ஜலம், வீரம், அன்னபேதி, காடிக்காரம், மயில் துத்தம், பால் துத்தம். |

| | |
|---|---|
| டார்டாரிக் ஆஸிட் (Tartaric-acid) | உப்புகள், வங்கம், சுண்ணாம்புஜலம், இவைகளாம். |
| விளாம்பிசின் (Gum Arabic) | சாராயம், வங்க உப்பு, அயத்திராவகம் இவைகளாம். |
| காசிக்கட்டி (Catechu) | மார்பிய, உப்புகள், படிக்காரம், வெடி உப்பு, சுண்ணாம்பு, இபிக்காக், வெள்ளைச்கரு இவைகளாம். |
| சின்கொனு (Cinchona) | சுண்ணாம்புத்தண்ணீர், அம்மோனியா, பொட்டாஷ், வாந்தி உப்பு, வங்க உப்பு, வீரம், காடிக்காரம், மாசிக்காய். |
| அமோனியா பொரோமைட் (Ammonia Bromide) | அசிட், அசிட் உப்புகள், நைட்டர்ஸ் ஸ்பிரிட் ஈதர். |
| அமொனியா கார்பொனெட் (Ammonia corbonate) | சுண்ணாம்பு, அசிட், அசிட் உப்புகள். |
| அஞ்சனக்கல் பஸ்மம் (Antimonial Powder) | உப்பு இனங்கள், வங்க உப்பு, துவர்ப்பு அசிட்கள், சங்கோசனகாரிகள். |
| பெல்லடொனு (Belladona) | உப்பு இனங்கள், அபினி, எட்டிக்கொட்டை. |
| டிஜிடெலிஸ் (Digitalis) | அயம், வங்கம், இவைகளின் உப்புகள் துவர்ப்பு அசிட்கள், சங்கோசன காரிகள். |
| பொட்டாஸியம் பொரோமைட் (Pottasium Bromide) | அசிட்கள், தாதுவர்க்கப் பதார்த்தங்களின் உப்புகள். |
| ஸ்பிரிட் நைட்டர்ஸ் ஈதர் (Spirit Nitrous Ether) | அன்னபேதி, உப்புகள், கார்பொனெட்ஸ்கள், அமொனியா பொரொமைட், துவாசிகம், ஐயொடைட் ஆப் பொட்டாஸியம். |
| விலிரிநெட் ஆப் ஜிங்க (Velerianate of zinc) | தாவரசசொசனகாரிகள், அசிட்கள், தாதுவர்க்க உப்புகள். |
| வங்கஉப்பு (Suger of Lead) | கறிஉப்புத்திராவகம், கந்தகத்திராவகம், எலுமிச்சம்பழ ரசம், டார்டாரிக் ஆசிட், சீமை சுண்ணாம்பு, பொட்டாஸ், லைக்கர் அம்மொனிய அசிடெட்ஸ். |

## 11-வது அத்தியாயம்.

### அவுஷதபதார்த்தங்களை விஷமிக்கும்படிச்சாப்பிட்டவர்களுக்கு முறிவு அவுஷத பதார்த்தங்களை உடனே கொடுத்து அனுகூலப்படுத்த வேண்டியதற்காக அவைகளை சொல்லப்படும்.

| விஷமிக்கும்படிச் சாப்பிட்ட பதார்த்தங்களின் பெயர்கள். | முறிவு பதார்த்தங்கள். (Antidotes.) |
|---|---|
| கஞ்சா (Hemp) | புளியைக்கரைத்த ஜலம், எலுமிச்சம்பழச்சாறு, வாழைமட்டைச்சாறு, காடி. |
| கந்தகத்திராவகம் (Sulphric Acid) | காந்தமண் பஸ்மம், சவுகாரம், ஜலவைர்த்தன காரிகள், சினிக்த காரிகள். |
| திமூறுகல் பாஷாணத்திராவகம் (Phosphoric Acid) | ஷை ஷை |
| வெடிஉப்புத்திராவகம் (Nitric Acid) | சீமைச்சுண்ணாப்பு, சவுட்டுப்பு, மரவுப்பு, இவைகளின் சம்மந்தமான உப்புகள். சவுகாரம், காந்தமண் பஸ்மம். |
| கறிவுப்புத்திராவகம் (Hydrochloric Acid) | காந்தமண் பஸ்மம், சவுகாரம், பைகார்பொனெட் ஆப் சோடா, பொட்டாஷ், பால், சினிக்த காரிகள். |
| நவக்ஷார ஜயநீர் (Liquor ammonia) | சிமைக்காடி, எலுமிச்சம்பழச்சாறு, தாவரபதார்த்தங்களின் திராவகங்கள். |
| லைகர்பொடாஸ்ஸி (Liquor Potash) | எண்ணெய், காடி, எலுமிச்சபழரசம். |
| கார்போனெட் ஆப் பொடாஸ் (Carbonate of Potash) | ஷை ஷை |
| கார்போனெட் ஆப் சோடா (Carbonate of Soda) | ஷை ஷை |

| | |
|---|---|
| வெடியுப்பு (Nitric Polash) | வாந்திக்குக் கொடுத்து வெளியாக்கவும், எரிச்சலைத் தணிக்கவும், வயிற்றின் புண்ணை ஆற்றவும் வேண்டியது. |
| வெங்கஉட்ட (Sugar of Lead) | பால்த்துத்தத்தை வாந்திக்குக் கொடுத்து வெளியாக்கி சீமை இந்துப்பு, பாஸ்பேட் ஆப் ஸோடா (Phosphote of Soda) கொடுக்கவும். |
| எட்டிகொட்டை (Nux Vonica) | கொளோரல் ஹைடரஸ் (Chloral Hydras) |
| வீரம்-சவ்வீரம் (Hydrargyri Bichloridum) | முட்டையின் வெள்ளைக்கருவைக் கொடுத்து உடனே மாசிக்காய், சாசிக்கட்டி, இவைகளின் கஷாயங்களைக்கொடுக்கவும். |
| டிஜிடேலிஸ் (Digitalis) | வாந்திக்குக் கொடுத்து வெளியாக்கி, மாசிக்காய் கசாயம், தேயிலைத்தண்ணீர், லைகர் அம்மோனியா, பிராந்தி, ஒயின் கொடுக்கவும். |
| பெல்லடோனா (Belladona) | வாந்திக்கும், பேதிக்கும், கொடுக்கவும், துவர்ப்புக்கசாயங்கள் கொடுத்து தலைக்கு குளிர்ந்த ஜலம் விடவேண்டியது. |
| ஐயோடைன் (Iodine) | வயிற்றிலிருக்கும் விஷத்தை வெளியாக்கவேண்டியது. வெளியாக்குவதற்கு முன்னும் பின்னும் கஞ்சியை வேண்டிய மட்டும் கொடுக்கவும். தாபனத்தை சமனப்படுத்தவும். |
| கொளோரைன் (Chlorine | காந்தமண்பன்மம், சீமைச்சுண்ணாம்பு, சவுகாரம், வெள்ளைக்கரு, பால் இவைகள் கொடுக்கலாம். |
| ஐயோடைட் ஆப் பொட்டாசியம் (Iodide of Potossium) | வயிற்றிலுள்ளவிஷத்தைவெளியாக்கி, சினிக்த காரிகள் கொடுக்கவும், தாபனத்தை சமனப்படுத்தவும். |
| கோனியம் (Conium) | லைகர் அம்மோனியா கொடுக்கவும். |
| வெள்ளைப்பாஷாணம் (White Arsenic) | வாந்திக்குக் கொடுத்து வெளியாக்கவும். பாலாவது கஞ்சியாவது வாந்திக்குக் கொடுக்கும் முன்னும் பின்னும் கொடுக்க |

| | |
|---|---|
| | லாம் ; காந்தமண் பஸ்மமும், கரித்தூளும் விசேஷமாகக் கொடுக்கலாம். பாஷாணத்தை வெளியாக்கின பிறகு தாபனத்தை சமனப்படுத்தவும், மூத்திரத்தை அதிகரிக்கவும், மலமிறங்கும்படி அபினியைக் கொடுத்து ஆமணக்கெண்ணெய்யை அடிக்கடி கொடுக்கவும். |
| காடிக்காரம் (Lunar Caustic) | கறியுப்பைக்கொடுக்க முறித்துவிடும். விஷத்தை வெளியாக்கி பால், வெள்ளைக்கரு, முதலிய குழகுழப்பான பதார்த்தங்களைக் கொடுக்கவும். |
| அபினி (Opium) | பாலத்துத்தம், உப்பு, கடுகு, எதையாகிலும் கொடுத்து வாந்தியாகும்படிச் செய்யவேண்டியது. கருவியை (Stomach Pump) உபயோகித்தாவது வாந்தியாக்கவேண்டியது. நித்திரை போகவொட்டாமல் செய்யவும். அக்கிராண உப்பை முகரவைக்கலாம். குளிர்ந்தஜலத்தை சிரசிலூற்றவேண்டியது. துவர்ப்புக்கஷாயங்கள் கொடுக்கலாம். உஷ்ணமாக்க காப்பி, பிராந்தி, அம்மோனியாக் கொடுக்கவும். கடுகை அரைத்து துணியின்மேல் தடவி பாதங்களுக்குப் போடவும். |
| ஹைட்ரோசையானிக்ஆஸிட் (Hydrocyanic Acid) | இதற்கு சிகிச்சைசெய்ய நேரம் இராது. குளிர்ந்த ஜலம் சிரசிலும், முதுகிலும் ஊற்றவும். அக்கிராண உப்பை முகரவைக்கவும். நவக்ஷாரஜெயநீரை உள்ளுக்கும் மேலுக்கும் உபயோகிக்கவும். குளோரின் வாட்டர் (Chlorine water) 1-2 தேயிலைக்கரண்டிவீதம் கொடுக்கவும். வாயில் ஊதி சுவாசத்தை உச்சாகப்படுத்தவும். ஒரு அவுன்ஸ் ஜலத்தில் 10 கிறேன்ஸ் அன்னபேதியும் கொஞ்சம் அயத்திராவகமுஞ் சேர்த்துக்கொள்ளவும். வேறொரு ஏனத்தில் 1-2 அவுன்ஸ் ஜலமிட்டு அதில் 2 கிறேன்ஸ் கார்போனேட் ஆப் சோடாவைக்கரைத்து உள்ளுக்குக் கொடுத்து உடனே அயம் அன்னபேதி சேர்ந்த மிக்சர் கொடுக்கவும். இது டாக்டர் ஸ்மித் என்பவருடைய முறை. |

## 12-வது அத்தியாயம்.

அவுஷதபதார்த்தங்களின் குணங்கள், செய்கைகள் முதலியவைகள் நமக்குத்தெரியாவிடில் ரோகங்களுக்குத் தக்கபடி பதார்த்தங்களைச் சேர்க்கவும், லேகியம், தயிலம் முதலியவைகளை செய்யும்பொழுது சிலபதார்த்தங்கள் கிடைக்காமலும், சிலதுரோகிகளுக்கு ஏற்றுக்கொள்ளாமலும், அவைகளுக்குப்பதிலாக அந்த செய்கைகளையுடைய வேறுபதார்த்தங்களைச்சேர்க்க நமக்குத் தெரியாதாகையால் அவைகளை சொல்லப்படும்.

### ※ பச்சை தாவரவர்க்க பதார்த்தங்கள்.

மூங்கில்:— (இலை) பிரசவகாலத்தில் வழிவராநின்ற அழுக்கைநீக்கும்.

சிற்றுழா :— (இலை) ரத்தமூலம், சீதமூலம், தீரும்.

கருவேப்பிலை-கறியபிலை :— (இலை) உஷ்ணகாரி, மலகாரி, ஜாடராக்கினிவர்த்தனகாரி—சிதபேதி, சுரம், அரோசகம் குணமாகும்.

பசுமுன்னை-நறுமுன்னை :— (இலை) மந்தாக்கினி, வாதம் தீரும்.

அகத்தி :— (இலை) மலகாரி— மலத்தைக்கழிக்கும், பித்தத்தைத்தணிக்கும். (பட்டை) பலகாரி—பலத்தையுண்டாக்கும்.

முருங்கை :— (இலை) சிரசுதாபனம், மூர்ச்சை, உள்சூடு குணமாகும். (பட்டை) வாதம் (80), வலிப்பு குணமாகும். (வேர் பட்டை) சந்நிபாதசுரம், கபரோகம் குணமாகும். (பிசின்) குஷ்டம், அதிமூத்திரம் குணமாகும். (விதை) விந்தைத்தடிப்பாக்கும். (காய) கபரோகம் குணமாகும்; விந்துவூறும்.

புளியம் :— (இலை) பாண்டு, கண்ணோவு குணமாகும். (பட்டை) தீபனகாரி பித்தகாரி—குன்மம் (8), அதிசாரம் (6), சுரம், அஜீரணம் குணமாகும்.

கருவேல் :— (இலை) பாஷாணவேகத்தைத் தணிக்கும், கண்ணோவுந் தீரும். (பட்டை) சுரம், பித்தம், ரசவேக்காடு, ரணம், நாக்குப்புண் தீரும். (பிசின்) சுக்கிலத்தை தடிப்பாக்கும், சிம்பிரமேகந்தீரும். (வேர்) மகாவாதம், அதிசாரம், மந்தாக்கினி, ரத்தகடுப்பு குணமாகும்.

---

* உலர்ந்த தாவரவர்க்க அவுஷதபதார்த்தங்களின் குணங்கள், செய்கைகள் முதலியவைகளை 14-வது அத்தியாயத்தில் சொல்லப்படும்.

மரிய:— (இலை) சீதபேதி, அதிசாரம், வாந்தி குணமாகும்.

அத்தி:— (பட்டை) சங்கோஷணகாரி—சீதபேதி, புண், பெரும்பாடு, ரத்தமூத்திரம், தீரும். (விதை) மலகாரி—ரணம், பிரமேகம் தீரும். பாயிசஞ்செய்துச்சாப்பிட மலம் இறங்கும். (பிஞ்சி) ரத்தமூலம், மூலவாயு, கிரகணித் தீரும். (பால்) வெண்ணெயில் கலந்து ரத்தபேதி நீரிழிவு, இவைகளுக்குக் கொடுக்க நல்ல மருந்து. (சுள்ளு) பலகாரி, வியதாபேதகாரி—மேகம், பித்தமயக்கம் தீரும்.

நாவல்:— (பட்டை) வாய்ரோகம், கபரோகம் தீரும். (வேர்) சீதபேதி, சுரம், அதிமூத்திரம் தீரும்.

பெருமரம்:— (பட்டை) உதரரோகம், அதிசாரம், கிரகணி, வாதம்தீரும்.

எருக்கம்:— (பட்டை) வாதம் (80), சந்நிபாதம் (13), விஷம் தீரும். (பால்) எலி பாம்பு விஷங்கள், கிருமி, குஷ்டம், சிலேஷ்மம், வாதம் தீரும்.

மாவலிங்கம்:— (பட்டை) வாதம் (80), சன்னி (13), அஸ்மரித்தீரும்.

கிளியூரம்:— (பட்டை) சுரஹரகாரி—சுரம் (64) குணமாகும.

வாகை:— (பிசின்) மேகக்கட்டி, பிரமேகம், கிரந்தி குணமாகும்.

இலவம்:— (பிசின்) உட்சுரம், பிரமேகம், கிரிச்சரம் குணமாகும்.

விளாம்:— (பிசின்) நீரெரிவு, பேதி, இருமல், அதிமூத்திரம், வெள்ளை, அதிசாரம் குணமாகும். (பழம்) தீபனகாரி—காசம், சுவாசம், கபம், பித்தம் குணமாகும். (ஓடு) இதன் கசாயம்—பித்தசமனகாரி.

ஆவாரை:— (பிசின்) பிரமேகம், அதிமூத்திரம் தீரும். (பூ-விதை) நீரிழிவு குணமாகும்.

வில்வம்:— (வேர்) வீரியவர்த்தனகாரி,—அக்கினிமந்தம், சோபை, குன்மம், பேதி, வாந்தி குணமாகும். (இலை) சுவேதகாரி—சுரந்திரும். (உலர்ந்த செங்காய்) இதின் கசாயங் கொடுக்க சீதபேதி, அதிசாரம் தீரும்.

பாதிரி:— (வேர்) கை கால் கண்கள் எரிவு, மதுமூத்திரம், குணமாகும், (பூ) மேகசுரம் தீரும்.

சண்பக:— (வேர்) தீபனகாரி—சுரம் தீரும், பசி உண்டாகும். (பூ) கண் எரிவு, சுரம் தீரும். சுக்கிலத்தை விருத்திக்கும்.

இலுப்பை:— (வேர்) உஷ்ணகாரி— சுரம் (64), மந்தம், அதிமூத்திரம் குணமாகும். (பருப்பு) அந்திரவாயுத்தீரும்.

புங்கம்:— (வேர்) வேரின் ரசம் புரை ரணத்தில் செலுத்த உலரும். அன்றியும் குன்மம் (8), குடைச்சல், மூர்ச்சை இவைகளுக்குக் கொடுக்

கத்திரும். (நெய்) செவிநோய், **கரப்பான்**, கிரந்தி குணமாக்கும்.

நெல்லி :— (**வேர்**) பலகாரி,—பித்தம், தாகம், வாந்தி தீரும். (**காய்**) கப ரோகம், மலக்கட்டு, வாந்தி, குணமாகும். (**விதை**) சூடு, ஒக்காளம்தீரும்

ருத்திராக்ஷம் :— (**விதை**) மிகதாகம், பித்தம், திரிதோஷம் தீரும்.

அருநெல்லி :— (**வேர்**) தாருட்டியகாரி,—சுரம், அரோசகம், குணமாகும். (**காய்**) உட்சூடுதீரும்.

பனை :— (**கிழங்கு**) சீதளகாரி,—மேகம் (20), கரப்பான், ரணம், ரத்தசீத பேதி, குணமாகும். (**கற்கண்டு**) மசூரிகையின் உஷ்ணம், நீர்ச்சுருக் குத்தீரும். (**வெல்லம்**) சுரம், அருசி, உஷ்ணந்தீரும் (**கள்ளு**) சுக்கிலத் தை விருத்திக்கும், 7 தாதுகள் உறுதியாக்கும். (**நுங்கின் ஜலம்**) வியர் குருவை நீங்கும். (**தோலுடன் நுங்கு**) சீதபேதித்தீரும்.

வாழை: — (**காய்**) பலகாரி,—இருமல், உஷ்ணம், பித்தவாந்தித்தீரும். (**பிஞ்சி**) ரத்தமூலம் தீரும். (**பழம்**) பித்தம், மூர்ச்சை, சோபைதீரும்.

கொடியெலுமிச்சம்— (**காய்**) பித்தம், வாந்தி குணமாகும்.

எலுமிச்சம் :— (**பழம்**) பித்தம், திரிதோஷம், சூலை, குன்மம் தீரும்.

நார்த்தம் :— (**பழம்**) தீபனகாரி,—பித்தம் (40) தீரும். சுக்கிலம் விருத்தி யாகும்.

கடாரநார்த்தம் :— (**காய்**) அரோசகம், பித்தம், வாய்நீர் ஊறல் தீரும்.

கொளிஞ்சி நார்த்தம் :— (**காய்**) கபம், வாதம், தாகம், குணமாகும்.

மாதுளம் :— (**பிஞ்சி**) அதிசாரம் (6) தீரும். (**பழம்**) பித்தம், தாகம், கபம், வாந்தி குணமாகும்.

இலந்தை :— (**பழம்**) வாந்தி, பித்தம், மூர்ச்சை, அருசி குணமாகும்.

வெள்ளைநாவல் :— (**பழம்**) சுக்கிலம், ரத்தம் விருத்திக்கும்.

கள்ளி :— [திருகுக்கள்ளி, சதுரக்கள்ளி, கொடிக்கள்ளி, இலைக்கள்ளி.] (**பால்**) செய்கை விரேசனகாரி,—இதை வெல்லத்தில் பணவிடை வைத்துக் கொடுக்க பேதியாகும். (**பட்டை**) வாதம் (80), நரம்பு சில ந்தி, எலிக்கடி விஷம் குணமாகும்.

வேப்பம் :— (**இலை**) சுரம் (64), மசூரிகை கொப்பளத்தின் ரணம், குஷ் டம், மந்தம் தீரும். (**கள்ளு**) பசி உண்டாக்கும். (**கொட்டை**) ஜன்னி த்தீரும். (**பூ**) பித்தம் தீரும். (**எண்ணெய்**) ரணம் ஆற்றும். (**பட்டை**) பசி உண்டாக்கும், சீதசுரம் தீரும், சுரம் விட்டிருக்கும்போது சூர்ண த்தில் 1 விராகனிடை வீதம் ஜலத்தில் 3 நாள் கொடுக்க, பின்பு சுரம் வராது.

அக்ரோட:— (பட்டை) சிரோரோகம் (19), சந்நிபாதம் (13), வாதம் (80) குணமாகும்.

கொங்கம்:— (பட்டை) தந்தரோகம் (18), பிரமேகம் (21), மூத்திரரோகம் (12), குணமாகும்.

மாம்:— (பிசின்) வெள்ளை, ரத்தஅதிசாரம் தீரும். (வேர்ப்பட்டை) வாந்தி, சீதரத்தபேதித்தீரும். (பருப்பு) சீதபேதி, ரத்தஅதிசாரம், மூலசூடு குணமாகும்.

மலைவேம்பு:— (பிசின்) அஜீர்ணபேதி, மேகக்கட்டித்தீரும்.

தேற்றும்:— (கொட்டை) உட்சூடு, கெட்டை, பிரமேகம், கிரிச்சரம், தீரும்.

புரசன்:— (கொட்டை) பித்தத்தை விருத்திக்கும், குன்மம், வயிற்றிரைச்சல், கிருமி, கரப்பான் தீரும்.

புன்னை:— (கொட்டை) தனுர்வாதம், செவிபுண் தீரும்.

அழிஞ்சில்:— (வேர்ப்பட்டை) இதை அரைத்து பாக்களவுக் கொடுக்க பித்த நீரை வாந்தியாகும்.

மகிழம்:— (விதை) சீதளகாரி, பலகாரி:— சுரம், கண்ணோய்தீரும். சுக்கிலத்தை விருத்திக்கும்.

ஆளி:— (விதை) வாந்தி, தேகக்கடுப்பு, நரம்புசூலைத்திரும்.

சார:—(விதை) நீர்எரிவு, பிரமேகம் திரும். சுக்கிலத்தை தடிப்பாக்கும்.

நிலப்பனை:— (கிழங்கு) வீரியவர்த்தனகாரி — விலாக்குத்தல், மேகம் திரும்.

சரக்கொன்றை:— (புளி) மலக்கட்டு, குடல்வலித்திரும். (பூ) குடல் வியாதிகளுக்கு இதைக் கொடுக்கப்படும்

ஆலமரம்:— (பால்-பட்டை-விதை) சங்கோசனகாரி— பாலை கால் வெடிப்புக்கும் பல்நோவுக்கும் தடவிவரதிரும், நாவக்ஷாரத்துக்கு உட்கொள்ள திரும். (பட்டை) கசாயம் செய்துக்கொடுக்க நீரிழிவுதிரும். (விதை) ஆவாரை லேகியத்துடன் கொடுக்க தேகசூடுத்திரும்.

சுரை:— (இலை) வீக்கம், சோபைத்திரும்.

பாகல்:— (இலை) விரேசனகாரி—திரிதோஷம், கிருமிரோகம் திரும்.

கொடிக்குறிஞ்சா:— (இலை-வேர்) வமனகாரி—வேரின் தூளை ஜலத்தில் கொடுக்க வாந்தியாக்கி கபத்தைப்போக்கும், இலைத்தூள் 20—30 கி

றேன்ஸ் குழந்தைக்குக்கொடுக்க வாந்தியாகும். அன்றியும் நாக்கு புண், காசம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

கோவை:— (இலை) நீர்க்கட்டு, வாதம், இருமல், உஷ்ணம் தீரும். (கிழங்கு) கோழை, ஜிக்வாரோகம், குஷ்டம், பித்தம், மதுமூத்திரம்தீரும். (காய்வற்றல்) கபசுரம், அருசு, உஷ்ணம் தீரும்.

முசுமுசுக்கை:— (இலை) கோழை, சுவாசம், காசம் தீரும். (வேர்) தடித்தகோழை, மார்புநோய், வாந்தி, குன்மம் தீரும்.

கழற்சி:— (இலை—வித்து) பல்காரி, சோபாநாசகாரி, சுரஹரகாரி—குன்மம் (8), அண்டவாதம், சூலைக்கட்டு, சுரம் தீரும்.

முசர்காநி:— (இலை) கை கால்களின் சில்கள் வீக்கம், அண்டவீக்கம், தீரும்.

கோழியவரை:— (இலை) வயிற்றுவலி, ஆமக்கட்டித்தீரும்.

சிறுபூளைக்காலி:— (இலை) க்ஷயம், கோழை, மந்தம் தீரும். (விதை) வீரிய விருத்தியாக்கும்.

உத்தாமணி—வேலிப்பருத்தி:— (இலை) தீபனகாரி, அங்காகர்சன நாசகாரி—வாதம் (80), சுவாசம் (5), சன்னி (13), தேகவலித்தீரும். இலை ரசத்துடன் சுண்ணும்பைச்சேர்த்து வீக்கங்களுக்கு போடலாம்.

செந்தரா:— (இலை) பசிஉண்டாக்கும், நீர்எரிவு, மூளை மூலம், வாதம் தீரும்.

சதாபு:—(இலை) பசி உண்டாக்கும், அதிகபேதி, மாந்தபேதித்தீரும்.

விஷமூங்கில்:— (இலை) கர்ணநோய், சோபை, நகச்சுற்றுத்தீரும்.

காட்டுமல்லிகை:— (வேர்) சுரம் (64), அதிசாரம், நாக்குவறளல் தீரும்.

சிறுக்குறிஞ்சா:— (வேர்) காசம், சுவாசம், வாதம் தீரும்.

கொடிவேலி-சித்திரமூலம்:— (வேர்) விரணகாரி, உஷ்ணகாரி—இதில் நீலம், சிவப்பு, வெள்ளை என 3 விதங்களுண்டு. இதை அரைத்துப்போட கொப்பளிக்கும். அரையாப்புக்கட்டியின் பேரிலும், இருமலுக்கு மார்பின் பேரிலும் போடசவுக்கியப்படும். இதை வாதம்(80), மூலம் (8), சுவாசம் இவைகளுக்குக் கொடுக்க குணமாகும்.

பெருங்காஞ்சொறி:— (வேர்) இரைப்பு, சீதசுரம், இருமல் தீரும்.

சிறுகாஞ்சொறி:— (வேர்) திரிதோஷம், சுவாசம், வாதம், சுரம், கரப்பான் தீரும்.

இன்புறு:— சிறுவேர்:-(வேர்) கபஹாரகாரி — சுரம், காசம், கோழை, பித்தம் (40), வாதம் (80) தீரும்.

வெள்ளரி:— (விதை) நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, பிரமேகம் (21) தீரும். (காய்) நீர் எரிவு, நீர்க்கட்டுந்தீரும்.

தாமரை:— (விதை) சுக்கிலத்தை விருத்திக்கும். (பூ) தேகசூடு, நீர்எரிவு, சுரம் தீரும். (கிழங்கு) சண்களை பிரகாசிக்கச்செய்யும்.

வெண் அல்லி:— (பூ) சுக்கிலத்தை விருத்திக்கும், மிகமூத்திரம், ரத்தபிரமேகம், ஆண்குறிரணந் தீரும்.

செவ்வல்லி:— (கிழங்கு) சுரோணிதத்தை விருத்திக்கும், ரத்தபிரமேகம் தீரும்.

முல்லை:— பூ) உட்சூடு, மனோவியாதி தீரும்.

தூதுளம்:— (பூ) சுக்கிலம்விருத்தியாகும், தேகபலமும் புஷ்டியும் உண்டாகும் (இலை) காசம் (5), கண்ணோய், மந்தம் தீரும். (பழம்) மார்புசளி, க்ஷயம் தீரும். (காய்) கபரோகம், மலக்கட்டுந்தீரும்.

சீந்தில்:— (கிழங்கு) பசியை உண்டாக்கும், மாந்தம், சுரம், பித்தம் (40) தீரும்.

கருடன்:— (கிழங்கு) பாம்பு விஷம், வெள்ளை, கொருக்கு, அரையாப்புந்தீரும்.

கூகை:— (கிழங்கு) தேகத்தை புஷ்டிக்கும், சுரம், இருமல் தீரும்.

மாகாளி:— (கிழங்கு) பசியை உண்டாக்கும், வாத பித்த சிலேஷ்ம ரோகங்கள் தீரும்.

தண்ணீர்விட்டான்:— (கிழங்கு) சுரம், சோபை, வெள்ளை, அதிமூத்திரம் தீரும்.

நெய்தல்:— (கிழங்கு) சீதளகாரி:— பித்தம் (40), ரத்தகிரகணி, அக்கிநி தீரும். சுக்கிலத்தை விருத்திக்கும்.

செங்கேழுநீர்:— (கிழங்கு) சீதளகாரி:— பித்தம் (40), மேகம் (20), புணர்ச்சியின் உஷ்ணம் தீரும்.

கீழாநெல்லி—கீழ்வாய்நெல்லி;—(சமூலம்) தீபனகாரி, மூத்திரவர்த்தனகாரி, பித்தசமனகாரி, — இதின்சாறு பலம் ½ [ற] பாலில்ச்சேர்த்து தினம் உதயத்தில் கொடுக்க மஞ்சட்காமாலை தீரும். இலைத

ளுந்தேனுஞ் சேர்த்துக் கொடுக்க பசி உண்டாகும். துளிர்களும் வெந்தயமுஞ்சேர்த்துக்கசாயமிட்டுக் கொடுக்க வயிறுக் கொட்டல் தீரும்.

குப்பைமேனி:— (இலை—வேர்) விரேசனகாரி— இலை தூள் 30—40 கிறேன்ஸ்யுடன் சர்க்கரைச் சேர்த்து ஜலத்தில் கொடுக்க கிருமிகள் வெளிப்படும். வேர் மலத்தைக் கழிக்கும். இலை ரசமும் வேப்பெண்ணெயும் சேர்த்து குழந்தையின் நாக்கில்தடவ குமட்டலுடன் கபத்தை வெளியாக்கும். அன்றியும் வாதம், மீசகம், தந்தநோய், வயிற்றுவலி, தீப்புண் இவைகளுக்கும் உபயோகிக்கப் படும்.

குன்றிமணி:— (வேர்-இலை) கபஹரகாரி— இதில் கறுப்பு, சிவப்பு, வெள்ளை என மூன்றுவிதங்களுண்டு. இலைதூளும் சர்க்கரையும் சேர்த்துக் கொடுக்க இருமல் தீரும். வேரின்கசாயத்தில் கற்கண்டு தூள்ச் சேர்த்துக்கொடுக்க இருமல் நீங்கும்.

கையாந்தகரை—கரிசலாங்கண்ணி:— (சமூலம்) பலத்தை யுண்டாக்கும், பாண்டு, குன்மம், தந்தரோகம், சுரம், மாந்தம் தீரும்.

கோரைக் கிழங்கு—முஸ்தகாசு:— (கிழங்கு) மூத்திர வர்த்தனகாரி, சுவேதகாரி— குளிர்சுரம், பித்தம், தாகம், கபம், மூர்ச்சை, பேதி, வாந்தித் தீரும்.

சிவதை:— (வேர்) விரேஷனகாரி— வேரின்பட்டையை அரைத்து பாலில்கொடுக்க பேதியாகும். திராக்ஷ உப்பை சேர்த்துக்கொடுப்பது நல்லது.

சிற்றுமுட்டி:— (வேர்) சுரஹரகாரி— கசாயமிட்டு சுரத்துக்குக் கொடுக்கத் தீரும்.

வண்டு கொல்லி—சீமை அகத்தி:— (இலை) இலைச்சாறும் தேங்காய்ப்பாலும் சேர்த்து சொறி, சிரங்குகளுக்கு பூசத்தீரும்

சீயக்காய்—சிகைககாய் :— (காய்-கொழுந்து) — கொழுந்தை துவையல் செய்துக்கொடுக்க பித்தம் தீரும். காயைக் கொடுக்க பேதியும் வாந்தியுமாக்கும். (தூள்) நஸ்ஸியம்— வலி, சன்னித்தீரும்.

செங்கத்தாரிப்பட்டை, சுருளுப்பட்டை:— இதை அரைத்து தேங்காய் நெய்யில்ச் சேர்த்து காய்ச்சி வடித்து ரணங்களுக்குப்போட உடனே உலரும். (வேர்) கீல்களின் வீக்கம், பிரமேகம், புண் தீரும்.

தகரை :— (வேர்) வேரை எலுமிச்சம்பழச் சாற்றுலரைத்து படர்தாமரைக்கு பூச தீரும். (விதை) இதை அரைத்து மோரில் கரைத்து சொறி, சிரங்குகளுக்கு தடவிவரத் தீரும்.

**திருநீற்றுப்பச்சை—ருத்திரசடை—சப்ஜா:**—(விதை) அதிசாரம், மேகம், இருமல், வயிறுக்கொட்டல், இவைகளுக்கு ஜலத்தாலரைத்துக் கொடுக்கவும். (இலை) இதின்சாறு காதிலிட காதுவலிதீரும்.

**அந்தரத்தாமரை—ஆகாசத்தாமரை:**—(இலை) சினிக்தகாரி, சீதளகாரி—கஷாயமிட்டு நீர்சுருக்குக்கு கொடுக்கவும். இலையையரைத்து மூலத்துக்குதடவ மூலம்தீரும். சீதபேதிக்குதேங்காய்ப்பாலிலும், இருமல், சுவாசம், காசம், இவைகளுக்கு சர்க்கரை, பன்னீர், சேர்த்து அதிலும் கொடுக்கத்தீரும்.

**ஆடுதீண்டாப்பாளை:**—(இலை) கிருமிநாசகாரி—இதின் கஷாயத்தை கிருமிகளைப்போக்கக் கொடுக்கப்படும். இலையை பாம்புகடிக்கு உள்ளுக்குக்கொடுக்கவும். இலைச்சாறும் எண்ணெயும் சேர்த்து கருங்குஷ்டம், கரப்பான், சிரங்கு, சிலந்தி, இவைகளுக்கு பூச குணமாகும்.

**இன்போகல்:**—(விதை) சினிக்தகாரி—விதையும் அதிமதுரமும் அரைத்து இருமல், நீர்கடுப்பு, பிரமேகம் இவைகளுக்குங் கொடுக்கத்தீரும்.

**எள்ளு:**—(இலை-விதை) இலையாவது விதையாவது அரைத்து காலில்முள் தைத்த இடத்தின் பேரில் வைத்து கட்ட முள்ளை வெளிப்படுத்தும். (எண்ணெய்) இதை தினம் கொஞ்சம் சாப்பிட்டுவர இருமல், சொறி, சிரங்குந்தீரும். தேகம் புஷ்டியுறும்.

**கஞ்சாங்கோரை:**—(இலை) கர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி—குழந்தைகளின் சுரம், மாந்தபேதி, இருமல் இவைகளுக்கு இலைச்சாற்றில் ஒரு பாலடைக்கொடுக்கத்தீரும்.

**கருநொச்சி:**—(இலை) சுரத்துக்கு இலை கஷாயம் கொடுக்கத்தீரும். இலையும் உப்பும் சேர்த்து வறுத்து மூட்டுவலிக்கு ஒற்றடம்கொடுக்கத்தீரும். இலைச்சாறும் எண்ணெயும் சேர்த்து வீக்கங்களுக்கு தடவிவர குணமாகும். மண்டைக்குடைச்சல், பீநசம் இவைகளுக்கு உபயோகிக்கப்படும்.

**கர்ப்பூரவள்ளி:**—(இலை) கபஹரகாரி—குழந்தையின் இருமல், சளுப்பு, இவைகளுக்கு இதின்சாற்றில் கோரோசனை மாத்திரை உரைத்துக் கொடுக்கத் தீரும்.

**காக்கட்டான்:**—(வித்து-வேர்) செய்கை—விரோசனகாரி—உபயோகம் இதில் வெள்ளை, நீலம், என 2 விதங்களுண்டு. வெள்ளை சிரேஷ்டமானது. விதையை நெய்யால் வறுத்து பொடித்து ஒரு விராகனிடைக்கொடுக்க பேதியாகும். வேரின்தூளை ½ (உ) விராகனிடை குழந்

தைக்குக்கொடுக்க ஓக்காளம், வாந்திகாணும்; கபத்தை வெளியாக்கும். அன்றியும், ஆமக்கட்டு, கண்ணோவு, தலைநோவு, சுரம்த் தீரும்.

நாயுருவி:—(வேர்) முகவசிகம் உண்டாகும். (இலை) கபம், அதிசாரம், ரத்தமூலம், வியர்வை, தந்திமேகம், தீரும். (விதை) பசியை இல்லாமல் செய்யும். (சமூலம் சுட்ட சாம்பல்) பிரசவித்த ஸ்திரியின் உதிரச்சிக்கலை நீக்கும்.

நாய்வேளை:—(இலை) வாதப்பொருமல், பீஜரோய், கர்ணஜரோகம், தேகக்கடுப்பு, குத்தல் தீரும்.

நிலவிளா—நரிவிளா—குட்டிவிளா:—(இலை) இலையை கசாயமிட்டு சுரம், பித்தம், அதிதாகம் இவைகளுக்குக் கொடுக்கத் தீரும்.

சிறுநெருஞ்சி:—(சமூலம்) மூத்திரவர்த்தனகாரி, சீனிக்தகாரி—இதின், கசாயமும் சர்க்கரையும் சேர்த்து நீர்எரிவு, சீழ்மேகம், இவைகளுக்குக் கொடுக்க தீரும். (வித்து) மதுமூத்திரம், சதைஅடைப்பு, நீர்க்கட்டுத் தீரும்.

ஆனைநெருஞ்சி:—(சமூலம்) மயக்கம், தாகம், வெள்ளை, வெண்குஷ்டம் தேகஎரிவு, அஸ்மரித்தீரும்.

பற்படாகம்:—(சமூலம்) இதை கசாயமிட்டு சுரத்துக்குக்கொடுக்க வியர்வை உண்டாகும்.

பிரண்டை—வச்சிரவல்லி:—(சமூலம்) ஜாடராக்கினி வர்த்தனகாரி—இதை நெய்யில் வறுத்து அரைத்து தினம் பாக்களவு எட்டு நாள் கொடுக்க ஆசனதினவு, ரத்தமூலம் தீரும். அன்றியும் கபம், ரத்தபேதி, குன்மம், அக்கினிமந்தம், இவைகளுக்கும் கொடுக்கலாம்.

பூவரசன்:—(பட்டை) பட்டையை அரைத்து பாக்களவு நீராகாரத்தில் கலந்துச்சாப்பிட பேதியாகி, சொரி, சிரங்கு தீரும். (காய்) காயின்ரசத்தை எற்சிற்றமும்புக்குத் தடவிவர குணமாகும்.

பேய்ப்புடல்:—(வேர்) வேர்ரசம்கொடுக்க மலங்கழியும், (இலை) இலைரசம் கொடுக்கவாந்தியாக்கும். சுரம், இருமல் இவைகளுக்குக் கொடுக்கப்படும்.

மிளகாணை:—(வேர்—இலை—பட்டை) கர்ப்பவாதஹரகாரி, பலகாரி—கபம், அஜீர்ணம், வாயு இவைகளுக்கு இதை கசாயமிட்டுக் கொடுக்கப்படும்.

**பொடுதலை - பொற்றலைகையாந்தகரை:**—(சமூலம்) இதை கசாயமிட்டு குழந்தையின் மாந்தம், சுரம் இவைகளுக்குக் கொடுக்க தீரும்.

**மராட்டிமொக்கு:**—(மொக்கு) வேதநாசாந்தகாரி—இதைக்கொடுக்க மயக்கங்காணும். வேதனை சமனுக்கவும், பேதியைக்கட்டவும் ஒருமொக்கு ஒருவேளைக்கு பாலில் காய்ச்சிக் கொடுக்கலாம். இதை சாக்கிரதையாய் உபயோகிக்க வேண்டியது.

**மூக்குரட்டை:**—(வேர்) மலகாரி, கிருமிநாசகாரி—இதின் கசாயத்தை மலங்கழிக்கவும், கிருமிகளை வெளியாக்கவும் கொடுக்கப்படும்.

**வல்லாரை:**—(சமூலம்) மூத்திரவர்த்தனகாரி, பலகாரி, ஜாடராக்கினிவர்த்தனகாரி—மேகம், ரணம், குஷ்டம் முதலிய சருமரோகங்களுக்கு இதை நிழலில் உலர்த்தி சூர்ணித்து 5—8 கிரேய்ன்ஸ் ஜலத்தில் தினம் 2 தடவைக்கொடுக்க வெகுசகுணத்தை தரும். இத்துடன் அயச்செந்தூரஞ்சேர்த்து குஷ்டத்துக்கு கொடுப்பது வெகு சிலாக்கியம். தூளை ரணத்தின்மேல் தூவினுல் ரணம் உலரும்.

**விஷ்ணுகிராந்தி;**—(சமூலம்) சுரம், இருமல் இவைகளுக்கு இதைக்கசாயமிட்டுக் கொடுக்கலாம்.

**வெட்டிவேர்:**—(வேர்) சுவேதகாரி, உஷ்ணகாரி— தாகம், சுரம், வாதரோகம் இவைகளுக்கு இதை கசாயமிட்டுக் கொடுக்கவும்.

**வெண்டை:**—(இலை) இலையை போல்ட்டிஸ் செய்து உபயோகிக்கவும். (விதை) விதையின் கஞ்சியைக்கொடுக்க இருமல், நீர்எரிவு, மலக்கட்டு, தீரும்.

**அம்மான்பச்சரிசி:**—(சமூலம்) இதில் வெள்ளை, சிவப்பு என 2-விதங்களுண்டு. வெள்ளைக்கு-தேகத்தடிப்பு, எரிப்புண், பிரமேகம், மலக்கட்டு இவைகளை நிவர்த்திக்குங் குணமுண்டு. சிவப்புக்கு-சுக்கிலத்தை விருத்தி யாக்கவும், பிரமேகத்தை நீக்கவும், வெள்ளியை பஸ்மமாக்கவும் குணமுண்டு.

**சின்னி:**—(கிழங்கு) மூலம் (8), ரத்தக்கிரகணித்தீரும். (இலை) சடிவிஷம்தீரும்.

**கொடிமுந்திரி-திராக்ஷை:**—(பழம்) சுரம், தாகம், பித்தம் தீரும், சுக்கிலத்தைவிருத்திக்கும்.

**பெரும்பூசினி:**—(காய்) உட்சூடு, பித்தரோகம் (40), மேகம் (20) இவைகளுக்கு இதைஉபயோகிக்கப்படும்.

தும்மட்டி-கும்மட்டி:— (காய்) விரேஷணகாரி—கர்ப்பரோகம், வாதரோகம் (80), குன்மம் (8) தீரும்.

கற்றுழை-குமரி:— (மடல்) இதின் சோற்றைக் கழுவி படிகாரத்தூளைச் சேர்த்து துணியில்போட்டு கண்ணோவுக்கு ஒற்றடம் கொடுக்க கண்ணோவுத்தீரும். வீக்கங்களுக்கு கட்டக்கரையும். இதை அனுபானத்தோடு உள்ளுக்குக்கொடுக்க மூலம் (8), வாதம், கபம், மேகம் (20), குஷ்டம், கிரிச்சரம் (4) தீரும்.

கள்ளிமுளையான்:— தீபனகாரி — பித்தம் (40), வாதம் (80) இவைகளுக்கு அனுபானத்திலிடத் தீரும்.

ஆடாதோடை:—(இலை) சுரஹரகாரி, அங்காகர்சனநாசகாரி, கிருமிநாஷகாரி—சுரம் (64), சந்நிபாதம் (13) இவைகளுக்குஇதை அனுபானத்திலிடத் தீரும். (வேர்) சுவாசம் (5), காசம் (5), பித்தம் (10), கபம், இருமல், மந்தம், கிருமிரோகம், இவைகளுக்கு வேரின் சாற்றை அனுபானத்திலிடத் தீரும்.

வெண்ணொச்சி:— (இலை) பீநசம், சுரம், வாதம், இருமல், தீரும்.

ஆமணக்கு:— (இலை) மார்புநோய், வாதம், மலமந்தம் தீரும்.

வறட்பூலா:— (இலை) சீதரத்தபேதிக்குக் கொடுக்கப்படும்.

விளாரி:—(இலை) சோபாநாசகாரி—இதை ஆமணக்கெண்ணெயால் வதக்கி வீக்கம், கட்டி இவைகளின் மேல் போட்டு கட்டத்தீரும்.

காட்டாமணக்கு:— (இலை) வெள்ளைவிழுதல், குன்மம் (8) மேகப்புண், குஷ்டம், உட்மூளம். இவைகளுக்கு உபயோகிக்கப்படும்.

தவசுமுருங்கை:— (இலை) ஜிக்வாரோகம், சுவாசம், பீநசம், வாதம், கபம், குளிர்சுரம் இவைகளுக்கு உபயோகிக்கப்படும்.

வெதுப்படைக்கி:— (இலை) மாந்தபேதி, சுரம், இவைகள் தீரும்.

பருத்தி:— (இலை) மேகம், பிரமேகம், சோபை இவைகள் தீரும்.

கூத்தங்குதம்பை:— (இலை) பித்தகாரி, வாதம் (80), சூலை (18), சந்நிபாதம் (13) இவைகளுக்கு உபயோகிக்கப்படும்.

அரிவாள்மூக்கு:— (இலை) காசம், விஷம், சிரஸ்தாபம், தீரும்.

துத்தி:— (இலை) மூலம், கிருமி இவைகளுக்குக்கொடுக்கப்படும். (விதை) கருமேகம், குஷ்டம், இவைகளுக்குக் கொடுக்க குணமாகும்.

(பூ) சீதளகாரி, வீரியவர்த்தனகாரி—காசம், ரத்தவமனம் இவைகளுக்குக் கசாயமிட்டுக் கொடுக்கத்தீரும்.

**விழுதி:**— (இலே) விரேசனகாரி— (வேர்) கர்ப்பத்திலுள்ள கிருமிகள் செத்து வெளிப்பட்டு கர்ப்பந் தரிக்கும்.

**கணப்பூண்டு:**— (இலே) சுரம், கணம், மேகக்கட்டி இவைகள் தீரும்.

**பிடங்குநாரி:**—(இலே) ஜாடராக்கினிவர்த்தனகாரி—மந்தம், அஜீர்ணம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

**அவுரி:**— (இலே) பாம்பு விஷம், சன்னி (13) கீல்வாதம், மந்தம், தீரும்.

**தும்பை:**— (இலே) மந்தம், வாதம், சிரோரோகம், கபம் இவைகளுக்குக் கொடுக்கலாம். (பூ) தாகம், சன்னி (13), நேத்திரரோகம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

**முள்ளங்கி:**— (இலே) நீர்க்கட்டு, வாதம், மார்புநோய், இவைகளுக்குக் கொடுக்கலாம். (கிழங்கு) வயிற்றுவலி, குடல்வலி, வாதநோய் குன்மம், சுவாசம், கபம், நீர்க்கட்டு இவைகளுக்கு உபயோகிக்கலாம். (விதை) விரிய வர்த்தனகாரி—விந்தை அதிகரிக்கும்.

**கத்தரி:**—(பிஞ்சு) கபம், திரிதோஷம், திரும். சொறிதினவு உண்டாகும்.

**கண்டங்கத்திரி:**— (சமூலம்) நீரேற்றம், ஈளை, சுவாசம், ஜலபீநசம், இவைகளுக்கு உபயோகிக்கப்படும். (காய்) உஷ்ணகாரி, தீபனகாரி—சிலேஷ்மரோகம் (20)க்கும் கொடுக்கலாம்.

**கறிமுள்ளி:**— (காய்) சுவாசம் (5), சுரம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

**மணத்தகாளி:**— (இலே-விதை) மலகாரி. இதில் கறுப்பு, சிவப்பு என 2 விதங்களுண்டு. இரண்டின் குணமொன்று. வாதம் (80), சிலேஷ்மம் (20) இவைகளுக்குக் கொடுக்கலாம். இலேயின் கசாயம் வாய ரணத்துக்கு வாயைகொப்பளிக்க குணமாகும்.

**களா:**— (காய்) தீபனகாரி—பித்தம், வாந்தி, தாகம், இவைகள் தீரும். (பூ) சதை, ரத்த, கரும, சுவேத என்னும் 4 வித நேத்திர படலங்களுக்கு உபயோகிக்கப்படும். (வேர்) பிரசவ அழுக்கு, மாந்தம், கபநோய் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

**மெருகண்:**— (கிழங்கு) சீதளகாரி—சுரம், பிரமேகம், கபம், தீரும்.

**அமுக்கிரு-அசுவகந்தி:**— (கிழங்கு) சொபாநாசகாரி, தீபனகாரி-சுரம், பாண்டு, க்ஷயம் இவைகள் குணமாகும்.

**பூமிச்சர்க்கரை:**—(கிழங்கு) தாருட்டியகாரி-வெள்ளைவிழுதல், சுரம், மூலம், பிரமேகம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இஞ்சி:—(கிழங்கு) தீபனகாரி-சுரம், சன்னி, ஒக்காளம், வாதம், கபம் தீரும்.

காறுக்கருணை:—(கிழங்கு) தீபனகாரி-மந்தம், வாதம், ரத்தமூலம் தீரும்.

கருஞ்செம்பை :—(பூ) கபாலச்சூலை, பீநசம், நீர்கட்டு, குணமாகும்.

செம்பரத்தம்:—(பூ) வெள்ளைவிழுதல், பிரமேகம் (21) இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

நந்தியாவட்டை:—(பூ) நேத்திரகாசப்படலம், லிங்கநாதம், சிரஸ்தாபம் இவைகளுக்கு உபயோகப்படும்.

செவ்வந்தி:—(பூ) தலைசுற்றல், மூர்ச்சை இவைகள் குணமாகும்.

வேளை:—(பூ) மந்தம், மந்தசுரம், விஷம், மார்புச்சளி இவைகள் தீரும்.

நீர்முள்ளி:—(விதை) வீரியவர்த்தனகாரி, பலகாரி-கபம், சோகை, பிரமேகம், அதிசாரம் தீரும். (சமூலம்) கசாயமிட்டு கொடுக்க நீர்இறங்கும்.

வெங்காயம்:—(விதை) மேகம், மூலம், தேககாங்கை, நீர்எரிவு தீரும்.

துளசி:—(விதை) சீதம்விழுதல் தீரும். (இலை) இருமல், ஜலுப்பு தீரும்.

கரியசாலை:—(விதை) காமாலைக்குக்-கொடுக்கதீரும்.

சங்கம்:—(வேர்) கிருமி, வாதம், காசம், கோழை, கபம் குணமாகும்.

பேராமுட்டி:—(வேர்) பித்தம், சுரம், தாகம், மந்தம் இவைகள் தீரும்.

சிற்றுமுட்டி:—(வேர்) சுரம் (64) க்கும் கொடுக்கலாம்.

செந்தோட்டி:—(வேர்) கோழை, இளைப்பு, வாதம் இவைகளுக்கு கொடுக்கலாம்.

அவுரி:—(வேர்) வெள்ளைவிழுதல், வயிற்றுவலி, மூர்ச்சை இவைகள் தீரும்.

மூக்காவேளை:—(வேர்) அன்னதுவேசம், சுரம், மந்தம், வாதம் தீரும்.

தருப்பை:—(புல்) தாகம், சுரம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

பீநசப்புல்:—(புல்)நாசிகாரோகம், மாந்தம், மூலம், இவைகள் தீரும்.

வாசனைப்புல்-காமாக்ஷிப்புல்- காவட்டம்புல்:— (புல்) தீபனகாரி, சுவேதகாரி-கோழை, சுரம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

பெரியாநங்கை:—(இலை) மலக்கட்டு, பித்தம் (40) இவைகள் தீரும்.

மிளகுத்தக்காளி:—(இலை) நித்திரையில் கால்களைச்சேர்த்து முருக்கிக்கொள்ளும் வாதம், பாண்டு, மேகம், உட்சூடு இவைகள் தீரும்.

கருணை:—(தண்டு) தீபனகாரி, ஜீர்ணகாரி- கபம், மூலம் இவைகளுக்குக் கொடுக்கலாம். (கிழங்கு) மூலம் (8) க்கு உபயோகிக்கலாம்.

கீரை:—(தண்டு) ரத்தகழிச்சல், கிரிச்சரம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

புதியனு:—(கீரை) பேதி, மந்தம், அரோசகம் இவைகள் குணமாகும்.

வெள்ளை:—(கீரை) இதை முலைப்பால் அதிகரிக்க கொடுக்கப்படும்.

பருப்பு:—(கீரை) பித்தத்தை சமனமாக்க இதைக்கொடுக்கலாம்.

பசலை:—(கீரை) வெள்ளைவிழுதல், மூத்திரரோகம் இவைகள் தீரும்.

பால்செளரி:—(கீரை) இதைக்கொடுக்க பித்தம் சமனமாகும்.

முலை:—(கீரை) தீபனகாரி- காசம், சுரம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

முள்ளி:—(கீரை) ஜாடராக்கினி வர்த்தனகாரி, மூத்திரவர்த்தனகாரி - மந்தம், நீர்கட்டு இவைகளுக்குக் கொடுக்கலாம்.

ஆரை:—(கீரை) வீரியவர்த்தனகாரி. காசம், சுரம் தீரும். தாதுவிருத்திக்கும்.

சிறு:—(கீரை) கிரிச்சரம், பித்தம், நேத்திரகாசம் இவைகள் தீரும்.

புளியாரை:—(கீரை) ரத்தமூலம், பித்தம், மூலவாயு இவைகள் தீரும்.

கோழி:—(கீரை) கிருமி, கரப்பான், இவைகளுக்குக் கொடுக்கலாம்.

கொத்தமல்லி:—(கீரை) பலகாரி, வீரியவர்த்தனகாரி, பித்தநாசகாரி— அரோசகம், பித்தம் (40), வாதம் (80) இவைகளுக்குக் கொடுக்கலாம்.

குங்குமப்பூ:—(பூ) உஷ்ணகாரி- சிலேஷ்மரோகம், செவி நாசி நேத்திர ரோகங்கள் இவைகளுக்கு உபயோகிக்கப்படும்.

காட்டாத்தி:— (பூ) மந்தபேதி, ரத்தபேதி, இவைகள்தீரும்.

மந்தாரபூ:— (பூ) சீதளகாரி— தேகஎரிவு, காங்கை தீரும்.

பன்னீர்:— (பூ) இதை பித்தம், வாந்தி இவைகளுக்குக் கொடுக்கலாம்.

செந்தாளம்:— (பூ) இருமல், தொண்டைகபம், சிரஸ்தாபம் தீரும்.

பிரமதண்டு:— (பால்) கண்சிவப்பு, கண்கூசுதல், கண்ணீர்வடிதல், கண்குறுகல், கண்வலி, முதலியவைகளுக்கு உபயோகிக்கப்படும்.

தென்னம்:— (குருத்து) கபம், பித்த மூலம் இவைகளுக்குக் கொடுக்கவும். (இளநீர்ஜலம்) பித்தத்தை விருத்திக்கும், க்ஷயத்தைக் கண்டிக்கும். (தேங்காய் பால்) கரப்பானுக்குக் கொடுக்கலாம், சுக்கிலத்தை விருத்திக்கும், வாதம், பித்தம் அதிகரிக்கும்.

மருதோன்றி:— (வேர்) ஸ்திரீகளின் ருதுகால தோஷம், பித்தம்தீரும்.

## 13-வது அத்தியாயம்.

## சில இங்கிலீஷ் மருந்துகள் சாதாரணமாய் இங்கிலீஷ் பெயர்களைக் கொண்டே வழங்கிவருவதால் இங்கிலீஷ் பெயர்களும் அதற்குச்சரியான தமிழ்ப்பெயர்களும் காண்க.

| மருந்துகளின் இங்கிலீஷ் பெயர்கள். | | மருந்துகளின் தமிழ் பெயர்கள். |
|---|---|---|
| தமிழில் | இங்கிலீஷில் | |
| பில்ஸ் | Pills | மாத்திரை |
| கன்பக்ஷன் | Confection | லேகியம் |
| லினிமெண்ட | Liniment | பூசத்தயிலம் |
| அயின்டமெண்டு | Ointment | இளகியக் களிம்பு |
| பிளாஸ்டர் | Plaster | பிளாஸ்திரி |
| பிளிஸ்டர் | Blister | கொப்பளிக்கும் மருந்து |
| பொட்லிசு | Poultice | பதவாடை |
| டிகாக்ஷன் | Decoction | கசாயம் |
| மிக்ஸ்சர் | Mixture | பல்மருந்துகளின் சேர்க்கை |
| டிங்சர் | Tincture | பாவனைத் திரவம் |
| கம்பௌன்ட் டிங்சர் | Compound Tincture | கலவைப்பாவனைத் திரவம் |
| எக்ஸ்டிராக்ட் | Extract | சத்து |
| கம்பவுன்ட் பவுடர் | Compound Powder | கலவைச்சூரணம் |
| ஸ்பிரிட் | Spirit | பரிமளபதார்த்தங்கள் சேர்ந்த சாராயம் |
| வாட்டர் | Water | ஜலம் |
| ஆயில் | Oil | தயிலம் |
| எஸ்ஸென்ஸ் | Essence | தயிலஞ்சேர்ந்த சாராயம் |

## 14-வது அத்தியாயம்.

கபேரரோகங்கள் அதி சீக்கிரத்தில் குணமாக்குவதற்கு மகா வல்லமையுள்ள, இங்கிலீஷ், யுனானி, கர்நாடக இம்மூன்றுவித

அவுஷத பதார்த்தங்களையும் அவைகளின் குணங்கள், செய்கைகள் முதலியவைகளையும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

## கடுகு (வித்து.)

### Mustard—மஸ்டர்ட்.

**குணம்.**—கடுகில் நாய்க்கடுகு, மலைக்கடுகு, சிறுக்கடுகு, கருங்கடுகு, வெண்கடுகு என ஐந்துவகைப்படும். இதை சகலருக்குந் தெரிந்த பதார்த்தம்.

**செய்கை:**—வமனகாரி, சோணகாரி, உஷ்ணகாரி, மூத்திரவர்த்தனகாரி.

**உபயோகம்.**—கடுகைக் கொஞ்சமாய்க் கொடுத்தால் சீரணிக்கச்செய்யும், வாயுவை ஹதம்செய்யும், சூட்டையுண்டாக்கும். அதிகஅளவில் கொடுத்தால் வாந்தியாகும். இது குமட்டல், ஆயாசம் இவைகளில்லாமல் வாந்தியை உண்டாக்குவதால் நஞ்சுண்டோருக்கு நஞ்சைவெளியாக்கக் கொடுக்கலாம். கடுகை அரைத்து கால் கைகளுக்கு தடவி துணியைச்சுற்றினால் சூட்டைஉண்டாக்கும். வயிறு, தொண்டை, மார்பு முதலிய இடங்களில் இதை அரைத்துத் தடவினால் நோய்தணியும். கடுகை அடிக்கடிக் கொடுத்தால் மூத்திரத்தை விருத்திக்கும்.

**அளவு.**—இதின் தூள் 1—2 டேபில்ஸ்பூன் அளவுக்கு 6—8 அவுன்ஸ் நீரில்க் கொடுக்க வாந்தியாகும். 2—3 தேயிலைக்கரண்டி அளவு மந்தாக்கினிக்கு தினம் 2—3 தடவைக் கொடுக்கலாம்.

## அம்பர் (ரோஜனம்.)

### Amber—அம்பர்.

**குணம்.**—இது பல ரூபங்களாயும் மஞ்சள் நிறமாயும் இருக்கும். ஜலத்திலும் சாராயத்திலும் கரையாது.

**செய்கை.**—உஷ்ணகாரி, அங்காகர்சன நாசகாரி.

**உபயோகம்.**—அம்பரும் மணலும் சமனிடையாய் சேர்த்து, எரித்துத் தயிலத்தை வடித்து 5 துளி விதம் அனுபானத்திலிட வலி 5 தீரும்.

## கிரியஸோட் (தயிலம்.)

### Creasote—கிரியசோட்.

**குணம்.**—இது இளமஞ்சள் நிறமாயிருக்கும். ஜலத்தில்கரையாது. ஆல்கோஹல், ஈதர், அஸிடிக் ஆஸிட் இவைகளில் கரையும். இது தார் எண்ணெயிலிருந்து வடித்து எடுக்கப்படும்.

**செய்கை.—உபயோகம்.**—இது தேகத்தில்பட்டால் எரிச்சல்காணும். சிறுஜெந்துக்களைக் கொல்லும். சொத்தைப் பல்லுக்குப் போட (

ய் உடனேத்தீரும். இது வாந்தியைநிறுத்த வெகு நல்லமருந்து. கீல்வாதம், மதுமூத்திரம், நரம்புவலி, க்ஷயம், ரணம், சருமரோகங்கள் இவைகளுக்கு உபயோகிக்கப்படும்.

அளவு.—1—5 துளி ஒரு அவுன்ஸ் ஜலத்தில் போட்டு உள்ளுக்குக் கொடுக்கலாம், மேலுக்கும் உபயோகிக்கலாம்.

## மண்ணெண்ணெய் (எண்ணெய்.)

Earth Oil—எர்த் ஆயில்.

**குணம்:**— இது தடிப்பாயும், கறுத்து தாரின்வாசனையும், ருசியும் உள்ளது. ஜலத்தில் கரையாது, ஈதரில் கரையும்.

**செய்கை:**— உஷ்ணகாரி, அங்காசர்சன நாசகாரி, சுவேதகாரி, கிருமி நாசகாரி,

**உபயோகம்:**— இதை அனுபானத்திலிட வலிப்புகள் (5), குணமாக்கும், கிருமிகளைப்போக்கும், வியர்வைஉண்டாக்கும், வாந்தியை நிறுத்தும்.

அளவு:—12--20 துளி ஜலத்தில் கொடுக்க வாந்தி நிற்கும், 30--60 துளி லவங்கப்பட்டை கசாயத்தில் கொடுக்க வியர்விக்கும், கபம் தீரும்.

## வசம்பு (வேர்கட்டை.)

Sweet Flag—ஸ்வீட்பிளாக்.

**செய்கை:**— ஜாடராக்கினி வர்த்தனகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்:**— இசுவு, சுரம், அக்கினிமந்தம், மாந்தம், ஜன்னி, பேதி, வாயு, புண், இவைகளுக்கு இதை கசப்புள்ள பலகாரியோடும், உஷ்ணகாரியோடும், சேர்த்துக்கொடுகைப்படும்.

அளவு:— இதின் தூள் 10—20 கிரேன்ஸ் மாத்திரை ரூபமாகவாவது, ஜலத்திலாவது கொடுக்கலாம்.

## சீமைக்காடி (காடி.)

Vinegar—வினிகர்.

**குணம்:**— இதை மால்ட்கோதுமையை புளிக்கவைத்து செய்யப்படும். இதில் அஸிடிக் ஆஸிட் என்கிற புளிப்பு இருக்கிறது.

**செய்கை—உபயோகம்:**— காடியில் துணியை நனைத்து மூலம், கருப்பை, நாசி, ரணம், இவைகளுக்குப்போட்டால் அவைகளிலிருந்து வடிகிறரத்தம் உடனே நிற்கும், காடியை ஜலத்திலிட்டுச் சாப்பிட்டால் அதிவியர்வை, ரத்தவமனம், ரத்தபீநசம், இவைகள் தீரும்,

**அளவு:— 2—4 டிராம் வரையில் ஜலத்தில் கொடுக்கலாம்.**

## கடுகுரோகிணி (வேர்.)

Black Hellebore—ப்ளாக்ஹெல்லிபோர்.

**குணம்** :— இதின்மேல் கறுப்பாயும் உள்ளே வெண்மையாயும் ; கசப்பாயும், காரமாயும் இருக்கும்.

**செய்கை** :— ருதுவர்த்தனகாரி, விரேசனகாரி.

**உபயோகம்** :— ஆமக்கட்டு, மலக்கட்டு, சூதகக்கட்டு, சூதகச்சூலை, கரப்பான், சுரம், திரிதோஷம், மார்தம், வாயு இவைகளுக்கு இதை உபயோகிக்கலாம்.

**அளவு** :— இதின் தூளை 10—20 கிரேன்ஸ் அநுபானத்தில் கொடுக்க தண்ணீர்த் தண்ணீராய் பேதியாகும், வாந்தியுமாகும். ரோகங்களுக்கு 3—8 கிரேன்ஸ் கொடுக்கலாம்.

## ஆகோனைட் (வேர்-இலை.)

Aconite—ஆகோனைட்.

**குணம்** :— இலைகளின் மேற்புறம் பச்சையாயும், அடிப்புறம் இளம்பச்சை நிறமாயுமிருக்கும். வேரானது கருத்தும் உள்ளே வெளுத்துமிருக்கும். வாயில்போட கசப்பும், காரமும், விறு விறுவென்று நாக்கும் உதடுகளும் மரத்துவிடும். இங்கிலீஷ் நாவிக்கு ஆகோனைட் என்று பெயர். வடதேசத்திலிருந்து வருகின்ற நாவிகள்-கருநாவி, வெள்ளைநாவி சூத்திரநாவி, வச்சநாவி என 4 வகைப்படும்.

**செய்கை** :— வேதனைசாந்தகாரி, சமனகாரி.

**உபயோகம்** :— இது வெகு விஷமுள்ள பதார்த்தம். ஜாக்கிரதையாய் உபயோகித்தால் கீல்வாதம், இருதயரோகம், நரம்பைப்பற்றியரோகங்கள் இவைகள் குணமாகும்.

**அளவு** :— 1—2 கிரேன்ஸ் அளவுக்குக்கொடுக்கலாம்.

## பேரீரா (வேர்.)

Pareira—பேரீரா.

**குணம்** :— இது ; கறுப்பும் கசப்புமுள்ளது.

**செய்கை** :— மூத்திரவர்த்தனகாரி, பலகாரி.

**உபயோகம்** :— நீர் எரிவு, நீர்த்தாரைப்புண், ஸ்திரீகளின் வெள்ளை, நீர்கோவை இவைகளுக்குக்கொடுக்கலாம்.

**அளவு** :— 20—60 கிரேன்ஸ் தூளை அநுபானத்திலிடவும்.

## கலம்பா (வேர்.)
Calumba—கலம்பா.

**குணம் :—** இது தட்டையாயும் உருண்டை யில்லையாயிருக்கும். கசப்பும் கொஞ்சம்வாசனையுமுள்ளது.

**செய்கை :—** பலகாரி, ஜாடாரக்கினி வர்த்தனகாரி.

**உபயோகம் :—** இதைக்கொடுக்க பலத்தை உண்டாக்கும். இதில் துவர்ப்பு, சத்துயில்லை. அயம், வீரம் இவைகளோடு சேர்த்துக்கொடுக்க மெத்த உபயோகமுள்ளது. கர்ப்பஸ்திரீகளுக்கு காணும் வாந்தி, துர்பலம், மந்தாக்கினி இவைகளுக்குக்கொடுக்க குணமாகும்.

**அளவு :—**10—30 கிறேன்ஸ் வீதம் தினம் 2-3 தடவை கொடுக்கலாம்.

## போஸ்தக்காய் (காய்.)
Poppy heads—பாப்பிஹேட்ஸ்.

**குணம் :—** இது கசகசாச்செடியின்காய். முற்றின போஸ்தக்காயில் சத்து கொஞ்சமாயிருக்கும், முற்றாதகாயில் சத்து அதிகமாயிருக்கும். ஆகையால் இது நல்லது. சத்துக்கு அபினிக்குள்ள குணங்களுண்டு.

**செய்கை :—** வேதனைசாந்தகாரி, சினிக்தகாரி.

**உபயோகம் :—** கில்நோவு, கண்ணோவு, வயிற்றுவலி முதலியவைகளுக்கு இதின் கசாயத்தை சுட சுட ஒற்றிடம் கொடுக்க குணமாகும்.

## அபினி (கசகசாக்காயின் உறைந்தபால்.)
Opium—ஓபியம்.

**குணம் .—** இது போஸ்தக்காயிலிருந்துவடிந்துறைந்தபால்.

**செய்கை :—** வேதனைசாந்தகாரி, நித்திராகாரி, சமனகாரி, அங்காகர்ஷன நாசகாரி, சுவேதகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம் :—** அபினி மகாசிரேஷ்டமான அவுஷதம். இது வெகு ஜாக்கிறதையாய் வயதுக்குத்தக்கபடி அளவை திருத்திக்கொடுக்கவேண்டியது. கர்ப்பஸ்திரீகளுக்கும், குழந்தைகளுக்கும் அபினியைக் கொடுக்கலாகாது. தாபனரோகங்களுக்கு இபிகாகியுவனா, ரசபஸ்மம் இவைகளோடு அபினியை சேர்த்துக்கொடுக்கலாம். சூலை, இசிவு, வாந்திபேதி, அதிசாரம், பல்நோய், செவிநோய், வாதம், குன்மம், பேதி, பீனசம் முதலியரோகங்களுக்கு அபினியைக்கொடுத்து சௌக்கியப்பட்டு இருக்கின்றது.

**அளவு:—** அபினிக்கட்டி ½ (ம)--2 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## திப்பிலி (ஓர்விதக்காய்.)

Long Pepper—லாங்பெப்பர்.

குணம் :— இது நீண்டு மேல்மேடுகளாயிருக்கும். இதில் வித்துகளுண்டு. காரமும், விறுவிறுப்புமுள்ளது. இதில் அரிசித்திப்பிலி, ஆனைத்திப்பிலி என 2 விதங்களுண்டு; ஆனால் குணம் ஒன்று.

செய்கை :— உஷ்ணகாரி.

உபயோகம்:— இதை தனியாய்க் கொடுப்பது அரிது. இதை அனுபானத்தில் கொடுக்க வாதம் (80), சிலேஷ்மம் (20), இரைப்பு முதலிய பற்பலரோகங்கள் குணமாகும்.

அளவு :— 10—20 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## திப்பிலிமூலம்-கண்டதிப்பிலி (வேர்.)

செய்கை :— சர்ப்பவாதஹரகாரி.

உபயோகம் :— தேகவலி, பித்தம், காசம், சுரம், இவைகளுக்குக்கொடுக்கப்படும்.

அளவு :— 1—2 திராம் அனுபானத்தில் கொடுக்கவும்.

## நெல்லிமுள்ளி (நெல்லிவற்றல்)

குணம் :— நெல்லிக்காயை உலர்த்திக்கொள்ளுதல்.

செய்கை :— பித்தசமனகாரி.

உபயோகம் :— நீர்எரிவு, பித்தவமனம், உட்சூடு, இவைகளுக்குக்கொடுக்கலாம்.

## தான்றிக்காய் (காய்.)

உபயோகம் :— ஆண்குறிப்புண், உள்சூடு, திரிதோஷம் இவைகளுக்கு தகுந்த அனுபானத்திலிட குணமாகும்.

## பேரீச்சம் (காய்-பழம்.)

செய்கை: — தீபனகாரி, வீரியவர்த்தனகாரி.

உபயோகம் :— மதுமூத்திரம், உமிழ்நீர்வடிதல், இவைகளுக்கு காயைக்கொடுக்கலாம். நீர்கட்டு, பித்தம், சுரம் இவைகளுக்குப் பழத்தைக்கொடுக்கப்படும்.

## சிறுதேக்கு-கண்டுபாரங்கி (வேர்.)

உபயோகம் :— உட்சூடு, தேகவலி, சுவாசம், காசம், குளிர்சுரம்இவைகளுக்கு, அனுபானத்தில் கொடுக்கப்படும்.

## அலிஸி (விதை.)

Linseed—லின்ஸீட்.

**செய்கை :—** சினிக்தகாரி.

**உபயோகம் :—** இருமல், சீதபேதி, கிரகணி, வெள்ளைவிழுதல், கல்லடைப்பு, நீரடைப்பு முதலியவைகளுக்கு இதைகொடுக்கலாம்.

**அளவு :—** அலிஸிவிதை தூள் 3 திராமும், அதிமதுரத்தூள், 1 திராமும் சேர்த்து ½ (உ) பையிண்டு ஜலத்தில் போட்டுக்காய்ச்சின கசாயத்தில் 1½ (கஉ) அவுன்ஸ் விதம் கொடுக்கவும்.

## தேயிலை (இலை.)

Tea—டீ

**குணம்:—** இது சீனதேசத்தில் விளைகிறது. இதில் கறுப்பு, பச்சை, என 2 விதங்களுண்டு. இதை இந்தியாவிலும் பயிரிட்டு வருகின்றது. இதற்கு துவர்ப்பு குணமுண்டு.

**செய்கை:—** அல்ப உஷ்ணகாரி.

**உபயோகம் :—** இது நரம்புகளில் வியாபித்து தெம்பைக்கொடுத்து ஆயாசத்தை நீக்கும். வியாதிகளில் இளைப்பை யாற்ற இதைகொடுக்கப்படும். பச்சைநிறமான தேயிலை நித்திரையை போக்கடிக்கும். தேய்த்தண்ணீர் ரத்தவோட்டத்தைக்குறைத்து சாராயம் குடித்துக்காணுகிற மயக்கத்தையும், தேகம் அலுத்து காணுகிற உறக்கத்தையும் நீக்கும். தேய்த்தண்ணீர் காரமாக செய்துக்கொடுத்தால் சிலவேளை தெம்பையும் சிலவேளை சோம்பலையும் தரும்.

## மக்கி (உறைந்தபால்.)

Gamboge.— காம்போஜ்.

**குணம்:—** மக்கியானது கார்சினிய பிக்டொரிய என்னும் செடியை காயப்படுத்துவதால் வடிந்து உறைந்த பால். இது மஞ்சள் நிறமாயிருக்கும்.

**செய்கை :—** ஜலவிரேஷனகாரி, கிருமிநாசகாரி.

**உபயோகம் :—** இது தனிப்பட கொடுக்கக் கூடாது. பேதிமருந்துகளுடன் சேர்த்துக் கொடுத்தால் வாந்தி, குமட்டல், கடுப்பு முதலியவைகளை ஆக்காமல் தண்ணீருய் பேதியாக்கும். சூதககட்டு, மலக்கட்டு முதலியவைகளுக்கு கொடுக்கலாம்.

**அளவு :—** 2--5 கிறேன்ஸ் மக்கியை ரசபஸ்மம், ஸ்காமொனி இவைகளோடுச் சேர்த்துக் கொடுக்கவேண்டியது.

## குவாகம் (ரோஜனம்.)

Guaiacum.— குவாகம்.

**குணம்:**—இது சாம்பிராணி வாசனையும், தொண்டையில் எரிச்சலையும் உண்டாக்கும்.

**செய்கை:**—சுவேதகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்:**—கீல்வாதம், மேகம், (20), கண்டமாலை, சூதகஜன்னி, சருமரோகம் இவைகளுக்கு கொடுக்க குணமாகும்.

**அளவு:**—10--30 கிறென்ஸ் கொடுக்கலாம். வியர்க்காவிட்டால் மூத்திரத்தை அதிகப்படுத்தும்.

## சதாபுயிலை (இலை.)

Rue.—ரு.

**குணம்:**—இது, பச்சையில் சாம்பல் பூத்த வண்ணமாயும், கசப்புள்ள வெகுட்டலாயும் இருக்கும்.

**செய்கை:**—உஷ்ணகாரி, அங்காகர்சனநாசகாரி, கிருமிநாசகாரி, சோனகாரி, ருதுவர்த்தனகாரி.

**உபயோகம்:**—இதை வயிற்றுவலிக்கு கொடுக்க சிலாக்கியமானது. சூதகஜன்னியை தவராமல் கண்டிக்கும். குழந்தையின் இசிவுரோகத்தை உடனே குணமாக்கும். கர்பஸ்திரீக்குக் கொடுத்தால் பிண்டத்தைச் சேதப்படுத்தும். இருமலுக்கு நோயாளி யிருக்கும் அறையில் தூபம்போட குணத்தைத் தரும். இதின் ரசத்தை கொடுக்க கிருமிகள் நாசமடையும்.

**அளவு:**—20--40 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## பக்கு (இலை.)

Buchu—பக்கு.

**உபயோகம்:**—இது மூத்திரப்பையில் காணுகிற மேகரோகத்துக்கு மஹா நல்ல மருந்து; கொடுத்தால் உடனே குணத்தைத் தரும்.

**அளவு:**—இலை தூள் 20--30 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## குவாஷியா (சக்கை.)

Quassia—குவாஷியா.

**குணம்:**—குவாஷியா மரத்தை சக்கைகளாக்கி விற்கப்படும். பலவித நிறமுள்ளதும், கசப்பாய் இருக்கும்.

**செய்கை:**—பலகாரி, தீபனகாரி.

**உபயோகம்** :—துர்பலம், அஜீர்ணம், பசியில்லாமை ரோகத்தால் காணும் பலஹீனம் இவைகளுக்கு இதைக் கொடுக்க தவராமல் குணத்தைத் தரும். நாள்பட கொடுத்தால் பார்வைக் கெடும். இதின் கசாயத்தை சிறு பிள்ளைகளுக்கு 2-3 நாள் தொடர்ச்சியாய் கொடுத்து மறுநாள் ஆமணக்கெண்ணெய்யைக் கொடுக்க கிருமிகளை வெளிப்படுத்தும்.

**அளவு** :—இதின் கசாயம் $1\frac{1}{2}$ (கற) அவுன்ஸ் கொடுக்கலாம்.

## கியான் டர்பன்டையின் (ரோஜனம்).

### Chian Turpentine—கியான்டர்பன்டையின்.

**குணம்**:—இது இளகிய ரோஜனம். வாசனையுண்டு.

**செய்கை** :—கர்ப்பூர தைலத்தின் செய்கைகள் இதற்கு உண்டு.

**உபயோகம்** :—இது மூத்திர உருப்புகளில் போய் பற்றி பிடித்து அதைகளிலிருந்து வடிகிற மேக நீரை உடனே குணமாக்கும்.

**அளவு** :—10--30 கிரேன்ஸ் ரோசனத்தை அதிமதுரம், விளாம்பிசின், முட்டையின் மஞ்சள் கரு இவைகளில் எதிலாகிலும் சேர்த்து தினம் 3 தடவைக் கொடுக்கலாம்.

## ருமிமஸ்தகி (ரோஜனம்).

### Mastic—மாஸ்டிக்.

**குணம்** :—இது மணிகளாயும், மஞ்சள் நிரமாயுமிருக்கும். கர்ப்பூர தயிலம், ஆல்கோஹல் இவைகளில் கரையும்.

**செய்கை**:—**உபயோகம்** :—இதை சொத்தைப்பல்லின் குளியில் காற்றுப்புகாமலிருக்கும்படி அடைக்க குணத்தைத் தரும். இது சாலாமிசிரி முதலியவைகளோடுச் சேர்த்துக் கொடுத்தால் பலத்தை உண்டாக்கும்.

**அளவு** :—20--60 கிரேனஸ் கொடுக்கலாம்.

## வாலேந்திரபோளம் (ரோஜனப்பிசின்).

### Myrrha—மர்.

**குணம்** :—இது சிறிதும் பெரிதுமான மேடுபள்ளமுள்ள கட்டிகளாயிருக்கும். சிவப்பு கறுப்பு நிறமும் கசப்போடு நல்ல வாசனையும் உள்ளது. ஜலத்தில் கரையும்.

**செய்கை**:—தீபனகாரி, கபஹரகாரி, அங்காகர்சணநாசகாரி, ருதுவர்த்தனகாரி.

**உபயோகம்** :—காசம், இருமல், எலும்புருக்கி, க்ஷயம், குன்மம், சூலை, கரப்பான், சொறி இவைகளுக்கு தகுந்த அனுபானத்தில் கொடுக்க குணத்தைத் தரும்.

அளவு :—10--30 கிறென்ஸ்யை விரேஷனகாரி, பலகாரி இவைகளோ டுச் சேர்த்துக் கொடுக்கலாம்.

## காசுக்கட்டி (சத்து).

Catechu—காடிகியு.

**குணம்** :—இது துவர்ப்பும், தித்திப்பும், பிசுபிசுப்பும் உள்ளது. சிவப்பு நிறமுள்ளது நல்ல சரக்கு. ஜலத்திலும் சாராயத்திலும் கரையும்.

**செய்கை** :—ஸங்கோஷனகாரி.

**உபயோகம்**:—மூலக்காம்பு வெடிப்பு, தொண்டைக்கம்மல், வெள்ளை, சீதபேதி, அதிசாரம், இருமல் முதலிய ரோகங்களுக்கு உபயோகிக்கலாம்.

**அளவு** :—10--30 கிறேன்ஸ்க் கொடுக்கப்படும்.

## சூரத்து நில ஆவாரை (இலை).

Senna—ஸென்ன.

**குணம்** :—இது அநேக தேசங்களில் விளைகிறது. திருநெல்வேலியில் விளைகிற சரக்கு சிரேஷ்டமானது. கசப்பும் வெகுட்டலும் உள்ளது.

**செய்கை** :—விரேசனகாரி.

**உபயோகம்** :—மலச்சிக்கல், நீர் ஏற்றம், முதலியவைகளுக்கு இதை கஷாடஞ்செய்து கொடுக்கலாம். குமட்டல் உண்டாகாமலிருக்க காபி, பால் சுக்குத்தூள், சீமை இந்துப்பு, (Epson Salt), திராக்ஷ உப்பு, இவைகளில் எதிலாகிலும் சேர்த்துக் கொடுக்கவும். கர்ப்பஸ்திரி, மூலரோகி, சிறு குழந்தை இவர்களுக்கு நிலாவாரை கொடுக்கக் கூடாது. நிலாவாரையும் சுக்கும் சேர்ந்த கஷாயத்தில் ஆமணக்கெண்ணெய்ச் சேர்த்து பேதிக்குச் சாப்பிட்டால் சுகபேதியாகும். நிலாவாரை விசேஷமாக சிறு குடலில் வியாபித்து பேதியை உண்டாக்கும்.

**அளவு** :—1—3 திராம் நிலாவாரையுடன் ஜலம் சேர்த்து காய்ச்சின கஷாயத்தில் சுக்குத்தூள் 12 கிறேன்ஸ் அல்லது பெப்பர் மேண்டு தைலம் ஒரு துளி விட்டுச் சாப்பிடவும்.

## குங்கிலியத் தயிலம் (தயிலம்).

Copaiba—கோபேபா

**குணம்**:—இது அநேக ஜாதி மரங்களிலிருந்து சேகரிக்கப்படும். மஞ்சள் நிறமும், ஒருவித வாசனை, கசப்பு, கறகறப்பு, வெகுட்டல், இவைகளுள்ளது. இது ஜலத்தில் கரையாது. ஆல் கோஹல், எண்ணெய் இவைகளில் கரையும்.

**செய்கை** :—விரேசனகாரி, மூத்திரவர்த்தனகாரி.

**உபயோகம் :**—இது முக்கியமாய் மூத்திரத்தாரையில் சென்று குணத்தைத் தருவதால் வெள்ளை விழுதலுக்கு இது சஞ்சீவி. வெள்ளைக்கு ஆரம்பத்தில் இதைக் கொடுத்தால் உடனே குணத்தைத்தரும். வியாதியை அனுகூலமான பிறகும் 7-8 நாள் அதாவது பேதி காணும் வரையில் சாப்பிட்டு வந்தால் ரோகம் குணமாகும். பேதி காணுவது மருந்து உடம்பில் பற்றினதற்கு அடையாளம். தந்தி மேகத்துக்கு நீர்த்தாரையில் இதை செலுத்தினால் குணமாக்கும். காசம் (5), மூலம் (8), ஸ்திரிகளின் வெள்ளை இவைகளுக்குக்கொடுக்க வெகு குணத்தைத்தரும். ரணத்தின்மேல் தடவி வர ரணத்தை ஆற்றும்.

**அளவு :**—15-40 துளி தினம் 3 தடவை பாலில் கொடுக்க வெகுட்டவிராது.

## பால்ஸம் ஆப் பிரு (தயிலம்).

Balsam of Peru—பால்ஸம் ஆப் பிரு.

**குணம்:**—இது செடியிலிருந்து எடுக்கப்படும் ஒருவித குங்கிலியத் தயிலம். கறுப்பு சிவப்பு நிறமும், கசப்பாயுமிருக்கும்.

**செய்கை :**—கபஹரகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம் :**—இருமலுக்கு காபனமில்லாதபோது இதைக்கொடுக்கத்தீரும். பிரமேகம், எலும்புருக்கி, மது மூத்திரம், குதகக்கட்டு, கீல்வாதம் இவைகளுக்கும் கொடுக்கப்படும். மேல் தடவ ஆறுத ரணத்தை ஆற்றும். தலைக்கு தடவினால் மயிரை முளைக்க செய்யும். முலைகாம்பு ரணத்துக்கு தடவ குணமாகும்.

**அளவு :**—15—30 துளி விளாம்பிசின்பாகில் கொடுக்கப்படும்.

## பால்ஸம் ஆப் டொலு (தயிலம்).

Balsam of Tolu—பால்ஸம் ஆப் டொலு.

**குணம் :**—இது சிவந்த மஞ்சள் நிறமாயும், நல்ல வாசனையாயும், காரமாயும், தித்திப்பாயும், தேன்போல் தடிப்பாயும் இருக்கும்.

**செய்கை :**—கபஹரகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம் :**—இதை இருமலுக்குக் கொடுக்க குணமாகும்.

**அளவு :**—15—40 கிரேன்ஸ் விளாம் பிசின்பாகில் கொடுக்கலாம்.

## அதிமதுரம் (வேர்).

Liquorice—லிகோரிஸ்.

**குணம் :**—இது தித்திப்பாயும், சூர்ணித்தால் மஞ்சள் நிறமாயும் இருக்கும்.

**செய்கை**:—ஸினிக்தகாரி.

**உபயோகம்**:—இருமல், பேதி இவைகளுக்கு இதைக் கொடுக்க குணத்தைத்தரும். 1½ (கற) அவுன்ஸ் அதிமதுரத்தை ஒரு பயின்ட்டு ஜலத்தில் போட்டு காய்ச்சின கசாயத்தை நீர் சுருக்கு, மூத்திரரோகம் இவைகளுக்குக் கொடுக்க உடனே குணத்தைத்தரும். அதிமதுரத்தை வாயில் அடக்கி ரசத்தை விழுங்கினால் இருமல் தணியும் கறகறப்புத் தீரும்.

## டிரெகெகாந்த (பிசின்).

Tragacanth—டிரேகாந்த.

**குணம்**:— இது தகடுகளாயும், வெள்ளைமஞ்சள்கலந்த நிறமாயும் இருக்கும்.

**செய்கை**:—ஸினிக்தகாரி.

**உபயோகம்**:—பேதி, இருமல் இவைகளுக்கு கொடுக்க குணமாகும். குழந்தைகளுக்கு இதை ரஸபஸ்மத்துடன் சேர்த்துக்கொடுத்தால் வெகு குணத்தைத்தரும். கொஞ்சம் வாயில் போட்டு ரசத்தை விழுங்கினால் உடனே பொடி இருமல் தீரும்.

**அளவு**:—½ (ற)—1½ (கற) திராம் கொடுக்கலாம்.

## பூனைக்காலி (காயின்சுணை.)

Cowhage—கவ்ஹஜ்.

**குணம்**:—இந்த சுணை தேகத்தில் பட்டால் தினவு, நோய், வீக்கம் காணும்.

**செய்கை**:—கிருமிநாசகாரி.

**உபயோகம்**:—சுணையுள்ள காயை சர்க்கரைப்பாகில் தோய்த்து சுரண்டி பாகில் கலந்துக்கொள்ளவும். இவ்விதமாய் பாகானது தேன்போல் கடிப்பாகிற வரையில் சுணையைச் சேர்த்து சீசாவில் போட்டு வைத்துக் கொள்ளவும். 2—3 தேயிலைக்கரண்டி வீதம் காலையில் 3 நாள் கொடுத்த பிறகு ஆமணக்கெண்ணெயை பேதிக்குக் கொடுக்க பூச்சிகளை எல்லாம் உயிரோடேவெளிப்படுத்தும்.

## டார்மென்டில்ல (வேர்.)

Tormentilla—டார்மென்டில்ல.

**செய்கை**:—ஸினிக்தகாரி.

**உபயோகம்**:—இது துவர்ப்பாயிருக்கும், சீதபேதி, பேதி இவைகளுக்குக் கொடுக்க உடனே குணத்தைத் தரும்.

அளவு :— ½ (த)—1 கிராம் வேரின் தூளை ஜலத்திலும், வேரை கசாய மிட்டும் கொடுக்கலாம்.

## ரோஜா (உலர்ந்த மொக்கு)
Rose Dry Bud—ரோஸ் டிரை பட்.

செய்கை :—ஜலவிரேசனகாரி.

உபயோகம் :— இதை தவையல் செய்தாவது, நெய்யில் வறுத்து சர்க்கரைச்சேர்த்தாவது சாப்பிட்டால் தண்ணீர்த்தண்ணீராய்பேதியாக்கும்.

அளவு :— 2—5 கிராம் கொடுக்கலாம்.

## கொஸ்ஸோ (உலர்ந்த புஷ்பங்கள்)
Kousso—கோஸ்ஸோ.

செய்கை :—கிருமி நாசகாரி.

உபயோகம் :—இதை வயிற்றிலுள்ள கிருமிகளை வெளிப்படுத்துவதற்குக் கொடுக்கப்படும். இது அபூர்வமான சரக்கு.

அளவு :— 6—8 கிராம் பூச்சூரணத்தை வெந்நீரில் கொடுத்து 3—4 மணிக்குள் மலம் இறங்காவிட்டால் ஆமணக் கெண்ணெய்யைக் கொடுக்கவும். ½ (த)—2 கிராம் சிறுவர்களுக்குக் கொடுக்கவும்.

## காயபுட்டித்தயிலம்
Cajuput—காஜிபட் ஆயில்.

குணம் :—இது தெளிவாய், பச்சை நிறமாய், இனிப்பாய், வாசனையாய், காரமாய் இருக்கும்.

செய்கை :—அங்காகர்ஷண நாஸகாரி, உஷ்ணகாரி.

உபயோகம் :—நரம்பைப்பற்றிய வியாதிகள், வாந்திபேதி, கீல்வாதம் கணுவாதம், சூதகஜன்னி, வயிற்றுவலி முதலிய சகலவாதரோகங்களுக்கும், சுரங்களுக்கும் இதைக்கொடுக்க தவறாமல் குணத்தைத் தரும்.

அளவு :— 2—4 துளி சர்க்கரையில் கொடுக்கலாம். சர்ப்பூரத் தயிலத்தோடு இதைச் சேர்த்து மேலுக்குத்தடவ வாதநோய் குணமாகும்.

## கிராம்பு (உலர்ந்த மொக்கு)
Clove—குளோவ்.

செய்கை :—கர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி,

உபயோகம் :—இதைக் கொடுக்க வாயுவைப் போக்கும், திடனத்தை உண்டாக்கும்.

அளவு :— 10—30 கிரேன்ஸைத் தூளைக்கொடுக்கலாம்.

## கேக்விதை (விதை)

Caraway—காரவே.

குணம் :—இது சிறுதாயும், வாசனையாயும், காரமாயும், இருக்கும்.

செய்கை :—சர்ப்பவாதஹரகாரி, ஜாடராக்கினி வர்தனகாரி.

உபயோகம் :—மந்தம், வாதம், பசியில்லாமை இவைகளுக்கு இதைக் கொடுக்க குணமாகும்.

அளவு :— 1—2 திராம் தூளை ஜலத்தில் கொடுக்கலாம்.

## சோம்பு (விதை)

Anise—அனிஸ்.

குணம் :—இது வாசனையாயும், காரமாயும், தித்திப்பாயும், பழுப்புநிறமாயும் இருக்கும்.

செய்கை :—உஷ்ணகாரி, சர்ப்பவாதஹரகாரி.

உபயோகம் :— குழந்தைகளுக்கு காணுகிற அதிசாரம், வாயுவால் காணும் வயிற்றுவலி இவைகளுக்கு இதைக் கொடுக்கலாம். முலைப்பாலை சுரப்பிக்கிற குணம் இதற்குண்டு.

அளவு :— 10—30 கிரேன்ஸ் கொடுக்கலாம்.

## பெருஞ்சீரகம் (விதை)

Fennel—பென்னல்.

செய்கை :—சர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி.

உபயோகம் :—சோம்பை உபயோகப்படுத்துகிற ரோகங்களுக்கு இதைக் கொடுக்கலாம்.

அளவு :— ½ (த)—1 திராம் கொடுக்கலாம்.

## சதகுப்பை (விதை)

Dill—டில்.

செய்கை :—சர்பவாதஹரகாரி, உஷ்ணகாரி.

உபயோகம் :—குழந்தையின் வயிற்றுவலி, மாந்தம் முதலியவைகளுக்கு இது தகுதியான மருந்து. பெரியவர்களுக்கும் வெகு நல்லமருந்து.

அளவு :— 10—60 கிரேன்ஸ் பெரியவர்களுக்குக் கொடுக்கலாம்.

## பெருங்காயம் (பிசின்)

Assafoetida—அஸ்ஸேபிட்டிடா.

**குணம்** :—இது ஒரு செடியின் வேரிலிருந்து எடுக்கிற பால். இதை வெய்யிலில்வைத்து இறுகும்படி செய்யப்படும். இது பார்ஸீகதேசத்தில் உண்டாகும்.

**செய்கை** :—அங்காகர்ஷன நாசகாரி, ருதுவர்த்தனகாரி, உஷ்ணகாரி; கிருமிநாசகாரி.

**உபயோகம்** :—சூதகஜன்னி, கோரியவலி, காக்கைவலி, முதலியவைகளுக்குக்கொடுக்க இது மகாசிலாக்கியமான மருந்து. சூதகஜன்னிக்கு இது சஞ்சீவி, ஜன்னிகண்டிருக்கும்போதாவது அல்லது தணிந்திருக்கும்போதாவது இதை அதிக அளவில் கொடுத்தால் உடனே குணமாக்கும். குழந்தையின் இசிவுக்கும், விருத்தாப்பியர்களுக்குகாணும் வாயுவால் மலம் இறுகுதலுக்கும் இதைக்கொடுத்தால் மெத்தபிரயோசனத்தைத்தரும். கக்குவாய், இளைப்பு, காசம், சுவாசம், நேடித்த இருமல், இவைகளுக்கு இதைக்கொடுக்கத் தவறாமல் நன்மை செய்யும். கருப்பையின் அழுக்கை வெளியாக்க இதைக்கொடுக்கப்படும்.

**அளவு** :— 5—20 கிறேன்ஸ் ஜலத்திலாவது, மாத்திரைசெய்தாவது கொடுக்கப்படும்.

## கம் அம்மோனியாக் (ரோஜனப் பிசின்.)

Gum Ammoniac—கம்அம்மோனியாக்

**குணம்** :— இது கட்டிகளாயாவது, முத்தையாய்யாவது இருக்கும். மேலுக்கு மஞ்சள் அல்லது சிவப்பாயும், உள்ளே வெள்ளையாயும், கசப்பாயுமிருக்கும். ஜலத்தில் அதிலுள்ள பிசின்கரையும் ரோஜனம் மிதக்கும், சாராயத்தில் கரையும்.

**செய்கை** :— உஷ்ணகாரி, கபஹரகாரி, அங்காகர்சன நாசகாரி.

**உபயோகம்** :— நேடித்த காசரோகத்துக்கு இதை கொடுக்கத் தவராமல் குணத்தைச்செய்யும். மேகக்கட்டி, வீக்கம் முதலியவைகளுக்கு இதை பிளாஸ்திரியாக்கிப்போட குணமாகும்

**அளவு** :— 10—30 கிறேன்ஸ் மாத்திரைச்செய்தாவது, பால், ஜலம், இவைகளிலாவது கரைத்துக்கொடுக்கலாம்.

## கால்பெனம் (ரோஜனப்பிசின்.)

Galbanum—கால்பேனம்.

**குணம்**: — இது சிறுகட்டிகள் சேர்ந்த முத்தையாயிருக்கும். இது

மஞ்சள் பச்சைநிறமாயும், வாசனையாயும், கசப்பாயுமிருக்கும். ஜலத்தில் கரையும்.

**செய்கை :—** கபஹரகாரி, அங்காகர்சனநாசகாரி.

**உபயோகம் :—** இதற்கு பெருங்காயத்தின் செய்கைகளிருப்பதால் பெருங்காயம் உபயோகிக்கும் ரோகங்களுக்கு இதைக் கொடுக்கப்படும்.

**அளவு :—** 10—20 கிறேன்ஸ் ஜலத்திலாவது, அல்லது மாத்திரை செய்தாவதுக் கொடுக்கப்படும்.

## சீரகம் (வித்து.)

### Cumin—கம்மின்.

**செய்கை :—** பித்தஹரகாரி, தீபனகாரி.

**உபயோகம் :—** சீரகத்துடன் கற்கண்டு சேர்த்து தினம் காலையில்சாப்பிட்டுவர பித்தஞ்சமனமாகும், பசியை உண்டாக்கும்.

**அளவு :—** 10—20 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## கோனியம் (இலை.)

### Conium—கோனியம்.

**குணம் :—** இதுபச்சையாயும், கசப்பாயும், வெகுட்டலாயும் இருக்கும்.

**செய்கை :—** வேதனுசாந்தகாரி, சமனகாரி.

**உபயோகம் :—** இது முள்ளந்தண்டைப்பற்றி குணத்தைக்காட்டுவதால் வெகு ஜாக்கிரதையாயிருக்கவேண்டியது. அளவுக்கு அதிகமானால் ஸம்ஸ்தம்பரோகம் (Paralysis) காணும். தொண்டையில் வரளல், இறுகல் கண்டால் மருந்து உடம்பில் பற்றினதற்கு அடையாளம், உடனே மருந்தை நிறுத்தவும். இது உள்ளுக்கும் மேலுக்கும் உபயோகிக்கலாம். இதை கீல்வாதம், நரம்புவேதனை, ரணம், புத்து முதலிய கடூரரோகங்களுக்கு உபயோகிக்க வேதனையை சமனப்படுத்தும்.

**அளவு :—** இலைத்தூள் 3 முதல் 5 கிறேன்ஸ் தினம் 2—3 தடவை கொடுக்கலாம்.

## கொத்துமல்லி (விதை.)

### Coriander—கோரியாண்டர்.

**செய்கை :—** ஜாடராக்கினிவர்த்தனகாரி, கர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி, பித்தநாசகாரி.

**உபயோகம்:—** இதை ஜலத்தில்போட்டு காய்ச்சிவடித்தக்கசாயத்தில் பாலும் சர்க்கரையும்போட்டு தினம் காலையில் சாப்பிட்டுவர பித்தசமனம

கும், ஆரோக்கியத்தை உண்டாக்கும், வாதத்தை ஹரிக்கும், தாகத்தை அடக்கும், வாந்தியை நிறுத்தும்.

## இபிகாகியு எஹு (வேர்.)

### Ipecacuanha—இபிகாகியு எஹு.

குணம் :— இது முடிகள் போட்டதாயும் வெகுட்டலுள்ள வாசனையுடையதாயும் இருக்கும்.

செய்கை :— கபஹரகாரி, சுவேதகாரி, வமனகாரி, ஸமனகாரி.

உபயோகம் :— சுவாசம், காசம், சீதபேதி, நுரையீரல் தாபனம் இவைகளுக்கு குமட்டல் காணும்படியாய் இதைக்கொடுக்க குணத்தைத் தரும். அண்டநோய், மேகக்கட்டி, சுரம், க்ஷயம், இவைகளுக்கு இதை வாந்திக்குக்கொடுத்தால், வெகு குணத்தைத்தரும். சீதசுரத்துக்கு குளிர் காணுவதற்கு முன் வாந்திக்குக் கொடுத்தால் குளிரின் வேகத்தை அடங்கும். இதை அபினியுடன் சேர்த்து வியர்வைபிறப்பிக்க சுரத்தில் கொடுக்கலாம். குழந்தைகள், விருத்தாப்பியர்கள், ஸ்திரீகள், முதலியவர்களுக்கு ஆயாசமில்லாமல் வாந்தியாக்க இதை கொடுக்கலாம். டார்ட்டர் மெடிக் (Tartar Emetic) என்னும் வாந்தி உப்போடு சேர்த்துக்கொடுப்பது நல்லது. நஞ்சுண்டோரின் விஷத்தை வெளிப்படுத்த இதை வாந்திக்குக் கொடுக்கலாம்.

அளவு :— 15—20 கிறேன்ஸ் கொடுத்தால் வாந்தியாகும். வெந்நீர் அடிக்கடி குடித்துக்கொண்டிருந்தால் வாந்தி தாராளமாய் ஆகும். 1-2 கிறேன்ஸ் கொடுத்தால் கபத்தை வெளிப்படுத்தும், வியர்வையைப்பிறப்பிக்கும். ½ (ஒ) கிறேன்ஸ் வீதம் கொடுத்துவர அக்கினிமந்தம் குணமாகும்.

## காபி (வித்து.)

### Coffee—காபி.

செய்கை :—பலகாரி, உஷ்ணகாரி, பித்தகாரி, தீபனகாரி.

உபயோகம்:—காபிக்கு பித்தத்தை விருத்திக்கவும், தேகத்துக்கு பலத்தை உண்டாக்கவும், பசியை உண்டாக்கவும், உஷ்ணத்தை செய்யவும் குணமுண்டு. பால், சர்க்கரைச்சேர்ந்த காபித்தண்ணீரை கொஞ்சமாகச் சாப்பிட்டால் பேதியைக்கட்டும், அதிகமாகக்குடித்தால் பேதியாக்கும். காசம், சுவாசம், இவைகளுக்குக்கொடுத்தால் உடனே சாந்தமாக்கும். இது குழந்தையின் வாந்தியை நீற்கும். சுரம், முகசன்னி, கக்கிருமல், தலைவலி முதலியவைகளுக்குக் கொடுக்கப்படும்.

## ஷின்கோனு. (பட்டை.)

Cinchona.— ஷின்கோனு.

**குணம்** :—இதில் மஞ்சள், வெளுப்பு, சிவப்பு என மூன்றுவிதங்களுண்டு. மஞ்சள், வெளுப்பு, சரக்குகள் நல்லவைகளாம்.

**செய்கை** :—பலகாரி, சங்கோசனகாரி. மாம்ஸம் அழுகிப்போடுதலை தடுக்கும். காலக்கிரமமாய் வரும் ரோகங்களை குணமாக்கும்.

**உபயோகம்** :—மஞ்சள் நிறமானப்பட்டை வெகு வேகமுள்ளது. வெளுப்பு நிறமானப்பட்டையை கொஞ்சம் பலம் வரக்கொடுக்கப்படும். சுரம், கீல்வாதம், துர்பலம், அதிசாரம், ரத்தபேதி, இவைகளுக்குக் கொடுக்க சுகுணத்தைத்தீரும். வாய் ரணத்துக்கு கொப்பிளிக்கிற ஜலமாக செய்து உபயோகிக்கலாம். இதை குமட்டலை உண்டாக்குவதால் வாசனை பதார்த்தங்களைச் சேர்த்துக் கொடுக்கலாம். இதினால் மலச்சிக்கலானால் ரேவல் சின்னியையும், பேதியானால் அபினியையும் சேர்த்துக்கொடுக்கப்படும். துர்மலத்தை போக்கி பிறகு இதைக்கொடுக்கவேண்டியது. இதைக்கொடுக்க பலம் வரும். முறைக்காய்ச்சலுக்கு சுரமில்லாதபோது இதைக்கொடுக்க சீக்கிரத்தில் குணமாக்கும். இதை குறைந்த அளவில் அடிக்கடி கொடுக்க அதிக நன்மை செய்யும். காலக்கிரமமாய் வரும் ரோகங்களைத் தீரும்.

**அளவு** :—10—40 கிறென்ஸ் தூளைக்கொடுக்க பலத்தை உண்டாக்கும். 1–2 திராம் 3 மணிக்கு ஒருதரம் கொடுக்க ரோகங்கள் தீரும். இதை பாலிலாவது ஜலத்திலாவதுக் கொடுக்கலாம்.

## மாசிப்பத்திரி. (சடை.)

Absinthium.— அப்சிந்தியம்.

**குணம்** :—இது கசப்பாயும், ஒருவித வாசனையாயும் இருக்கும்.

**செய்கை** :—கிருமிநாசகாரி, பலகாரி.

**உபயோகம்** :—இதற்கு பலத்தை உண்டாக்குகிற குணமிருப்பதால் மந்தாக்கினி, பலஹீனம் இவைகளுக்கு இது வெகு நல்லமருந்து. கிருமிகளை உற்பத்தியாகாமல் செய்கிற குணம் இதற்கு இருப்பதால் கிருமி ரோகத்துக்கு இது மகா சிலாக்கியமானது. இதை ஒற்றடம் கொடுத்தால் வீக்கம் கரையும்.

**அளவு** :—20--30 கிறென்ஸ் தூளைக்கொடுக்கலாம்.

## டெராக்ஸெகம். (வேர்.)

Taraxacum.— டேராக்ஸேகம்.

**குணம்** :—இதின் மேலுக்கு அழுக்குள்ள நிறமாயும், உள்ளுக்கு வெள்ளையாயும் இருக்கும்.

செய்கை :—ஸோபாநாசகாரி, வியதாபேதகாரி, லகுவிரேஷனகாரி.

உபயோகம் :—நீர்கோவை, மேகம், எகுர்திக்கண்டரோகம், சரும ரோகம், மந்தாக்கினி இவைகளுக்கு இதைக்கொடுக்க குணமாகும். இதற்கு பித்தநீரை அதிகரிக்கவும், மலத்தைக் கழிக்கவும் குணமுண்டு.

அளவு :—4 அவுன்ஸ் வேரை $1\frac{1}{2}$ பையிண்ட் ஜலத்தில் போட்டு ஒரு பையிண்டாகக்காய்ச்சின கசாயத்தில் $1\frac{1}{2}$ அவுன்ஸ் விதம் கொடுக்கவேண்டும்.

## சடாமாஞ்சி. (வேர்.)

Valerian.— வேலிரியன்.

குணம் :—இதின் மேலுக்கு அழுக்குபடிந்ததாயும், உள்ளுக்கு வெள்ளையாயும் இருக்கும். கசப்பாயும், கறகறப்பாயும், ஒருவித வாசனையாயும் இருக்கும்.

செய்கை :—அங்கரகர்சன நாசகாரி, உஷ்ணகாரி.

உபயோகம்:—இதை சூதக ஜன்னி, காக்கைவலி, இரைப்பு, இருமல், சுவாசம், கிருமி, அக்கினிமந்தம், குடைச்சல், சுரம், குஷ்டம் இவைகளுக்கு கொடுக்க வெகு நல்ல மருந்து. சூதக ஜன்னிக்கு இதை அடிக்கடி உபயோகிக்கப்படும்.

அளவு :—வேரின் தூள் 20—40 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## அக்கரகாரம். (வேர்.)

Pyrethrum.— பைரீத்திரம்.

செய்கை :—திரவகாரி, வெப்பத்தைதரும்.

உபயோகம் :—வாயில் போட்டால் ஜலம் ஊறும். ஜிக்வாரோகம், தந்தரோகம், சுரம், தாகம், வாதம் முதலிய ரோகங்களுக்கு இதைக்கொடுக்கப்படும். ஒரு துண்டை மென்றால் நீர் வடிந்து பல்நோய் குணமாகும்

அளவு :—1 திராம் கொடுக்கலாம்.

## யூவா அர்ஸை. (இலை.)

Uva Ursi.— யூவா அர்ஸை.

குணம் :—இது பச்சை நிறமாயும், பளபளப்பாயும், மேபெள்ளமாயும், துவர்ப்பாயும், வாசனையாயும் இருக்கும்.

செய்கை :—பலகாரி, சங்கோஷணகாரி, லகுமூத்திரவர்த்தனகாரி.

உபயோகம் :—நேடித்த மூத்திரப்பை தாபன ரோகத்துக்கும், மூத்திரப்பையில் கல்தங்கி உண்டாகும் ரோகத்துக்கும், இதைக்கொடுக்கப்ப

டும். நீர் எரிச்சலை தணிக்க இத்துடன் பைகார்பொனெட் ஆப் சோடாவும் சேர்த்துக் கொடுக்கப்படும்.

அளவு :—10—30 கிறேன்ஸ் தூளைக்கொடுக்கலாம்.

## ஸ்டொராக்ஸ்.

Storax — ஸ்டொராக்ஸ்.

**குணம் :**—இது கட்டி அல்லது இளகலாயும், கறுப்பு சிவப்பு கலந்த நிறமாயும், சாம்பிறாணி வாசனையாயுமிருக்கும்.

**செய்கை :**—கபஹரகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம் :**—இதை அனுபானத்தில் கொடுக்க நேடித்த இருமல் முதலிய கபரோகங்களை செவ்வையாய்க்கண்டிக்கும்.

அளவு :—10—20 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## சாம்பிராணி (உறைந்ததயிலம்)

Benzoin—பென்ஜாயின்.

**குணம் :**—இது பட்டையிலிருந்து வடிந்து உறைந்த தயிலம். வாசனையாயும், இனிப்பாயுமிருக்கும்.

**செய்கை :**—கபஹரகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம் :**—இதின் தூபத்தை கக்குவாய் இருமல், துர்வாசனை இவைகளுக்கு உபயோகிக்கப்படும். இதை உள்ளுக்குக் கொடுப்பது அரிது.

## மேனு (உறைந்தப்பால்)

Manna.—மேனு

**குணம் :**—தித்திக்கும், ஜலத்திலும், சாராயத்திலும் கரையும்.

**செய்கை:**—மலகாரி.

**உபயோகம்:**—குழந்தைகளுக்கும், நாசூக்கு ஸ்திரீகளுக்கும் பேதிக்கு கொடுக்க இது வெகு சாந்தமானது. இதை தனிப்படக் கொடுப்பதைப்பார்க்கிலும் பேதிமருந்துகளோடு சேர்த்துக் கொடுப்பது சிலாக்கியம்.

அளவு :— 1—2 திராம் குழந்தைகளுக்கும், 1—2 அவுன்ஸ் பெரியவர்களுக்கும் கொடுக்கலாம்.

## நன்னாரி (வேர்)

Sarsaparilla—ஸார்ஸபேரில்லா.

**குணம் :**—இது மேலுக்கு கறுப்பாயும், உள்ளுக்கு மரமாயும், நல்ல வாசனையாயும், கொஞ்சம் கசப்பாயும் இருக்கும்.

**செய்கை**:—மூத்திர வர்த்தனகாரி, பலகாரி.

**உபயோகம்**:—மேகம், கண்டமாலை, சருமரோகம், சுரம், பித்தம், தாகம், தேகச்சூடு, உழலை, புண் முதலிய நேடித்த ரோகங்களுக்குக் கொடுக்க இது வெகு நல்ல மருந்து. இது நீர்கோவைக்கு நல்லது. இதைக் கொடுக்க ஸ்திரீ போகத்தால் உண்டாகும் சூடுத்தீரும். தேகத்துக்கு பலம் வரும்.

**அளவு**:—4 அவுன்ஸ் வேரை ஒரு பைண்ட் ஜலத்தில் போட்டுக்காய்ச்சின கசாயத்தில் 1—2 அவுன்ஸ் கொடுக்க பலத்தை உண்டாக்கி மூத்திரத்தை அதிகரிக்கும்.

## எட்டிக்கொட்டை (வித்து)

Nux Vomica—நக்ஸ்வாமிக.

**குணம்**:—இது தட்டை உருண்டை பில்லைகளாயும், கசப்பாயும் இருக்கும்.

**உபயோகம்**:—திமிர ரோகத்துக்கு இதை நோவு இருக்கும் இடத்தின் மேல் ஜலத்தில் ஊறவைத்து அறைத்துப் போட நோய் குணமாகும். ஸ்தம்ப ரோகத்துக்கு (Paralysis) கொடுத்தால் உணர்ச்சியை உண்டாக்கி சதைகளுக்கு வலுவைத்தரும். இதை அக்கினிமந்த ரோகத்துக்குக் கொடுக்க பலத்தை உண்டாக்கி குணமாக்கும். வீரிய விர்த்திக்குக் கொடுக்க இது வெகு நல்ல மருந்து. இதை சன்னி (13), வாதவலி இவைகளுக்கும் உபயோகிக்கப்படும். இதற்கு தேகத்தில் பலத்தை உண்டாக்கி தீபனத்தையும், மூத்திரத்தையும் அதிகப்படுத்த சக்தி உண்டு. இதற்கு முள்ளந்தண்டு கொடியின் நரம்புகளை உஷ்ணிக்கிற குணம் உண்டு. அளவுக்கு அதிகமானால் இசிவு காணும். 30 கிறேன்ஸ் சாப்பிட்டு பிராணன் போனதுமுண்டு. இதை போஜனத்துக்கு முன்பு அல்லது பின்பு சாப்பிடலாம். சாப்பிட்டுவரும்போது கை கால்களில் இசிவு கண்டால் தேகத்தில் மருந்து ஊறினதற்கு அடையாளம்; மருந்து உடனே நிறுத்தவும். ஒரு கிறேன் முதல் கொஞ்சங் கொஞ்சமாய் அதிகரித்து 3 கிறேன்ஸ தூளைக் கொடுக்கலாம். இதனால் சதைவெகுவானாலும் சரி, இசிவுகண்டாலும் சரி மருந்தை உடனே நிறுத்திவிடவும். எட்டி வேரைக் கொடுத்தால் மகா சர்ப்ப விஷக்கடித் தீரும்.

## ஜெண்ஷன் (வேர்)

Gentian—ஜெண்ஷன்.

**குணம்**:—இது மேல்புறம் பழுப்பாயும், உள்புறம் மஞ்சளாயும், வாசனையாயும், தித்திப்பாயும், கசப்பாயும் இருக்கும்.

**செய்கை** :—ஜாடராக்கினி வர்த்தனகாரி, பலகாரி.

**உபயோகம்** :—இதை நோயுற்றெழுந்தோருக்கும், சுரங்களுக்கும், கணுவாதத்துக்கும், கிருமிரோகத்துக்கும், மந்தாக்கினி ரோகத்துக்கும் கொடுத்தால் குணத்தைத்தரும்.

அளவு :— 10—30 கிறேன்ஸ் தூளைக் கொடுக்கலாம்.

## சிரட்டா (வேரோடுகூடிய பூண்டு)

### Chiretta—சிரட்டா.

**குணம்** :—இந்தியாவில் உண்டாகும் சிரட்டாபோல் இருக்கிற பூண்டுக்கு நிலவேம்பு என்று பெயர். அதுபோலவே இதுவும் கசப்பாயிருக்கும்

**செய்கை** :—ஜாடராக்கினி வர்த்தனகாரி, பலகாரி.

**உபயோகம்** நோயுற்றெழுந்தோருக்கும், மந்தாக்கினிக்கும் இதை கசாயமிட்டுக் கொடுக்க குணத்தைத் தரும். போஜனத்துக்குமுன் சாப்பிடவும்.

அளவு: — 4 திராம் சிரட்டாவை 1 பைன்ட ஜலத்தில் போட்டு காய்ச்சி வடித்து 1½—3 அவுன்ஸ் கொடுக்கலாம்.

## ஜாலப் (கிழங்கு)

### Jalap—ஜாலப்.

**குணம்** :—மேலே கறுத்தும், உள்ளே மஞ்சளாயும் இருக்கும்.

**செய்கை** :—விரேசனகாரி.

**உபயோகம்** :—இதை மலக்கட்டு, கிருமி, மகோதரம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இது பேதியை நன்றாய் உண்டாக்கும். அதிகமாய் கொடுத்தால் பேதியாகி வயிற்றைப் புண்ணாக்கும். கிருமிகளைப் போக்க இத்துடன் ரஸபஸ்மம் சேர்த்துக் கொடுக்கவும். நீர் கோவைத்தீர கிராக்ஷ உப்பைச் சேர்த்துக் கொடுக்கவும். பேதிக்குக் கொடுக்கும்போது வயிறு கடுக்காமலிருக்க பெப்பர்மெண்டு, சுக்குச் சேர்ந்த கசாயத்தில் இதைச்சேர்த்துக்கொடுக்கப்படும்.

அளவு :— 10—30 கிறேன்ஸ்தூள் பெரியவர்களுக்கும், 2—8 கிறேன்ஸ் குழந்தைகளுக்கும் சுக்குக் கசாயத்தில் கொடுக்கவும்.

## ஸ்காமோனி (ரோஜனப்பிசின்)

### Scammony—ஸ்காமோனி.

**குணம்** :—இது பச்சைக்கறுப்பு கலந்த நிறமுள்ளக் கட்டிகளாய் இருக்கும். இது கசப்பாயும் கெட்டவாசனையாயும், காரமாயும் இருக்கும். ஜலத்தில் கரையும்.

**செய்கை** :—ஜலவிரேஷனகாரி.

**உபயோகம்** :—இதற்கு வயிற்றைக் கடுத்து தண்ணீர்த் தண்ணீராய் பேதியாக்கிற குணமுண்டு. இதை தனியாய் கொடுக்கக் கூடாது. ரசபஸ்மம், சுக்கு, ரேவல் சின்னி முதலியவைகளோடு சேர்த்துக்கொடுக்க செவ்வையாய் பேதியாகி, கிருமி, நீர்கோவை, மலமந்தம் முதலியவைகள் தீரும்.

**அளவு** :—2–10 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## மேஜிரியன் (வேர்ப் பட்டை)

Mezereun :—மேஜிரியன்.

**குணம்** :—இதை தேகத்தின் பேலே போட்டால் எரிச்சலைத் தரும். நேரப்பட வைத்தால் கொப்பளிக்கும்.

**செய்கை** :—சுவேதகாரி, மூத்திரவர்த்தனகாரி, ஸ்போடக ரி.

**உபயோகம்** :—இதைக்கொடுக்க மூத்திரம், வியர்வை இவைகள் அதிகப்படும். நாள்பட்ட மேகச்கில் வாத ரோகத்துக்கு இதையும் நன்னாரிவேரும் சேர்த்து கசாயமிட்டுக் கொடுக்க வெகுசீக்கிரத்தில் குணத்தைக் காட்டும். சருமத்தின் மேலே போட முதலில் எரிச்சலை உண்டாக்கி பிறகு கொப்பளிக்கும்.

## சாதிக்காய் (பருப்பு)

Nutmeg :—நட்மெக்.

**குணம்** :—இது அண்டவடிவாயும், கட்டியாயும், நல்லவாசனையாயும் இருக்கும்.

**செய்கை** :—நித்திராகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்** :—போர்ட ஒயினோடு இதின் சூரணத்தைச் சேர்த்துக் கொடுக்க உஷ்ணித்து வாயுவை கண்டிக்கும். பேதிமருந்துகளோடு சேர்த்துக்கொடுக்க வயிற்றுக்கடுப்பை நீக்கும். அசதி ஜன்னிக்கு இதைக்கொடுக்கக்கூடாது.

**அளவு** :—5—15 கிறேன்ஸ் தூளைக்கொடுக்கலாம்.

## சாதிப்பத்திரி.

Mace :—மேஸ்

**குணம்** :—இது சாதிக்காய்யின் மேல் மூடிக்கொண்டிருக்கும் பதார்த்தம்.

**செய்கை** :—நித்திராகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்** :—சாதிக்காயின் செய்கைகள் இதற்கு இருப்பதால் சாதிக்காய்க் கொடுக்கும் ரோகங்களுக்கு இதைக்கொடுக்கலாம்.

## கர்ப்பூரம். (செடியின் சத்து.)

Camphor.—காம்பர்.

குணம் :—இதை செடியின் சமூலம் துண்டாக்கி ஜலத்திலிட்டுக் காய்ச்சி பதங்கித்து எடுக்கப்படும்.

செய்கை :—சுவேதகாரி, உஷ்ணகாரி, மேல்த்தட்டவ சமனகாரி.

உபயோகம் :—சுரம், ஸில்வாதம்; முதலியவைகளுக்கு சுவேதகாரிகளோடு சேர்த்துக்கொடுத்தால் வியர்வை பிறப்பித்து குணமாக்கும். சடாமாஞ்சி, பெருங்காயம் இவைகளோடுச் சேர்த்துக்கொடுக்க வலிப்புகள் (5), சூதக ஜன்னி இவைகள் குணமாகும். இதை மோந்தால் ஜலதோஷம் தீரும். இதின் வெந்நீர் ஆவியை உட்கொண்டால் கபரோகத்தை உடனே சாந்தமாக்கும். கருப்பாசனம், நீர்ப்பை, நீர்த்தாரை, நீர்க்கட்டு, ஆசனம், இவைகளின் தாபனத்தை நீக்க இது மகா நல்ல மருந்து. இதற்கு நாள்ப்பட்ட சரும ரோகத்தை குணமாக்க சக்தி உண்டு. வாந்திபேதிக்கு அதிக அளவில்க்கொடுக்க குணத்தைத் தரும்.

அளவு :—5—10 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## கருவாப்பட்டை. (பட்டை.)

Cinnamon.—ஸின்னமன்.

குணம் :—இது சுருண்டு நார்நாராயும், நல்லவாசனையாயும், காரணமாயும் இருக்கும்.

செய்கை :—கர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி, ஜினக்தகாரி.

உபயோகம் :—இதை தனியாக கொடுக்காமல் துவர்ப்பு மருந்து, கசப்பு மருந்து, பேதிமருந்து இவைகளோடுச் சேர்த்துக் கொடுக்கப்படும். இது வாயுவைக் கண்டித்து மலத்தைக் கட்டும். ஆகையால குழந்தைகளுக்கு காணும் பேதி சிகிச்சையில் இதைக்கொடுக்க வெகு சகுணத்தைத் தரும். அதிசாரம், அக்கினி மந்தம், வயிற்று உப்பல், வாந்தி இவைகளுக்கு இதைக் கொடுக்க தவராமல் நன்மை செய்யும்.

அளவு :—5—20 கிறேன்ஸ் தூள்க்கொடுக்கலாம்.

## நேர்வாளம் (கொட்டை.)

Croton—குரோட்டன்.

குணம் :— இது சற்றேறக்குறைய ஆமணக்கு முத்துபோலிருக்கும். இது நேபாளதேசத்திலிருந்து வருகிறது.

**செய்கை :**—அதிவிரேசன காரி.

**உபயோகம் :**—நரம்புகளைப்பற்றி வரும் வலி ரோகங்களுக்கு இது அடுத்த அவுஷதம். உன்மாதரோகம், ஸம்ஸ்தம்பரோகம், மலக்கட்டு, சன்னி, நீர்க்கோவை, இவைகளுக்குக்கொடுக்க செவ்வையாய்க்கண்டிக்கும். கர்ப்பஸ்திரீ, பலஹீனர், வயது சென்றவர், சிறுகுழந்தை இவர்களுக்கும், வயிறு தாபனரோகத்துக்கும் இதைக்கொடுக்கலாகாது. இது தனியாகக் கொடுப்பது அரிது. இதற்கு சீக்கிரத்தில் தண்ணீர்த் தண்ணீராய் பேதியை உண்டாகிற குணமுண்டு.

**அளவு :**—1—5 கிறேன்ஸ்க் கொடுக்கலாம்.

## சிற்றாமணக்கெண்ணெய் (எண்ணெய்.)

### Castor-oil.—காஸ்டர் ஆயில்.

**குணம் :**—துல்லியமாயும், வைக்கோல் நிறமாயும், இருப்பதுதான் நல்லசரக்கு. ஆல்கோஹால் சாராயத்தில் கரையும். இது வேகவைத்து எடுத்த எண்ணெய், வறுத்து எடுத்த எண்ணெய், பச்சையாக எடுத்த எண்ணெய் என 3 வகைப்படும்; பச்சை எண்ணெய் வெகு சிரேஷ்டமானது.

**செய்கை :**—விரேசனகாரி.

**உபயோகம் :**—இதைக்கொடுத்தால் உஷ்ணிக்காமலும், வேதனைசெய்யாமலும் சாந்தமாய் பேதியாக்கும். மூலம், வயிறு, குடல், மூத்திரஉறுப்புகள், இவைகளின் ரோகங்கள், மலத்துவாரமடைப்பு, இவைகளுக்கும்; குழந்தைகள், பிரஸவித்த ஸ்திரீகள், கர்ப்பஸ்திரீகள், இவர்களுக்கும், இதைபேதிக்குக் கொடுக்க வெகு நல்ல மருந்து. அயம் மருந்துகளை சாப்பிடுவதால்உண்டாகும்மலச்சிக்கலை நீக்க இதைக்கொடுக்கலாம்.

**அளவு:**—½ (ந)—1½ (கந) அவுன்ஸ் எண்ணெய்யை, காபி, பால், சுக்குக்கசாயம் முதலியவைகளில் சேர்த்துக் கொடுக்கலாம்.

## மிளகு. (உலர்ந்தகாய்.)

### Pepper.— பெப்பர்.

**குணம்:**—இதில் வெள்ளை, கறுப்பு, என 2 விதங்களுண்டு. காரமாயும் வாசனையாயும் இருக்கும்.

**செய்கை :**—கர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்:**—இதைக் கொடுத்தால் உஷ்ணித்து வாயுவை ஹரிக்கும், பசியை உண்டாக்கும். கண்கட்டியின்மேல் இதை ஜலத்தால் உரைத்து

போட உடனே குணமாகும். பேதி, அதிசாரம், அஜீர்ணம் இவைகளுக்குக்கொடுக்கத் தவராமல் குணத்தைக்காட்டும்.

அளவு:—5–20 கிறென்ஸ் கொடுக்கலாம்.

## வால்மிளகு. (உலர்ந்தகாய்.)

Cubeb.— குயுபேப்.

**குணம்:**—இது மெத்த வாசனையாயும், காரமாயும், விறுவிறுப்பாயும் இருக்கும். காயில் காம்பு ஒட்டிக்கொண்டு வால்போல் இருக்கும்.

**செய்கை:**—ஜாடராக்கினி வர்த்தனகாரி, கர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்:**—வெள்ளை விழுத்தலுக்கு இதைக்கொடுக்க வெகு குணத்தைத்தரும். ஆனால் ரணம் ஆறினபிறகு ஜாக்கிரதையாய்க் கொடுக்காவிட்டால் பீஜரோகமும், நீர் எரிவும் உண்டாக்கும். எலும்புருக்கி ரோகத்துக்குக் கொடுக்கலாம். இது நாள்ப்படச் சாப்பிடக்கூடாது.

அளவு:—20 கிறேன்ஸ் முதல் 2 திராம் வரையில் இதின் தூளை குங்குலியத்தயிலம், பால், ஜலம் இவைகளில் சேர்த்துக் கொடுக்கப்படும்.

## கஞ்சா. (இலை.)

Hemp.— ஹேம்.

**குணம்:**—புஷ்பித்தபின்பு செடியை வெட்டி, உலரவைத்த சரக்கு தான் இது.

**செய்கை:**—நித்திராகாரி, வேதநாசாந்தகாரி, உச்சாககாரி, அங்காகர்ஷன நாசகாரி.

**உபயோகம்:**—அதிவேதனையுள்ள நோய், நித்திரையில்லாமை, நாய்க்கடி ஜன்னி, ரணஜன்னி, வாந்திபேதி, வலிரோகங்கள் இவைகளுக்கு இதைக்கொடுக்க வெகு நல்ல மருந்து. கஞ்சாவும் புகையிலையும் சேர்த்து புகைக்குடிப்பதும் உண்டு. இதை அதிகமாய் உள்ளுக்குக் கொடுத்தால் ஆடல், பாடல், நகைத்தல், இடைவிடாமல் பேசுதல், கூத்தாடல் முதலியவைகள் காணும். இதற்கு தீபனத்தையும், வீரிய விர்த்தியையும் உண்டாகுவதற்கு வல்லமை உண்டு.

அளவு:—1—1½ கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## மாசிக்காய். (செடியின் உலர்ந்தரசம்.)

Gall.— கால்.

**குணம்:**—ஒருவித பெண்வண்டானது மாசிக்காய் செடியின் துளிரைத் துளைத்து அதில் முட்டையிடும் அப்போது துளிரிலிருந்து ரசம் வடிந்து

காயப்போலக் கட்டிக்கொள்ளும். முட்டைபொரித்து குஞ்சு பெரிதாகி காயைத்துளைத்துக்கொண்டு வெளிப்பட்டுவிடும். இது துவர்ப்பாய் இருக்கும்.

**செய்கை:**—சங்கோஷனகாரி.

**உபயோகம்:**—இதின் தூளை வெந்நீரிலிட்டு வாயைக் கொப்பளித்தால் வாய்ரணம் குணமாகும். ரத்தபேதி, அதிசாரம், சீதபேதி, சீதசுரம் இவைகளுக்குக் கொடுக்க இது தகுதியான மருந்து. வெள்ளை விழுதலுக்கு இதின் தூள் 20 கிறேன்ஸ் விதம் தினம் 2—3 தடவைக்கொடுக்க வெகு சகுணத்தைக் காட்டும். இதின் தூளை நாஸ்யமிட்டால் ரத்த பீநசம் தீரும்.

**அளவு:**—8—16 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## டிஜிடேலிஸ். (இலை.)

Digitalis.— டிஜிடேலிஸ்.

**குணம்:**—இது கசப்பாயும், குமட்டலாயும் இருக்கும். இலை நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**செய்கை:**—மூத்திரவர்த்தனகாரி. முதலில் உஷ்ணித்து பிறகு சமனகாரியாகும்.

**உபயோகம்:**—இது உற்சாகப்படுத்தி இருதய நடையின் பலத்தையும் துடிப்பையும் குறைக்கும், மூத்திரத்தை அதிகமாக்கும். இதை நீர்க்கோவை, சுரம், இருமல், க்ஷயம், தாபனம், இருதயரோகம், முதலிய கடூரமான ரோகங்களுக்குக் கொடுக்கக் குணமாகும். இது தேகத்தில் தங்கி ஒரே தபா குணத்தைக் காட்டுவதுமுண்டு. ஆதலால் குமட்டல், நாடி விட்டு விட்டு அடித்துக்கொள்ளுதல் கண்டால் மருந்தை நிறுத்திவைக்கவும். மருந்தின் வேகத்தை தணியும்வரையில் நோயாளியைப் படுக்கையில்தான் இருக்கச்செய்யவேண்டியது.

**அளவு:**—1—3 கிறேன்ஸ் தினம் 3 தடவைக் கொடுக்க மூத்திரத்தை அதிகரிக்கும்.

## பெல்லடொனா. (இலை.)

Belladonna.— பெல்லடோனா.

**குணம்.**—இது கசப்பாயும், குமட்டலாயும், பச்சை நிறமாயும் இருக்கும்.

**செய்கை:**—அங்காகர்சனநாசகாரி, வேதனைசாந்தகாரி.

**உபயோகம்:**—இதை குதகசூலை, கோரியா, முகசன்னி, குடைச்சல், சாக்கைவலி, சந்நிகசிலேஷ்மம், கக்கிருமல், இவைகளுக்கு கொடுக்கமெத்த

நன்மை செய்யும். கண்ணிலிட கண்த்தாரை விரியும். இதின் கசாயத்தின் ஆவியை உட்கொண்டால் சுவாச காசம் தீரும். இதை மேலுக்குப்போட நோய் தீரும். அளவுக்கு அதிகமானால் மயக்கம், குமட்டல், பார்வை மந்தம், கண்தாரை விரிவு, தொண்டை குறுகிப்போகுதல் அவைகளைக்காணும். இவைகளைக் கண்டவுடனே மருந்தை நிறுத்தவும். இதை ஜாக்கிறதையாய் கொடுக்கவேண்டியது.

அளவு:—1—5 கிறேன்ஸ் படிப்படியாய் அதிகரித்து கொடுக்கலாம்.

## முளாகாய். (உலர்ந்த பழம்.)

Chillies—கூிஸ்லிஸ்.

செய்கை :—அதி உஷ்ணகாரி, க்ஷோணகாரி.

உபயோகம் :—இது அக்கினி மந்தரோகத்துக்குக் கொடுக்கப்படும்.

அளவு :—2—10 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## ஊமத்தை. (இலை-விதை.)

Stramonium—ஸ்டரமோனியம்.

குணம் :—இதில் கறு ஊமத்தை, வெண் ஊமத்தை என 2 விதங்கள் உண்டு. இதின் காய் உருண்டையாயும், மேலே முள்ளுகளாயும் இருக்கும். விதை சொற சொறப்பாயும், கசப்பாயும் இருக்கும்.

செய்கை :—அங்காகர்சன நாசகாரி, நித்திராகாரி, வேதனைசாந்தகாரி.

உபயோகம் :—ஈல்வாதம், குடைச்சல் இவைகளுக்கு உள்ளுக்கும் மேலுக்கும் உபயோகிக்கலாம். இதின் இலையும் புகையிலையும் சேர்த்து சுருட்டுப்பிடித்தால் சுவாச காசம், உடனேத்தீரும். இது கொடிய விஷம். இதை அதிக அளவில், கொடுத்தால் கெடுதியை உண்டாக்கும். இதை வயது தளர்ந்தவர்களுக்குக் கொடுக்கக்கூடாது. இலையை வதக்கிக் கட்ட கட்டிகள் கரையும். இதை சன்னி (13), சுரம் இவைகளுக்குக் கொடுக்க வெகு நல்லமருந்து.

அளவு :—1—4 கிறேனஸ் இலைத்தூள், அல்லது $\frac{1}{4}$ (வ) முதல் 1 கிறேன்ஸ் விதைத்தூள் கொடுக்கலாம்.

## குரோசானி ஓமம். (இலை-விதை.)

Hyoscyamus—ஐயாஸியாமஸ்.

குணம் :—இது பச்சை, மஞ்சள் கலந்த நிறமாயும், கசப்பாயுமிருக்கும்.

செய்கை:—வேதனைசாந்தகாரி, நித்திராகாரி, அங்காகர்சன நாசகாரி, லகு உஷ்ணகாரி.

**உபயோகம்** :—இசிவு, வாதநோய், இருமல், அதி மூத்திரம், கபேப்பு, கரப்பான் இவைகளுக்குக்கொடுக்க வெகு உபயோகமுள்ள மருந்து. பேதி மருந்துகளின் துர்குணத்தை நீக்க இதைச்சேர்க்கப்படும். இதை கொடுக்க நோய், எரிச்சல், இவைகளைத் தணித்து நித்திரையை உண்டாக்கும். இது மலத்தைக்கட்டாது. இதின் வித்துக்கு அதிக வேகமுண்டு. ரணம், கிரந்தி மூலநோய் இவைகளுக்கு இலையை போல்டிசாகவும், ஒற்றடமாகவும் உபயோகிக்கலாம். அளவுக்கு அதிகமானால் பிதற்றல், உறக்கல் முதலியவைகள் காணும்.

**அளவு** :—3—12 கிறேன்ஸ் இலைத்தூள்க் கொடுக்கலாம்.

## கர்ப்பூரத்தயிலம். (தயிலம்.)

Terpentine-oil—டர்பன்டயின் ஆயில்.

**குணம்** :—இது வெள்ளையாயும், வாசனையாயும், விறு விறுப்பாயும், கசப்பாயும் இருக்கும். இது ஜலத்தில் கொஞ்சமாகவும், சாராயத்தில் அதிகமாயும் கரையும்.

**செய்கை** :—க்ஷோனகாரி, மூத்திரவர்த்தனகாரி, சுவேதகாரி கிருமிநாஷகாரி. உஷ்ணகாரி, சகோஷணகாரி, மலகாரி.

**உபயோகம்** :—இதை உள்ளுக்குக்கொடுத்தால் மூத்திரம், வியர்வை, உஷ்ணம், இவைகளை அதிகரிக்கும், கிருமிகளை வெளிப்படுத்தும், ரத்தவடிதலை நிறுத்தும். இது பிரசவ சுரத்துக்கு வெகு நல்லது. கீல்வாதம், இடுப்பு வலி முதலிய வாதரோகங்களுக்கு மேலேத்தடவி தேய்த்தால், வெகு நன்மைசெய்யும். காது செவிடு உண்டானால் இதை காதிலிட சிலாக்கியமானது. பிரமேகம், எலும்புருக்கி இவைகளுக்கு இதை உள்ளுக்குக் கொடுக்கத் தகுதியானது.

**அளவு** :—8—30 துளிக்கொடுக்க உஷ்ணிக்கும், மூத்திரத்தை விருத்திக்கும். ½ (ற) —2 அவுன்ஸ்க் கொடுக்க பேதியாகும், கிருமிகளை வெளிப்படுத்தும். இதை சிற்றாமணக்கெண்ணெயுடன் சேர்த்துக் கொடுக்கப்படும்.

## தார். (தயிலம்.)

Tar—டார்.

**குணம்** :—இது இளகலாயும் தளமாயும், கறுப்பாயும், இருக்கும். பையின் மரத்துண்டுகளை கொளுத்தினால் தார் அடியில் இறங்கும்.

**செய்கை** :—உஷ்ணகாரி.

**உபயோகம்** :—இதை குஷ்டம், சொரி, சிரங்கு முதலிய சருமரோகங்களுக்கு தடவி வர குணமாக்கும். இருமலுக்கு இதை வெந்நீரில் கொஞ்சம் போட்டு ஆவியை உட்கொள்ள சகுணத்தைத் தரும்.

## ஜூனிபர். (கனி.)

Juniper—ஜூனிபர்.

**செய்கை :**—மூத்திர வர்த்தனகாரி.

**உபயோகம் :**—இதுமூத்திரத்தை விருத்திக்கும். நீர்க்கோவை ரோகத் துக்குக் கொடுக்க வெகு குணத்தைத்தரும். கனியிலிருந்து தயிலத்தை எடுக்கப்படும். தயிலத்தில் 2—10 துளி, அல்லது கசாயத்தில் 1—4 அவுன்ஸ் கொடுக்கலாம்.

## ஸெவைன். (தளிர்.)

Savine—ஸேவைன்.

**குணம் :**—இந்த செடியின் தளிர்கள் பச்சையாயும் துர்வாசனையாயும் இருக்கும்.

**செய்கை :**—உபயோகம்—இதை குறைந்த அளவில்க் கொடுத்தால் மூத்திரமும் உஷ்ணமும் அதிகரிக்கும், சூதகத்தை தாராளப்படுத்தும். பிண்டத்தை வெளியாக்க இதைகொடுப்பதுமுண்டு. இதை அதிக அளவில்க் கொடுத்தால் விஷமிக்கும். இதின் தயிலத்தில் 2—5 துளி சர்க்கரையில் விட்டுக்கொடுக்கலாம்.

## வெள்ளைப்பூண்டு. (பூண்டு.)

Garlic—கார்லிக்.

**செய்கை :**—ஷோனகாரி, உஷ்ணகாரி, கபஹரகாரி, மூத்திரவர்த்தனகாரி, கிருமிநாஷகாரி.

**உபயோகம் :**—இதை அரைத்து மெல்த் தடவ நோய்த் தணியும்; உட்கொள்ள மூத்திரமும், உஷ்ணமும் அதிகரிக்கும், கபத்தை வெளிப்படுத்தும், கிருமிகளை நீக்கும். இத்துடன் எண்ணெய்யைச் சேர்த்துக்காய்ச்சி வடித்து காதிலிட செவிநோய் தீரும்; காசம், சுவாசம், இருமல், கிருமி ரோகம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

**அளவு :**— ½ (ஐ)—2 திராம் கொடுக்கலாம்.

## நரிவெங்காயம் (பூண்டு.)

Squill ஸ்குயில்.

**குணம் :**— இது உருண்டையாயும் வெங்காயத்தைப்போல் புறாதளாயும் இருக்கும், குட்டை உள்ளது.

**செய்கை :**— கபஹரகாரி, மூத்திரவர்த்தனகாரி, வமனகாரி, விரேசனகாரி.

உபயோகம் :— இதை தாபனங்கண்டிருக்கும்போது கொடுக்கலாகாது. இருமலுக்கு கபஹரகாரியுடன் கொடுக்கவும். நீர்கோவைக்கு ரச பஸ்மம், டிஜிடெலிஸ் இவைகளோடு சேர்த்துக்கொடுக்க தவராமல் கண்டிக்கும். அளவுக்கு அதிகமானால் விஷமிக்கும்.

அளவு :— 1—3 கிறேன்ஸ் தூளைக்கொடுக்கலாம்.

## மூசாம்பரம்-கரியபோளம்.

### Aloes—ஆலோஸ்.

குணம் :— இதை கற்றாழையிலிருந்து எடுத்து உலரவைத்துக்கொள்ளும் பதார்த்தம். இதில் 4 விதங்களுண்டு. ஒன்றுக்கொன்று நிறத்தில் வித்தியாசமேயொழிய செய்கையில் பேதமில்லை.

செய்கை :— பலகாரி, தீபனகாரி, விரேசனகாரி.

உபயோகம் :— இதை கொஞ்சமாகக்கொடுக்க குடலுக்கு பலத்தையும், பசியையும் உண்டாக்கும். இது பெருங்குடலை உஷ்ணிக்கிறபடியால் கர்பஸ்திரீ, மூலரோகி இவைகளுக்குக்கொடுக்கக்கூடாது. காமாலை, மந்தாக்கினி, மலக்கட்டு இவைகளுக்கு இதை கொடுக்க குணமாக்கும்.

அளவு:— 6—20 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## கால்சிகம் (கிழங்கு-விதை.)

### Colchicum—கால்சிகம்.

குணம் :— கிழங்கு பச்சையில் வெள்ளையாயும், உலரவைத்தால் பழுப்பாயும் இருக்கும். இதை பில்லைகளாய் கத்திரித்து விற்கப்படும்.

செய்கை :— வேதநாசார்தகாரி, விரேஷனகாரி, மூத்திரவர்த்தனகாரி, சுவேதகாரி, சமனகாரி.

உபயோகம் :— இது கணுவாதம், சூலைகட்டு முதலிய கரேரோகங்களுக்குக்கொடுக்க வெகு நல்ல மருந்து. இதை அளவுக்கு அதிகமானால் விஷமிக்கும்.

அளவு :— 1—5 கிறேன்ஸ் கிழங்கு அல்லது விதைதூள் கொடுக்கலாம்

## புகையிலை (உலர்ந்த இலை.)

### Tobacco—டொபாக்கோ

குணம் :— இது கசப்பும், காரமும், குமட்டலும் உள்ளது. இதில் பொட்டிலுப்பு இருக்கிறது.

செய்கை :—அங்காகர்சனநாசகாரி, வமனகாரி, மூத்திரவர்த்தனகாரி, மலகாரி, திரவகாரி, நஸ்ஸியம்.

உபயோகம் :— மலக்கட்டு, நீர்கட்டு, குடல்வாதம், இவைகளுக்கு இதின் கசாயத்தை உபயோகிக்கலாம். சுருட்டுப்பிடித்தால் மலம் இறங்கும். இதின் தூளை நஸ்ஸியம் செய்ய பீனசரோகம் குணமாகும். இதை வாயிலடக்க உமிழ்நீர் வடிந்து தந்தநோய் குணமாகும். இதற்கு இருதயத்தின் நடையைக்குரைக்கிற குணம் இருப்பதால் அளவுக்கு அதிகமானால் மார்புநோய் உண்டாகும். குழந்தை, பலஹீனர், கிழவர் இவர்களுக்கு இதை கொடுக்கக்கூடாது.

## இலெடீரியம்—Elaterium.

குணம் :—இது காய் ரஸத்திலிருந்து அடியில் படிகிற வண்டல். இது சிறு தட்டை பில்லைகளாயிருக்கும். பிட்டுப்பொடியாக்கலாம். கசப்பாயிருக்கும்.

செய்கை :—ஜலவிரேஷனகாரி.

உபயோகம் :—இதைக்கொடுத்தால் தண்ணீர் தண்ணீராய் பேதியாக்கும். வாந்தி குமட்டல் காண்வதுமுண்டு. அளவுக்கு அதிகமானால் கொடிய நஞ்சாகும்; வயிற்றைப் புண்ணாக்கும். சிரோ ரோகங்கள், நீர் ஏற்றம் இவைகளில் கெட்ட நீரை வெளியாக்கக் கொடுக்கப்படும். இத்துடன் சுக்குத்தூளைச்சேர்த்துக் கொடுக்க வாந்தி, வயிறுக்கடுப்பு முதலியவைகள் உண்டாக்காமல் பேதியாக்கும். மெலிந்த தேகமுடையவர்களுக்கு இதை வெகு ஜாக்கிறதையாய்க் கொடுக்கவேண்டியது.

அளவு :— $\frac{1}{16}$ (பஉ) முதல் $\frac{1}{4}$ (வ) கிறேனஸ் மாத்திரை செய்துக் கொடுக்கலாம்.

## கைநோ—Kino.

குணம் :—இது சிவப்பாயும், துவர்ப்பாயும் இருக்கும்.

செய்கை :—அதிசங்கோசனகாரி.

உபயோகம் :—இதை ரத்தபேதி, சீதபேதி, அதிசாரபேதி, துர்பலம், தொண்டை ரணம், உண்ணுக்குவளர்தல் முதலிய ரோகங்களுக்கு உபயோகிக்கப்படும். இதை குழந்தைகளுக்குக் கொடுக்கத்தகுதியானது.

அளவு :—10 முதல் 20 கிறேன்ஸ் ஜலத்தில்கொடுக்கலாம்.

## மட்டிப்பால்.

உபயோகம் :—நித்திரையில் கால்களை முறுக்கச்செய்கிற பாதாக்ஷபக வாதம், ஜலதோஷம், தலைவலி, இவைகள் தீரும்.

## லவங்கப் பட்டை.

உபயோகம் :—அதிசாசம், காசம், வாதம், தீரும்,

## கடுக்காய் (காய்-பூ-பிஞ்சி.)

Ink-nut—இன்க்நட்.

உபயோகம் :—(காய்) கண், ஆண்குறி, நாக்கு இவைகளின் ரோகங்களும், வாதமும், அதிசாரமும் குணமாகும். (பிஞ்சி) மலச்சிக்கல், சீதம், ஆசனக்கடுப்பு குணமாகும். (பூ) க்ஷயம், ரத்தபித்தம், மூலம், ஆமம், கிரகணி இவைகள் தீரும்.

## சித்தரத்தை-சன்னராஷ்டகம் (வேர்.)

Galangal—காலேன்கால்.

செய்கை :—கபஹரகாரி, சுரஹரகாரி, ஜாடராக்னி வர்த்தனகாரி.

உபயோகம் :—இதை காசம், திரிதோஷம், சுரம், சிரஸ்தாபம், சிலேஷ்மம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

## வட்டதிருப்பி.

உபயோகம் :—பித்தரோகம், வாத சிலேஷ்மம் தீரும்.

## கோஷ்டம். (வேர்.)

செய்கை :—தீபனகாரி, வீரியவர்த்தனகாரி, பலகாரி.

உபயோகம் :—சுரம், வாதம், இருமல், மூலம் தீரும். விந்து ஊறும்.

## அதிவிடையம். (வேர்.)

செய்கை :—பலகாரி, ஜாடராக்கினி வர்த்தனகாரி.

உபயோகம் :—சுரம், அதிசாரம், சளி தீரும்.

## பீதரோகணி.

உபயோகம் :—காசம், இமையைப்பற்றிய நீர்ப்பில்லம், கிரிச்சரம் தீரும்.

## பேரரத்தை-தும்பராஷ்டகம்.

உபயோகம் :—இசிவு, வலிப்பு, வாதம், கபம், சுரம் தீரும்.

## செவ்வியம்.

உபயோகம் :—சுரம், கோழை, காசம் தீரும்.

## விலாமிச்சு வேர்.

உபயோகம் :—சுரம், மேகநீர், கண்ணெரிவு, பித்தம், தாகம், மயக்கம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

## பறங்கிப் பட்டை.

உபயோகம்:—இதை வாதம் (80), நீர் எரிவு, கபம், வாந்தி, புண், மேகம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

## பிசின் பட்டை.

உபயோகம்:—வாதம் (80), வெப்பம் இவைகள் தீரும்.

## சன்னலவங்கப்பட்டை.

செய்கை-உபயோகம்:—மூலரணம், கிரகணி தீரும்.

## லவங்கப்பத்திரி.

உபயோகம்:—சுரம், இருமல், மேகம், தீரும்.

## தாளிசப்பத்திரி.

செய்கை:-ஜடராக்கினிவர்த்தனகாரி, சங்கோஷணகாரி. சுரஹரகாரி.

உபயோகம்:—இதை அஸ்திசுரம், பீநசம், பேதி, இருமல், இளைப்பு, வாந்தி, தொண்டைக்கம்மல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

## சிறுநாகப்பூ.

உபயோகம்.—காசம், வாதம் இவைகள் தீரும்.

## கூகைநீர்.

உபயோகம்:—கோழை, யோனிரோகம், வாதம் தீரும்.

## வெம்புரிக்காய்.

உபயோகம்:—விக்கல், மேகம், கர்ணரோகம் தீரும்.

## வாய்விளங்கம்.

உபயோகம்:—குன்மம், சிரசு வயிறு நாசி இவைகளின் ரோகங்கள், பாண்டு, குஷ்டம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

## தக்கோலம்.

செய்கை:—பலகாரி, வீரிய வர்த்தனகாரி.

உபயோகம்:—பாண்டு, சுரம், வாதம் தீரும்.

## விழல் அரிசி.

உபயோகம்:—சுரம், வாதம், பித்தம், சிலெஷ்மம், மேகம் தீரும்.

## வெப்பாலை அரிசி.

உபயோகம்:—குடல்வியாதி, வயிற்றுவலி, வாதம் தீரும்.

## கார்போக அரிசி.

உபயோகம்:—கிரந்தி, வாதம், சிலேஷ்மம் தீரும்.

## வாலுழுவை அரிசி.

உபயோகம்:—சுரம், ரத்தபேதி, பித்தம், கபெப்புத்தீரும்.

## சமுத்திர சோஷிவிதை.

உபயோகம்:—சுரோணிதவாதம், அதிமூத்திரம். கபம் தீரும்.

## கருஞ்சீரகம் (விதை.)

உபயோகம்:—சிரோரோய், கண்ணோய், மண்டைகரப்பான், உள்சூடு சிரூபீநசம், இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

## நாய்க்கடுகு (விதை.)

உபயோகம்:—சுரம், சுரோணிதவாதம், குன்மம், தீரும்.

## வெந்தியம் (விதை-கீரை.)

உபயோகம்:—(விதை)-சினிக்தகாரி-ரத்தபேதி, சீதபேதி, காசம், உட்சூடு, கணம், மேகம், மாந்தம், தீரும். (கீரை) காசம், மந்தம், அருசிதீரும்.

## நீரடி முத்து.

உபயோகம்:—தினவு, சொரி, அக்கி, குஷ்டம், வாதம் தீரும்.

## சேங்கொட்டை.

செய்கை:—வீரிய வர்த்தனகாரி.

உபயோகம்:—இதை உள்மூலம், கீல்வாதம், சொரி, சிரங்கு, குன்மம் வாதம், மேகம், இவைகளுக்கு சுத்திசெய்து லேகியம், எண்ணெய் முதலிய ரூபமாய் செய்துக்கொடுக்கப்படும்.

## பச்சைக்கர்ப்பூரம்.

உபயோகம்;—குன்மம், கீல்வாதம், சிலெஷ்மம் தீரும்.

## சந்தனம் (மரம்.)

செய்கை-உபயோகம்:—சீதளகாரி, உட்சூடு, பிரமேகம் தீரும்.

## வெள்ளை குங்கிலியம்.

உபயோகம்:—மேகப்புண், நீர்த்தாரைப்புண், உள்மூலரணம், சீழ்பிரமேகம் இவைகளுக்கு இது வெகு நல்ல மருந்து.

## குக்கில்.

உபயோகம்:—நகசுற்றி, கர்ணரோய், கபம் தீரும்.

## அரக்கு.

உபயோகம்:—சுவாசம், வாதம், சன்னி, அஸ்திதாபம், கபம், இவைகளுக்கு இதை தயிலம் செய்து உபயோகிக்கப்படும்.

## அப்பிரகம்.

**செய்கை:**—வீரியவர்த்தனகாரி.

**உபயோகம்:**—அதிமூத்திரம், சுரம், நித்திரையில் பாதங்களை முருக்கிக்கொள்ளும் வாதம், பிரமேகம் முதலிய பற்பல ரோகங்களுக்கு இதை பஸ்மம் அல்லது செந்தூரம் செய்து கொடுக்கப்படும்.

## கல்நார்.

**செய்கை:**—பித்தஹரகாரி.

**உபயோகம்:**—நீர்த்தாரை எரிவு, பித்தகாசம், பித்தவாந்தி, பித்தரோகம் (40) போம். இதை பஸ்மமாக்கிக் கொடுக்கப்படும்.

## கல்மதம்.

**உபயோகம்**—மேகம், அஸ்மரிரோகம், சதைஅடைப்பு, கிரிச்சரம் இவைகளுக்கு இதை பஸ்மமாக்கிக் கொடுக்கப்படும்.

## கர்பூரசலாசத்து.

**உபயோகம்:**—சுரோணிதவாதம், அஸ்மரி, கிரிச்சரம், மேகம் இவைகளுக்கு இதை பஸ்மமாக்கிக்கொடுக்கப்படும்.

## காவிக்கல்.

**உபயோகம்:**—இதை ஜலமிட்டு அரைத்து அக்கினிமேலே தடவ குணமாகும். இதைச்சேர்ந்த ஜலத்தில் துணியை நனைத்து கண்ணெவுக்கு ஒற்றடம் கொடுக்கத்தீரும்.

## கடல்நுரை.

**உபயோகம்:**—இதின் பஸ்மம் குன்மம், க்ஷயம், புண் இவைகளுக்கு உபயோகப்படும்.

## வெள்ளை செங்கு.

**செய்கை:**—தீபனகாரி.

**உபயோகம்:**—இதை பஸ்மமாக்கி குன்மம், வாதம், இசிவு இவைகளுக்குக் கொடுக்கப்படும். இதை உறைத்து கண் வீக்கத்துக்குப்போடப்படும்.

## முத்துசிப்பி.

**உபயோகம்:**—இதை பஸ்மமாக்கி காசம், க்ஷயம், கோழை, மேகம் இவைகளுக்குக கொடுக்கப்படும்.

## பலகறை—கவடி.

**உபயோகம்:**—இதை பஸ்மமாக்கி க்ஷடம், வாதம், சுரம், தாகம், இவைகளுக்குக்கொடுக்கப்படும்.

## ஓமம்-(வித்து)

Omum-ஓமம்.

**செய்கை:**—கர்ப்பவாதஹரகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்:**— இதை பேதி, அஜீரணம், மாந்தம், வயிற்றுவலி, வயிற்று இரைச்சல், வாந்தி முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

## சாலாமிசிரி (வேர்).

**உபயோகம்:**—இதைத் தூளாக்கி பசும்பாலில் போட்டுக் காய்ச்சி சர்க்கரை சேர்த்துச் சாப்பிட்டுவர தேகத்துக்கு பலமும் தாதுபுஷ்டியும் உண்டாகும். க்ஷய ரோகத்துக்கு இதைக்கொடுக்கலாம்.

**அளவு:**— 2—4 கிராம் கொடுக்கலாம்.

## சுக்கு-(உலர்ந்தகிழங்கு)

Ginger-ஜின்சர்.

**செய்கை:**—க்ஷோனகாரி, திரவகாரி, உஷ்ணகாரி, நஸ்ஸியம்.

**உபயோகம்:**— இதைக்கொடுக்க வாயுவைக்கண்டித்து, பசியை உண்டாக்கும். அதிசாரம், இரைப்பு, சேவிநோய், தலைநோய், வாதம், குன்மம் மாந்தம், கபம், சூலை முதலியவைகளுக்கு இதை அடிக்கடிக் கொடுக்கப்படும்.

**அளவு:**— 10—20 கிறேன்ஸ்க் கொடுக்கலாம்.

## மஞ்சள்–(உலர்ந்தகிழங்கு)

Turmeric-டர்மிரிக்.

**செய்கை:**— தீபனகாரி, உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி.

**உபயோகம்:**— வயிறு பொருமலிக்கு 5—20 கிறேன்ஸ்க் கொடுக்க தீரும். இதின் புகையை அக்கிராணித்தால் ஜலதோஷம் தீரும். தலைவலி, வீக்கம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்.

## ஏலரிசி-(வித்து)

Cardamom-கார்டெமம்.

**செய்கை:**— சர்ப்பவாதஹரகாரி.

**உபயோகம்:**— வயிறுகடுப்பு முதலியவைகள் தீரும்.

## கசகசா–(விதை)

**குணம்:**— போஸ்தகாயில் கசகசாவிதை காணலாம்.

**செய்கை:— உபயோகம்;**— கிரகணி, திமிரு, அதிசாரம், இவைகளுக்

கு இதைக்கொடுத்தால் குணத்தைத்தரும், தாதுபுஷ்டி உண்டாகும். இத்து டன் துத்தி இலையைச்சேர்த்து காடியாலரைத்து நமைச்சலுக்கு போட தீரும். சீதபேதி, ரத்தபேதி, கித்திரைபங்கம் இவைகளுக்குக் கொடுக்க இது நல்ல மருந்து.

## 15-வது அத்தியாயம்.

### இதனடியில் சொல்லப்பட்ட ஒவ்வொரு பதார்த்தத்தால் உண்டாகும் சதை, அனல், கொழுப்பு இவைகளும், பதார்த்தங்கள் ஜீர்ணிக்கும் காலமும் காண்க.

| அவித்தபதார்த்தங்களின் பெயர்கள். | 100 பங்கில் | | | ஜீரணிக்கும் காலம். | |
|---|---|---|---|---|---|
| | அனல் கொழுப்பு உண்டாக்கசத்து. | சதை உண்டாக்க சத்து. | ஜலமுதலியவைகள். | மணி. | நிமிஷம். |
| உருளைக்கிழங்கு. ... ... | 23 | 2 | 75 | 3 | 30 |
| கடலை, உளுந்து, துவரை முதலிய பயறுகள். ... ... | 60 | 25 | 15 | 3 | 0 |
| அரிசி ... ... ... | 78 | 7 | 15 | 1 | 0 |
| கோதுமை ... ... ... | 69 | 15 | 16 | 3 | 30 |
| நெய் ... ... ... | 100 | 0 | 0 | 3 | 30 |
| பால் ... ... ... | 9 | 5 | 86 | 2 | 0 |
| முட்டை ... ... ... | 11 | 14 | 75 | 3 | 30 |
| மீன்... ... ... ... | 7 | 14 | 79 | 3 | 0 |
| கோழி ... ... ... | 7 | 20 | 73 | 4 | 0 |
| ஆட்டிறச்சி ... ... ... | 7 | 22 | 71 | 2 | 0 |

☞ சவ்வரிசி 1¼ (கவ) மணிநேரத்தில் ஜீர்ணிக்கும்.

# 16-வது அத்தியாயம்.

தாது வர்க்கங்கள், காரவர்க்கங்கள், மண்ணுவர்க்கங்கள் முதலியவைகளும், அவைகளின் உப்புகளும், சத்துகளும் அவைகள் நிவர்த்தியாக்கும் ரோகங்களும் சொல்லப்படும்.

## வெடிஉப்பு-பொட்டிலுப்பு, (உப்பு)

Nitrate of Pctash-நைட்டிரேட் ஆப் பொடாஸ்

குணம்:—இது பூமியில் விளைகிறது. இது வெள்ளை; பளிங்கு; குளிர்ச்சி, கசம்பு, விறுவிறுப்பு, உள்ளதாய் இருக்கும்.

செய்கை:—மூத்திர வர்த்தனகாரி, சீதளகாரி, மேலுக்குப் போட்டால் உஷ்ணம் தணியும், ரணம் சிவப்பிக்கும்.

உபயோகம்:—இதை சுரம், சீல்வாதம் ரத்தகாசம், பிரமேசம். நீர் சோவை முதலியவைகளுக்கு கொடுத்தால் தவராமல் குணத்தைக்காட்டும். இத்துடன் வாந்தி உப்பைச் சேர்த்துக் கொடுக்க வியர்வையை உண்டாக்கும். இதை வாய் கொப்பிளிக்கிற ஜலமாக செய்து கொள்ளலாம். இதைஎவ்விதமாய் உபயோகிக்கிறோமோ அவ்விதமாகவே குணத்தைத்தரும். அளவுக்கு அதிகமானால் விஷமிக்கும். இது மகா நல்ல மருந்து, அநேக பலத்த ரோகங்களுக்குக் கொடுக்கப்படும்.

அளவு:—5–15 கிறேன்ஸ் ஜலத்தில் கொடுக்கலாம். 20–30 கிறேன்ஸ் வியர்விக்கவும், 1—8 திராம் அதிக ஜலத்தில் கரைத்து இதின் வேகத்தைக் குறைத்து பிரமேகம், சீல்வாதம் இவைகளுக்கும் கொடுக்கப்படும்.

## சீமை இந்துப்பு (உப்பு).

Epsom Salt-எப்சம் சால்ட்

குணம்:—இது பூமியின் மேல் பூத்திருக்கும். ஊற்று ஜலம், சமுத்திர ஜலம் இவைகளிலுமுண்டு. இது நீண்டதும்; வெள்ளை, பிரகாசம், உவர்ப்பு, கசப்பு, உள்ளதாயுமிருக்கும். காற்றுப்பட்டால் தூளாகும். ஜலத்தில் கரையும், சாராயத்தில் கரையாது.

செய்கை:—ஜல்விரேசனகாரி, மூத்திரவர்த்தனகாரி.

உபயோகம்:—இது சகல தாபன ரோகங்களுக்கு கொடுக்கத் தகுதியானது. சுக்கு, பெப்பர் மெண்ட் ஜலம், நில ஆவாரைக் கசாயம், இவைகளுடன் இதைச் சேர்த்துக் கொடுத்தால் வாயுவை உண்டாக்காமலும் வயிறு கடுக்காமலும் பேதியாக்கும். மருந்தை வயிற்றில்தங்காமல் வாந்தியானால்

விளாவின கந்தகத்திராவகம் கொஞ்சம் சேர்த்துக் கொடுக்க வயிற்றில் தங்கி பேதியர்கும். அதிகமாய் ஜலம் சேர்த்து கொடுக்க நன்றாய் பேதி யாக்கும். கர்ப்ப ஸ்திரிக்கும், குதக சூலைக்கும் கொடுப்பதரிது. வாந்தி பேதி காலங்களில் இதைக் கொடுக்கக்கூடாது.

அளவு:—2 திராம் முதல் 1 அவுன்ஸ கொடுக்கலாம்.

## படிகாரம்-சீனக்காரம்-(காரம்).

Alum-ஆலம்.

குணம்:—இது மலையடிவாரங்களில் அகப்படும். இது வெளிப்பாயு ம், கட்டியாயும், திதிப்பு புளிப்பு துவர்ப்போடுங்கூடிய ருசியுள்ளதாயுமி ருக்கும். ஜலத்தில் கரையும் காற்றுப்பட்டால் தூளாகும்.

செய்கை:—ரக்தஸ்தம்பனகாரி, ஸங்கோசனகாரி.

உபயோகம்:—இது கண்ணோவுக்கு கிலேதமாகவும், வாய்ரணத்துக்கு ம், நீர்வடிதலுக்கும், வாயைக் கொப்பளிக்கிற ஜலமாகவும், தந்திமேகத்து க்கு நீர்தாரையில் அடிக்கும் ஜலமாகவும் உபயோகிக்கப்படும், அதிசாரம், ரத்தபித்தம், கக்குவாய், சீதபேதி, இவைகளுக்கு உள்ளுக்குக் கொடுத்தா ல் வெகு குணத்தைத் தரும். பொரித்த சீனக்காரத்தின் தூள் ரணத்தின் துர்மாமிசத்தை நீக்க காரமாக போடப்படும்.

அளவு:—10—20 கிறேன்ஸ் பெரியவருக்கும், 1—5 கிறேன்ஸ் குழந் தைகளுக்குங் கொடுக்கலாம்.

## குளோரல் ஹைட்ரஸ் (உப்பு).

Chloral Hydras-குளோரல் ஹைடிரஸ்.

குணம்:—இது வெள்ளையாயும் பளபளப்பாயுமிருக்கும். காற்றுப்ப ட்டால் நீராகிவிடும்.

செய்கை:—நித்திராகாரி, சமனகாரி, பூதநாசகாரி.

உபயோகம்:—இதைக் கொடுத்தால் வெகு நல்ல நித்திரையை உண் டாக்கும். இதர நித்திராகாரிகள் நித்திரையை உண்டாக்கி பிறகு கெடுதி செய்வது போல் இது செய்யாது. நரம்பைப்பற்றி வரும் சகலரோகங்க ளுக்கு இதை கொடுக்க தவறாமல் நன்மை செய்யும். சக்கிருமல், காசம், சிவாசம், இரைப்பு, கோழை, தனுர்வாதம், கீல்வாதம், இவைகளுக்கு இது அடுத்த அவுஷதம். சுரங்களில் நித்திரையை உண்டாக்கவும், குழந்தைக ளின் இசிவுகளை நிறுத்தவும் இது வெகு நல்ல மருந்து. இது அபினிபோல் வேதனையை நீக்காவிட்டாலும் நித்திரையை விசேஷமாய் உண்டாக்கும்.

இது பைத்திய ரோகத்துக்குக் கொடுக்க வெகு நன்மை செய்யும். இதை 5 முதல் 15 கிறேன்ஸ் ஒரு அவுன்ஸ் ஜலத்தில் கரைத்து ரணம், காயம், அழுகிய சிரங்குகள், மூலக்காம்பு வெடிப்பு, இவைகளுக்கு மேலுக்குப் போட உடனே குணத்தைக் காணலாம.

அளவு:—5—30 கிறேன்ஸ் அனுபானத்திலிடவும்.

## ஸைட்ரேட் ஆப் போடாஷ் (உப்பு).

Citrate of Potash-ஸைட்ரேட் ஆப் போடாஸ்.

குணம்:—இந்த உப்பு வெகு சீக்கிரத்தில் நீராகி விடும்.

செய்கை:—உபயோகம்:—இதை சுரங்களில் கொடுத்தால் குளிர்ச்சியை செய்து அழலைத் தணிக்கும். குமட்டல், வாந்தி, பேதி இவைகளுக்கு இதைக் கொடுததால் மெத்த நன்மை செய்யும். அபினியைச் சேர்த்துக் கொடுக்கலாம்.

## குளோரெட் ஆப் போடாஷ் (உப்பு.)

Chlorate of Potash-குளோரேட் ஆப் போடாஸ்.

குணம்:—இந்த உப்பு வெள்ளையாயும், தகடுகளாயும், வாயில் போட்டால் சில சில வென்று இருக்கும். ஜலத்தில் கொஞ்சம் கரையும்.

செய்கை:—சுவேதகாரி, சீதளகாரி, மூத்திர வர்த்தனகாரி.

உபயோகம்:—இது ரத்தத்திலிருக்கிற தோஷத்தை நீக்கி ரத்தத்தை சுத்தியாக்கும். இதை க்ஷயம், நேடித்த குய்யரோகம், சுரம், சன்னி இவைகளுககுக் கொடுக்க வெகு நல்ல மருந்து.

அளவு:—10—15 கிறேன்ஸ்க் கொடுக்கலாம்.

## கந்தகம்.

Sulphur—ஸல்ப்பர்

குணம்:— இது அக்கினிமலை அடிவாரத்திலும், பூமியிலும் அகப்படும். இதை சுத்திசெய்துதான் உபயோகிக்க வேண்டியது. சுத்திசெய்த கந்தகத்துக்கு கந்தகப்பதங்கம் (Sublimed Sulphur—ஸப்லிம்ட் ஸல்பர்) என்று பெயர்.

செய்கை:— சுவேதகாரி, மலகாரி, வியதாபேதகாரி.

உபயோகம்:— இதை மூலரோகத்துக்குக் கொடுக்க வெகு நல்லமருந்து. சருமரோகங்களுக்குக் கொடுக்க நன்மைசெய்யாமல் போகாது. இ

தின்வாசனை மலத்திலும், வியர்வையிலும் கண்டால் மருந்து உடம்பில்ஊறி னதற்கு அடையாளம்.

அளவு:— 5—20 கிறேன்ஸ் தினம் 2-3 தடவைக்கொடுக்கலாம். 1½ (கற) முதல் 2 திராம் கொடுத்தால் மலகாரியாகும்.

## திராக்ஷ உப்பு (உப்பு.)

### Cream Tartar—கிரீம் டார்டர்.

குணம்:— இது ஒயின் சாராயம்செய்யும்போது, திராக்ஷத்திலிருக்கி ற உப்பு அடியில படியும். அதை எடுத்துச்சுத்திசெய்தால் வெள்ளைபொ டியாயும், புளிப்பாயுமிருக்கும். ஜலத்தில் கரையும்.

செய்கை:— சீதளகாரி, மலகாரி, மூத்திரவர்த்தனகாரி.

உபயோகம்:—இது மூலம், சுரம், நீர்க்கோவை, இவைகளுக்கு கொ டுக்க தகுதியானது; நல்ல அனுபானத்தில் கொடுத்தால் தவராமல் குண மாக்கும்.

அளவு:— 20—40 கிறேன்ஸ் கொடுத்தால் மூத்திரம் அதிகரிக்கும். 1—2திராம் கொடுத்தால் மலம் இறங்கும்.

## டார்டரேட் ஆப் போடாஷ் (உப்பு.)

### Tartrate of Potash—டார்டரேட் ஆப் போடாஷ்.

செய்கை:— விரேசனகாரி.

உபயோகம்:— இந்த உப்பு எகுர்திகண்டரோகம், அஜீர்ணம் இவைக ளுக்கு பேதிக்கு கொடுக்க வெகு நல்ல மருந்து. மூத்திரத்தில் புளிப்பை மாற்றி உப்பை உண்டாக்க இதைக்கொடுக்கலாம். இதற்கு குடல்முழுது ம் வியாபித்துக் கடுப்பைஉண்டாக்காமல் பேதியை உண்டாக்க வல்லமை உண்டு. இதைக் கடுப்பைஉண்டாக்கிற விரேசனகாரிகளோடு சேர்த்துக் கொடுக்க அவைகளின் துர்குணத்தை நீக்கிவிடும்.

அளவு:—2—8 திராம் பேதியாக்கவும், 1—2 திராம் மூத்திரத்தை அதிகரிக்கவும் கொடுக்கப்படும்.

## அஸிடேட் ஆப் போடாஷ் (உப்பு.)

### Acetate of Potash—அஸிடேட் ஆப் போடாஷ்.

குணம்:— இது காற்றுப்பட நீராகிவிடும். வெள்ளைக்கம்பிகளை போ லிருக்கும். ஜலத்திலும், சாராயத்திலும் கரையும். வாயிலிட விறு விறு என்று உவர்ப்பாயிருக்கும்.

**செய்கை:—** விரேசனகாரி, மூத்திரவர்த்தனகாரி.

**உபயோகம்:—** பிரமேகம், நீர்கோவை, எகுர்திகண்டரோகம், முத லியவைகளுக்கு இதைக்கொடுக்க நன்மைசெய்யும். இது சிலருக்கு வயி ற்றில் கடுப்பும், வாயுவும் உண்டாக்கும். மூத்திரத்தை விருத்திக்கவும், மூத்திரத்தின் புளிப்பைமாற்றி உப்பை உண்டாக்கவும் சக்தி உண்டு.

**அளவு:—**10—60 கிறேன்ஸ் மூத்திரத்தை அதிகரிக்கவும், 1—3 திரா ம் பேதியாக்கவும் கொடுக்கலாம்.

## ஆக்கிராணிக்கிற உப்பு—நவக்ஷார உப்பு(உப்பு.)

Smelling Salt—ஸ்மெல்லிங் சால்ட்.

**குணம்:—** இந்த உப்பு வெள்ளைக்கட்டியாயிருக்கும். காரமும் நொ டியுமுடைய வாசனையுள்ளது. காற்றுப்பட்டால் தூளாகிவிடும். ஜலத்தி ல் கரையும், சாராயத்தில் கரையாது.

**செய்கை:—** அங்காகர்ஷண நாசகாரி, ஆம்லநாசகாரி, உஷ்ணகாரி, ஸ்வேதகாரி, கபஹரகாரி, வமனகாரி.

**உபயோகம்:—** இதை முகர்ந்தால் ஜலதோஷம், தலைவலி, குணமா கும். இதை சுவாசம், காசம், மதுமூத்திரம், சூதகஜன்னி, கீல்வாதம, இவைகளுக்குக் கொடுக்க தவறாமல் நன்மைசெய்யும். இது வெகு நல்ல மருந்து.

**அளவு:—** 3—12 கிறேன்ஸ் உஷ்ணிக்கவும், 25—35 கிறேன்ஸ் வாந் தியாக்கவும் கொடுக்கப்படும்.

## நவக்ஷாரம் (உப்பு.)

Sal Ammoniac—ஸால் அமோனியாக்.

**குணம்:—** இது காரமும், எரிச்சலும், கசப்பும், மூத்திர வெகுட்டலு முள்ளது. ஜலத்திலும், சாராயத்திலும் கரையும். இதை சுத்திசெய்யா மல் உள்ளுக்கு கொடுக்க கூடாது.

**செய்கை:—** சீதளகாரி, வியதாபேதகாரி, பூதிகந்தநாசகாரி, பலகாரி.

**உபயோகம்:—** இதை கிலேதமாகசெய்து சுரம், குடல்வாதம், நீர் அ ண்டம், முதலியவைகளுக்குப்போட வெகு நன்மைசெய்யும். உள்ளுக்குக் கொடுக்க கூடாது.

## ஐயோடைட் ஆப் போடாஸ்ஸியம்(உப்பு.)

Iodide of Potassium—ஐயோடைட் ஆப் போடாஸ்ஸியம்.

**குணம்:—**இந்த உப்பு சமுத்திரஜலத்திலும், நீர்ப்பஞ்சிலுமுண்டு. இ து விறு விறுப்பாய் உப்புக்கரித்துக்கொண்டிருக்கும். ஜலத்திலும் சாரா

யத்திலும் கரையும். இத்துடன் அஸிடேட்ஆப்லேட் (உப்பு) சேர்க்க மஞ்சள் நிறமாகும்.

**செய்கை:**—சோபாநாஷகாரி, மூத்திரவர்த்தனகாரி.

**உபயோகம்.**—இது வெகு வேகமுள்ள மருந்து. கீல்வாதம், கண்டமாலை, கன்னப்புற்று முதலியவைகளுக்குக்கொடுக்க இது அடுத்த அவுஷதம். முகம் மினுக்குதல், தலைநோவுதல், குமட்டல், வாந்தி இவைகள் கண்டால் மருந்து தேகத்தில் ஊறினதற்கு அடையாளம், உடனே மருந்தை நிறுத்தவும். இதை அதிகமாய் கொடுத்தால் ஸ்தன்னியங்கள், பீஜம் இவைகள் சுஷ்கிக்கும், உமிழ்நீர் வடிவிக்கும். இது ஐயோடின் என்ற மருந்தைப்பார்க்கிலும் சாதமானது.

**அளவு:**— 2 முதல் 3 கிறேன்ஸ் அபானத்தில் கொடுக்கவும்.

## புரோமைட் ஆப் பொடாஸியம்.

Bromide of Potassium—புரோமைட் ஆப் போட்டாஸியம்.

**குணம்:**—இந்த உப்பு வெள்ளை நிறமாயிருக்கும். வாசனை இராது. ஜலத்தில் அதிகமாயும், சாராயத்தில் கொஞ்சமாயும் கரையும்.

**செய்கை:**—வியாபேதகாரி, உஷ்ணகாரி, சோபாநாஷகாரி.

**உபயோகம்:**—இந்த மருந்து மகா சிரேஷ்டமானது. இது இருதயத்தின் நடையைக்குறைக்கும். நரம்பைப்பத்தி வரும் இசிவு, ஜன்னி, காக்கை வலி, முதலிய சகல வியாதிகளுக்கு இதைக்கொடுத்த வுடனே அதிவிசேஷ குணத்தைக்காட்டும். காக்கை வலிப்புக்கு இதை நெடுநாள்க்கொடுக்கவேண்டியது. தேகவலி, வியாதி, சுபாவம், முதலியவைகளால் நித்திரை வராமலிருந்தால் இதைக்கொடுக்க வெகு நல்ல நித்திரையை உண்டாக்கும். குதகஜன்னி, கக்குவாய், இருமல், காசம், சுவாசம், கோழை முதலிய மகாகோர ரோகங்களுக்குக் கொடுக்க இது வெகுத்தகுதியானது; கொடுத்ததினம் குணத்தை அறியலாம். குழந்தையின் இசிவுக்கு இதைக் கொடுக்க உடனே இசிவு நிற்கும். மதுமூத்திரம், தனுர்வாதம், மேகம், பிலீகம், ஈரல்நோய் முதலிய கொடிய வியாதிகளுக்கு கொடுக்க இது வெகு நன்மைசெய்யும்.

**அளவு:**—5 முதல் 30 கிறேன்ஸ் அனுபானத்திலிடவும்.

## கார்போனேட் ஆப் பொடாஷ் (உப்பு.)

Carbonate of Potash—கார்போனேட் ஆப் பொடாஸ்.

**குணம்:**—இந்த உப்பு காரமும் விறு விறுப்பும் உள்ளது. காற்றுப்பட்டால் நீராகிவிடும்.

**செய்கை:**—ஆம்லநாசகாரி, அஸ்மரிஹரகாரி, சோபாநாசகாரி, மூத்திரவர்த்தனகாரி.

**உபயோகம்:**—இது மூத்திரத்தில் புளிப்பைமாற்றி உப்பை உண்டாக்கும். கீல்வாதம், கண்டமாலை, அஜீர்ணம், நீர்கோவை, மேகம், சொறி, இவைகளுக்குக் கொடுக்க இது வெகு தகுதியான மருந்து; அதிசீக்கிரத்தில் குணமாக்கும்.

**அளவு:**—10-முதல் 30 கிறேன்ஸ் பாலில் கொடுக்கலாம்.

## பைகார்போனேட் ஆப் பொடாஸ் (உப்பு.)

Bicarbonate of Potash—பைகார்போனேட் ஆப் பொடாஸ்.

**செய்கை—உபயோகம்:**—கார்போனேட் ஆப் பொடாஷுக்கு உள்ள செய்கைகள் இதற்கும் உண்டு, ஆனால் இது சாந்தமானது. அதைக்கொடுக்கும் ரோகங்களுக்கு இதையும் கொடுக்கப்படும்.

**அளவு:**—10-முதல் 30 கிறேன்ஸ் அனுபானத்திலிடவும்.

## ஸல்பேட் ஆப் பொடாஸ் (உப்பு.)

Sulphate of Potash—ஸல்பேட் ஆப் பொடாஷ்.

**குணம்:**—இந்த உப்பு வெள்ளையாயும், கசப்பாயும் உப்பு கரிக்கிறசுவையாயுமிருக்கும். ஜலத்தில் கரையும்.

**செய்கை:**—வியதாபேதகாரி, சோபாநாசகாரி, லகுவிரேசனகாரி.

**உபயோகம்:**—இதை பித்தத்துக்குரிய வியாபகம் தடைபட்டிருக்கும்போதுக் கொடுக்கப்படும். தனியாய்க்கொடுக்கக்கூடாது.

**அளவு:**—10 முதல் 20 கிறேன் ஸ் ரோகத்தை நிர்வத்திக்கவும், 1—4 திராம் பேதியாக்கவும் கொடுக்கப்படும்.

## பைஸல்பேட் ஆப் பொடாஸ் (உப்பு.)

Bisulphate of Potash—பைஸல்பேட் ஆப் பொடாஸ்.

**குணம்:**—இது வெள்ளை; புளிப்பும், கசப்பும், உள்ளது. ஜலத்தில் கரையும்.

**செய்கை:**—திரிதோஷஹரகாரி, விரேசனகாரி.

**உபயோகம்:**—மலம் இறங்க, 20 கிறேன்ஸ் முதல் 1 திராம் உப்பை ஜலத்தில் கரைத்து வேறொரு பாத்திரத்தில் ஜலமிட்டு கார்போனேட் ஆப்

சோடா 20 கிறேன்ஸ் முதல் 1 திராம் கரைத்து பிறகு இரண்டும் சேர்த்து, பொங்கு பொதுச்சாப்பிடவும். இந்த உப்புகள் சமமாக சேர்க்கவேண்டியது.

## கார்போனேட் ஆப் சோடா (உப்பு.)

Carbonate of Soda—கார்போனேட் ஆப் சோடா.

**குணம்:**—இந்த உப்பு வெள்ளைக்கட்டிகளாகவும், உவர்ப்பாயுமிருக்கும் ஜலத்தில் கரையும், யெண்ணெய் சேர்த்தால் சயுக்காரமாகும்.

**செய்கை:**—ஆம்லநாசகாரி, சோபாநாசகாரி, மூத்திரவர்த்தனகாரி, ஹஸ்மரிஹரகாரி.

**உபயோகம்:**—இதை சூலை எரிவு, இரைச்சல், மதுமூத்திரம், கீல்வாதம், காசம், அஜீர்ணம் முதலியவைகளுக்கு இது அடுத்த அவுஷதம். இது வயிற்றிலுள்ள புளிப்பை செவ்வையாய் கண்டிக்கும்.

**அளவு:**—10-முதல் 30 கிறேன்ஸ் அல்லது 60 கிறேனஸ் அநுபானத்தில் கொடுக்கலாம்.

## பைகார்போனெட் ஆப் சோடா (உப்பு.)

Bicarbonate of Soda—பைகார்போனேட்ஆப் சோடா.

**செய்கை-உபயோகம்:**—கார்போனேட் ஆப் சோடாவுக்குள்ள செய்கைகளே இதற்கு உண்டு. ஆதலால் அதைக்கொடுக்கும் ரோகங்களுக்கு இதையும் கொடுக்கப்படும். ஆனால் இது சாந்தமானது.

**அளவு:**—10 முதல் 30 அல்லது 60 கிறேன்ஸ் அநுபானத்திலிடவும்.

## கறிஉப்பு (உப்பு.)

Muriate of Soda—முரியட் ஆப் சோடா.

**குணம்:**—இந்த உப்பை சிலசெடிகள், சமுத்திர ஜலம் இவைகளிலிருந்து சேகரிக்கப்படும். இது உவர்க்கும். ஜலத்தில்கரையும். இது சகலருக்கும் தெரிந்தப்பதார்த்தம்.

**செய்கை :**—உஷ்ணகாரி, வமனகாரி, விரேசனகாரி.

**உபயோகம்:**—இது வாந்திபேதி, கிருமி, ரத்தகாசம், மந்தாக்கினி, இவைகளுக்குக் கொடுக்க குணமாகும். அட்டை தற்சயலாய் இரைப்பை, ஆசனம் இவைகளில் சென்றுப்போனால் இதைக்கொடுக்க மரணமடைந்து வெளிப்படும். இதை பேதிக்காவது வாந்திக்காவது கொடுப்பதரிது.

**அளவு:**—10-முதல் 30 கிறேன்ஸ் பசியையுண்டாக்கவும், ½ முதல் 1 அவுன்ஸ் பேதியாக்கவும்: 1½ முதல் 2 அவுன்ஸ் வாந்தியாக்கவும் கொடுக்கப்படும்.

## வெங்காரம் (உப்பு.)

### Borax—போராக்ஸ்.

**குணம்:**—இந்த உப்பை நீற்றிக்கொண்டால் அதிலிருக்கிற தோஷங்கள் நீங்கிவிடும். இது வெள்ளையாய், தெளிவாய், மினிமினிப்பாய், தித்திப்பாய், துவர்ப்பாய் இருக்கும்.

**செய்கை:**—மூத்திரவர்த்தனகாரி, ருதுவர்த்தனகாரி, லகுஸங்கோசனகாரீ, விரணசுத்திகாரி.

**உபயோகம்:**—தொண்டை, வாய் இவைகளில் காணும் ரணங்களுக்கு இதை ஜலத்தில் கரைத்து வாயைக் கொப்பளித்தால் அதிசீக்கிரத்தில் குணமாகும். கிரிச்சரம், மகோதரம், இவைகளுக்கு இதை உள்ளுக்குக் கொடுக்க வெகு நல்ல மருந்து. கர்ப்பஸ்திரீகளுக்கு உள்ளுக்குக்கொடுத்தால் கருவை வெளிப்படுத்திவிடுவதுமுண்டு.

**அளவு:**—5—30 கிறேன்ஸ்க்கொடுக்கலாம். 2 திராம் வெங்காரத்தை 6 அவுன்ஸ் ஜலத்தில் போட்டு வாயைக்கொப்பளிக்கலாம்.

## ஸல்பேட் ஆப் சோடா (உப்பு.)

### Sulphate of soda.—ஸல்பேட் ஆப் சோடா.

**குணம்:**—இந்த உப்பு பூமி, கடல்நீர், சில பூண்டுகளினச் சாம்பல் இவைகளில் அகப்படும். இது வெள்ளையாயும்; சப்பு வெகுட்டலுள்ள ருசியாயும் இருக்கும். ஜலத்தில் கரையும். காற்றுப்பட்டால் பொடியாகும்.

**செய்கை:**—விரேசனகாரி.

**உபயோகம்:**—இது வாய்க்கு இனிப்பாய் இராது. ஆதலால் எலுமிச்சபழரசத்தில் கரைத்துக்கொடுக்க மலச்சிக்கலை நீக்கும். இது வயிறுக் கடுத்து பேதியாக்கும்.

**அளவு:**—½ (ஐ) முதல் 1½ அவுன்ஸ்க் கொடுக்கலாம்.

## பாஸ்பேட் ஆப் சோடா (உப்பு.)

### Phos phate of soda.—பாஸ்பேட் ஆப் சோடா.

**குணம்:**—இந்த உப்பு எலும்பிலிருந்து எடுக்கப்படும். இது வெள்ளையாயும், உவர்ப்பாயும் இருக்கும், ஜலத்தில்கரையும், காற்றுப்பட்டால் தூளாகும்.

**செய்கை:**—சுகவிரேசனகாரி, வியதாபேதகாரி.

**உபயோகம்:**—இது வெருட்டாலே உண்டாகாது. குழந்தைகளுக்கும், நாசூகஸ்திரிகளுக்கும் பேதிக்கு கொடுக்க இது வெகுநல்ல மருந்து.

**அளவு:**—½ (அ) முதல் 1½ அவுன்ஸ் பெரியவர்களுக்கும். 1 முதல் 4 திராம் குழந்தைகளுக்கும் கஞ்சியில்க் கொடுக்கலாம்.

## ரோசல் ஸால்ட்ஸ (உப்பு.)

### Rochelle Salts.—ரோசல் ஸால்ட்ஸ.

**குணம்:**—இந்த உப்பு வெள்ளையாயும், உவர்ப்பாயும், கசப்பாயும் இருக்கும். காற்றுப்பட்டால் தூளாகிவிடும், ஜலத்தில் கரையும்.

**செய்கை:**—விரேசனகாரி. மூத்திர வர்த்தனகாரி.

**உபயோகம்:**—அஸ்மரி, பித்தபாண்டு, பிரசவித்த பிறகுகாணுஞ் சுரம், இவைகளுக்குக் கொடுக்க இதுத்தகுதியான மருந்து. கொஞ்சமாய்க் கொடுத்தால நீரை அதிகரிக்கும்; அதிகமாய்க் கொடுத்தால் குளிர்ச்சியாய் பேதியாக்கும். இதைத் தனியாய்க்கொடுக்க வயிற்றில் சங்கடம் உண்டாக்கும். நீலாவரை சகாயத்தில்க கொடுக்க நன்மை செய்யும்.

**அளவு:**—1 முதல் 2 திராம் மூத்திரத்தை அதிகரிக்கவும், 6 முதல் 8 திராம் பேதியாக்கவும் கொடுக்கலாம்.

## அஸிடேட் ஆப் ஸோடா (உப்பு.)

### Acetate of Soda.—அஸிடேட் ஆப்ஸோடா.

**குணம்:**—இந்த உப்பு வெள்ளையாயும், விறுவிறுப்பாயும், கசப்பாயும் இருக்கும். ஜலத்தில் கரையும். உஷ்ணம்பட்டால் தூளாகும்.

**செய்கை:**—விரேசனகாரி, மூத்திர வர்த்தனகாரி.

**உபயோகம்:**—இது நீர்க்கோவை, மலக்கட்டு இவைகளுக்குக் கொடுக்க அதிசீக்கிரத்தில் குணமாக்கும்.

**அளவு:**—½ (அ) முதல் 2 திராம் மூத்திரத்தை அதிகரிக்கவும், 1—4 திராம் பேதியாக்கவும் கொடுக்கப்படும்.

## சுண்ணாம்பு.

### Lime.—லைம்.

**குணம்:**—கற் சுண்ணாம்பு, கிளிஞ்சில் சுண்ணாம்பு, சங்கு சுண்ணாம்பு, சிப்பி சுண்ணாம்பு, நத்தை சுண்ணாம்பு, முத்து சுண்ணாம்பு, என்னும் பலபல

சுண்ணாம்புகளுண்டு. அவைகளெல்லாம் குணத்திலும் செய்கையிலும் ஒத்திருக்கும். இது சகலருக்குந்தெரிந்த பதார்த்தம்.

செய்கை :—ஆம்லநாசகாரி, ஸங்கோசனகாரி, வியதாபேதகாரி, ஊஸ்மரி ஹரகாரி, ஷோபா நாசகாரி.

உபயோகம் :—ஒரு அவுன்ஸ் சுண்ணாம்பை 2 பைண்ட் ஆவி நீரில் போட்டு குலுக்கிவைத்து தெளிவை யெடுத்து சீசாவில் போட்டுவைத்துக் கொள்ளவும். இதை சூலை எரிவு, அதிமூத்திரம், அஜீரணபேதி, ஆமம், கிருமி, இவைகளுக்குக் கொடுக்க வெகுசீக்கிரத்தில் குணத்தைக்காட்டும். கரப்பான் முதலிட சருமரோகங்களுக்கும் ரணங்களுக்கும் போடலாம்.

அளவு :—2 முதல் 8 அவுன்ஸ் தினம் 2—3 தடவை பாலில்க்கொடுக்கலாம்.

## சீமைச்சுண்ணாம்பு.

Chalk.—சாக்

குணம் :—இது வெள்ளை, எளிதில் தூளாகும். ருசியில்லை. சிலது உருண்டையாயிருக்கும். இதை சுத்தி செய்துதான் உபயோகிக்கவேண்டியது.

செய்கை :—ஆம்லநாசகாரி, சங்கோசனகாரி.

உபயோகம் :—வெந்நீர், கஞ்சி, அக்கினி, இவைகளால் உண்டாகும் ரணங்களின் ஜலத்தை வறட்ட அவைகளின் பேரில்தூவி போட்லிஸ்க் கட்ட நன்மைசெய்யும். சூலை எரிவு, வயிற்றில் புளிப்பை அதிகரித்து உண்டாகிய சகல ரோகங்களுக்கும் இதைக்கொடுக்க உடனே குணத்தைத் தரும். ஆனால் இதை நாள்ப்படச் சாப்பிட்டால் குடலில்ச் சேர்ந்து கெடுதியுண்டாக்குவதால் மலத்தைக் கழித்துக் கொண்டே இருக்கவேண்டியது

அளவு :—10 முதல் 60 கிறேன்ஸ் சர்க்கரை, லவங்கப்பட்டை இவைகளோடு சேர்த்துக் கொடுக்கலாம்.

## காந்தமண் பஸ்மம். (பஸ்மம்.)

Carbonate of Magnesia.—கார்போனேட் ஆப் மாக்நீஷியா.

குணம் :—இது வெள்ளையாயும், இலேசாயும், மிருதுவாயும், இருக்கும். ஜலத்தில் கரையாது.

செய்கை :—ஆம்லநாசகாரி, மலகாரி.

உபயோகம்:—வயிற்றில் புளிப்பை அதிகரித்துக் காணும் குலை எரிவு, மாந்தம், தீனிப்பை எரிச்சல் முதலிய சகல ரோகங்களை நிவர்த்திக்க இதைக்கொடுக்கப்படும். இது குழந்தைகளுக்கு வெகு நல்ல மருந்து; சாந்தமாய் மலத்தைக் கழிக்கும்.

அளவு:—5 முதல் 20 கிறேன்ஸ் புளிப்பைக் கண்டிக்கவும். 15 முதல் 60 கிறேன்ஸ் மலத்தைக்கழிக்கவும், ஜலம், பால் முதலியவைகளில் கொடுகலாம்.

## கல்லுப்பு. (உப்பு.)

உபயோகம்:—இதைக் கொடுக்க குன்மம் (8), வாதம் (80), மலக்கட்டு, கப நோய், வாந்தி, உஷ்ணவாயு, குணமாகும்.

## அட்டுப்பு. (உப்பு)

உபயோகம்:—இதைக்கொடுக்க வாந்தி, தேகக்குத்தல் தீரும்.

## இந்துப்பு. (உப்பு.)

உபயோகம்:—கபநோய், வாதக்கடுப்பு, மலக்கட்டு, தலைநோய், பித்தம், அஜீர்ணம் குணமாகும்.

## வளையலுப்பு. (உப்பு.)

உபயோகம்:—வயிற்றுவலி, சுரம், பிலீகம், இளைப்பு, கீல்பிடிப்பு, பித்தம், இவைகளுக்கு இதை கொடுக்க குணமாக்கும்.

## கந்தி உப்பு. (உப்பு)

செய்கை:—உபயோகம்—உஷ்ணகாரி:—குடலண்டவாதம், அதிஸ்தூலரோகம், இவைகளுக்கு இதைக் கொடுக்க குணமாக்கும்.

## சவுக்காரம் (உப்பு).

உபயோகம்:—வயிற்றுவலி, உட்சூடு, வாதம், சிலேஷ்மம், இவைகளுக்குஇதைக்கொடுக்கலாம. இது விரேசனகாரி.

## சத்திக்ஷாரம். (உப்பு)

உபயோகம்:—பிலீகம், அக்கினிமந்தம், க்ஷயம், காசம், வயிற்றுவலி கிரகணி, கோழை, சிலேஷ்மம், இவைகளுக்கு இதைக் கொடுக்க குணமாக்கும்.

## அப்பளகாரம். (உப்பு).

உபயோகம்:—கபரோகம், குடல்பெருக்கு, வாதம், குன்மம், கீல்வாதம், உப்பிசம், இவைகளுக்கு இதை கொடுக்கப்படும்.

## சவ்வர்ச்ச உப்பு (உப்பு.)

**உபயோகம்:**—வயிற்றுவலி, பித்தசுரம், கீல்வாதம், தீரும்

## பிடாலுப்பு (உப்பு.)

**உபயோகம்.**—மந்தம், அஜீரணம், தீரும். தீபனகாரி.

## எவக்ஷாரம (உப்பு.)

**உபயோகம்:**—சுவாசம், காசம், மேகம், ரணம், வீக்கம், கிரகணி, உதரரோகம் இவைகளுக்கு இதைக் கொடுக்கப்படும்.

## தும்பக்ஷாரம (உப்பு.)

**உபயோகம்:**—சுவாசம், காசம், கோழை, குன்மம், தீரும்.

## உமிலக்ஷாரம் (உப்பு.)

**உபயோகம்:**—வாதகுடல் விருத்தி, கிரிசச்ரம், குன்மம், வாதம், தீரும்.

## (இங்கிலிஷ்) அயச்சிந்தூரம்.

### Oxide of Iron—அக்ஸைட் ஆப் ஐரன்.

**குணம்:**—இது சிவப்பாயும் தூளாயும் இருக்கும். ஜலத்தில் கரையாது.

**செய்கை:**—பலகாரி.

**உபயோகம்:**—இதைச் சாப்பிடும்போது அடிக்கடி பேதிக்குக்கொடுத்து துர்மலத்தை வெளிப்படுத்தினால் மருந்தின் குணததை அதிகரிக்கும். இதை மந்தாக்கினி, பாண்டு, முகஜன்னி, சூதகக்கட்டு, நடுக்கல், கிருமி கீல்வாதம், இருதயத் துடிப்பு, மதுமூத்திரம், குழந்தையின் இசிவு, கக்கிருமல், கிரந்தி முதலிய பற்பல பலத்தரோகங்களுக்கு கொடுக்க வெகு குணத்தைத் தரும்.

**அளவு:**—5 முதல் 30 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## அன்னபேதி (உப்பு.)

### Sulphate of Iron—ஸல் பேட் ஆப் ஐரன்

**குணம்:**—இது புளிப்பும், துவர்ப்பு முள்ளது. கட்டியாய், பச்சைநிறமாயிருக்கும். ஜலத்தில் கரையும்.

**செய்கை:**—பலகாரி, ருதுவர்த்தனகாரி, கிருமிநாசகாரி, ஸங்கோசனகாரி, கால கிரமமாய் வரும் ரோகங்களைத் தடுக்கும்.

**உபயோகம்:**—அயமருந்துகளுக்குள் இது தான் வெகு சிரேஷ்டமானது. இதை அடிக்கடிக் கொடுக்கப்படும். பாண்டு, மதுமூத்திரம், காசம், பலஹீனம், சூதகக்கட்டு, முதலியவைகளுக்கு இதைக்கொடுத்தால் தவறாமல் குணத்தைக்காட்டும்.

அளவு:—1 முதல் 5-கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## ஐயோடைட் ஆப் ஐரன் (உப்பு.)

Iodide of Iron—ஐயோடைட் ஆப் ஐரன்.

**குணம்:**—இந்த உப்பு கறுப்பும் உளதாவும் கலந்த நிறமாயிருக்கும். விறு விறுப்பும், துவர்ப்பும், உள்ளது. வெகு சீக்கிரத்தில் நீராகிவிடும். ஜலத்திலும் சாராயத்திலும் கரையும். இது சீக்கிரத்தில் கெட்டுப் போவதால் ஷர்பத்து செய்து வைத்துக்கொள்ள வேண்டியது.

**செய்கை:**—பலகாரி, ருதுவர்த்தனகாரி, ஸொபாநாசகாரி,

**உபயோகம்:**—பலஹீனம், சூதகக்கட்டு, கண்டமாலை, மேகரோகம், மாந்தரோகம், முதலியவைகளுக்குக் கொடுக்க இது வெகு சிலாக்கியமான மருந்து.

அளவு:—1 முதல் 5-அல்லது 10 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## பெர்ரை அம்மோனியொ ஸைட்டரஸ் (உப்பு.)

Ferri Ammonio citras—பெர்ரை அம்மொனியொ ஸைடரஸ்.

**குணம்:**—இந்த உப்பு உளதா நிறமுள்ள தகடுகளாய், சொருசாய், கொஞ்சம் துவர்ப்பாயிருக்கும். ஜலத்தில் கரையும்.

**செய்கை:**—பலகாரி.

**உபயோகம்:**—குழந்தைகளுக்கும், நாசுகதேகமுள்ளவர்களுக்கும் பலத்தை உண்டாக்குவதற்குக் கொடுக்க இது தகுதியான மருந்து.

அளவு:—5-முதல் 10 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## (இங்கிலிஷ்) நாகபஸ்மம்-(பஸ்மம்)

Oxide of zinc—ஆக்ஸைட் ஆப் ஜிங்க்.

**குணம்:**—இது வெள்ளைநிறம். ருசி. வாசனைஇல்லை. ஜலத்தில் கரையாது.

**செய்கை:**—பலகாரி, அங்காகர்சன நாசகாரி.

**உபயோகம்:**—இதை சருமரோகம், சூதகஜன்னி, குழந்தையின் இசிவு, கக்கிருமல், முதலியவைகளுக்குக் கொடுக்க வெகு குணத்தைத்தரும், சிழைவறட்ட ரணத்தின்மேல் தூவலாம்.

அளவு:—1 முதல் 5 கிறேன்ஸ் மாத்திரைசெய்துக் கொடுக்கலாம்.

## பால்துத்தம் (உப்பு.)

Sulphate of zinc.— ஸல்பேட் ஆப் ஜிங்க்.

**குணம்:**—இது வெள்ளையாயும் துவர்ப்பாயும், களிம்பு ருசியாயும் இருக்கும், ஜலத்தில் கரையும், காற்றுப்பட்டால் தூளாகும்.

செய்கை:—பலகாரி, அங்காகர்சன நாசகாரி, வமனகாரி, ஸங்கோசனகாரி.

உபயோகம்:—இது இசிவுரோகத்துக்கு அடுத்த ஔஷதம். வெள்ளைக்கு நீர்த்தாரையில் அடிக்கப்படும் ஜலமாகவும், உள்நாக்கு வளர்ந்ததற்கு கொப்பளிக்கிற ஜலமாகவும், கண்ணோவுக்கு துவாலையாகவும் செய்து உபயோகிக்கலாம். நஞ்சுண்டோருக்கு இதைக்கொடுத்தால் அதி சீக்கிரத்தில் வாந்தியாக்கி நஞ்சைவெளிப்படுத்தும். குன்மம், சூதகஜன்னி, நடுக்கல், காக்கைவலி, குடைச்சல் முதலிய கொடிய ரோகங்களுக்குக் கொடுக்க வாயுவை ஹரித்துக் குணத்தைக் காட்டும். பேதி, ரத்தவடிதல், இவைகள்நிற்க இது உபயோகமுள்ளது. அளவுக்கு அதிகமானால் விஷமிக்கும்.

அளவு:—1 முதல் 2 கிறேன்ஸ் தினம் 2—3 தடவைக்கொடுக்கலாம். 10 முதல் 20 கிறேன்ஸ் ஜலத்தில்க்கொடுக்க வாந்தியாகும்.

## விலிரியநேட் ஆப் ஜிங்க் (உப்பு.)

Valerianate of zinc:— விலிரியநேட் ஆப் ஜிங்க்.

குணம்:—இது வெள்ளையாயிருக்கும், தீ நீரில் கரையும்.

செய்கை:—அங்காகர்சன நாசகாரி, பலகாரி.

உபயோகம்:—இது நடுக்கல், குடைச்சல், காக்கைவலி, சூதகஜன்னி, இவைகளுக்குக் கொடுக்க தவராமல் நன்மை செய்யும். இதைக்கொடுக்க நரம்புகளுக்கு பலத்தை உண்டாக்கி நரம்பைப் பற்றிவரும் சகல ரோகங்களையும் குணமாக்க வல்லமை இதற்கு உண்டு.

அளவு:—1முதல் 3 கிறேன்ஸ் மாத்திரைசெய்துகொடுக்கலாம்.

## துரிசு (உப்பு.)

Sulphate of copper.— ஸல்பேட் ஆப் காப்பர்.

குணம்:—இது தற்செயலாய் விளைகின்றது. இது நீலநிறமாயும், துவர்ப்பாயும், வெருட்டலாயும் இருக்கும். காற்றுப்பட்டால் தூளாகும், ஜலத்தில் கரையும்.

செய்கை:—பலகாரி, ஸங்கோசனகாரி, வமனகாரி, விரணகாரி.

உபயோகம்:—நஞ்சுண்டோருக்கு நஞ்சை வெளியாக்க இதை வாந்திக்குக் கொடுக்கப்படும். இதை ரணத்தின்மேல் போட துர்மாமிஸத்தை நீக்கி அதிசீக்கிரத்தில் ஆற்றும். பேதி, முறைக்காச்சல், காக்கைவலி, சூதகசன்னி, இவைகளுக்குக்கொடுக்க இது மகா நல்லமருந்து. இதைக்கொடுக்க நரம்புகளுக்குப் பலத்தை உண்டாக்கி ரோகங்களை குணமாக்கும்.

**அளவு:**—½ (ம) முதல் 1கிறேன்ஸ் பலத்தைஉண்டாக்கவும், பேதியை நிறுத்தவும், 4 முதல் 12 கிறேன்ஸ் வாந்தியாக்கவும் கொடுக்கப்படும்.

## மிருதார்சிங்கி.

Oxide of Lead—ஆக்ஸைடிட் ஆப் லெட்.

**குணம்:**—இது படைப்படையாய் சேர்ந்து சிவப்பு பசுமை நிறமாய் இருக்கும். ஜலத்தில் கரையாது.

**செய்கை—உபயோகம்:**—இதை உள்ளுக்குக் கொடுக்கக் கூடாது. பிளாஸ்திரி செய்து ரணங்களுக்குப் போடப்படும்.

## (இங்கிலீஷ்) ஈயச்செந்தூரம்.

Red Oxide of Lead—ரெட் ஆக்ஸைடிட் ஆப் லெட்.

**குணம்:**—இது சிவப்பாயும், பளுவாயுமிருக்கும், ஜலத்தில் கரையாது.

**செய்கை—உபயோகம்:**—இதை உள்ளுக்குக் கொடுக்கக் கூடாது. இதை பிளாஸதிரி செய்து ரணங்களுக்குப் போடப்படும்.

## ஐயோடையிட் ஆப் லெட் (பஸ்மம்.)

Iodide of Lead.— ஐயோடையிட் ஆப் லெட்.

**குணம்:**—இது மஞ்சள் நிறமுள்ள பஸ்மம். ருசி, வாசனையில்லை. நீரில் கரையும்.

**செய்கை:**—வியதாபேதகாரி, ஸோபா நாஷகாரி.

**உபயோகம்:**—மேகரோகங்களால் உண்டாகும் சகல கட்டிகளையும் கரைக்க உள்ளுக்குக் கொடுக்க இது வெகு நல்ல மருந்து.

**அளவு:**—¼ முதல் 2 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## வங்க உப்பு (உப்பு.)

Sugar of Lead.— ஷுகர் ஆப் லெட்.

**குணம்:**—இந்த உப்பு வெள்ளை; தித்திப்பு, துவர்ப்பு, உள்ளது. காடி வாசனை வீசும். ஜலத்திலும் சாராயத்திலும் கரையும்.

**செய்கை:**—சமனகாரி, ஸங்கோசனகாரி.

**உபயோகம்:**—இது ஜலத்தை வறட்டும். ஆதலால் ரத்தபேதி, வாந்திபேதி, ரத்தகாசம், ரத்தவாந்தி, ரத்தபிரமேகம் முதலியமகா கோரமான ரோகங்களுக்கு அனுபானங்களில் கொடுக்கவெகு குணத்தைத்தரும், இதை ஜலத்தில்க்கரைத்து நரம்புத்தடிப்பு, காயம், அக்கினிரணம், வீக்கம், இவைகளுக்கு மேலுக்குப் போடப்படும். வெள்ளைக்கு இதை ஜலத்தில்கரைந்து நீர்த்தாரையில் அடிக்க அதிசீக்கிரத்தில் குணமாக்கும்.

அளவு:—1 அல்லது 2 முதல் 10 கிறேன்ஸ் உப்பை அஸிடிக்ஆஸிட் என்னும் காடியில் தினம் 2—3 தடவைக்கொடுக்கலாம்.

## (இங்கிலிஷ்) நிமிளை பஸ்பம் (பஸ்மம்.)

### Nitrate of Bismuth—நைட்ரேட் ஆப் பிஸ்மத்.

குணம்:—இது வெள்ளை நிறம். ருசி வாசனை இல்லை, ஜலத்தில் கரையாது.

செய்கை:—பலகாரி, அங்காகர்சனநாசகாரி.

உபயோகம்:—இதைக் கொடுக்க வயிற்று வலி உடனே நிற்கும். குன்மம், தீனிப்பை எரிச்சல், சூலை எரிவு, முதலிய கொடிய ரோகங்களுக்குக் கொடுக்க தவராமல் குணத்தைக் காட்டும். சந்நிபாதசுரம், க்ஷயம், இவைகளில் காணும் பேதிக்கு இதைக் கொடுக்க உடனே குணத்தைத் தரும்.

அளவு:—5 முதல் 20 கிறேன்ஸ்க் கொடுக்கலாம்.

## ௬ (இங்கிலிஷ்) ரசபஸ்மம் (பஸ்மம்.)

### Calomel—காலோமேல்.

குணம்:—இது தூளாயும், பளுவாயும் மஞ்சள் கலந்த வெண்மையுள்ளதாயும் இருக்கும். ஜலத்திலும் சாராயத்திலும் கரையாது.

செய்கை:—விரேசனகாரி, வியதாபேதகாரி, உஷ்ணகாரி, சமனகாரி,

உபயோகம்:—இது மேகத்தை அதி சீக்கிரத்தில் குணமாக்கும்; பித்த நீரை விருத்திக்கும். மூளை தாபனம், சவ்வுகளின் தாபனம், சுரம் (64), இருதயரோகம், காசம் (5), சன்னி (13), நேத்திரரோகம் (94), சீதபேதி, வாந்திபேதி, மாந்தம் (8), அதிசாரம் (6), குஷ்டம் (18), தலைவலி, முதலிய அநேக கொடிய ரோகங்களுக்கு இதை கிரமத்துடன் அறிந்துக் கொடுத்தால் உடனே குணத்தைத் தரும்.

மருந்துகளுக்குள் ரசபஸ்மம் மகா சிரேஷ்டமானது. இது சிலர் தேகத்துக்கு ஏற்றுக்கொள்ளாது. அவைகளுக்கு நீக்கி வைக்கவேண்டியது.

அளவு:—1 கிறென்ஸ்க் கொடுக்க வியதாபேதகாரியாகும். 3 முதல் 5 கிறென்ஸ் கொடுக்க பேதியாக்கும். 10 முதல் 20 கிறேன்ஸ்க் கொடுக்க சமனகாரியாகும். ரசபஸ்மத்துடன் அபினி சேர்த்துக் கொடுக்க சீக்கிரத்தில் வாய் பிடிக்கும்.

## * வெள்ளைப் பாஷாணம்

### White Arsenic—வைட் அர்ஸநிக்.

**குணம்:**—இது வெண்மையாயிருக்கும்; கடூர நஞ்சு.

**செய்கை:**—வியதாபேதகாரி, எரிச்சலைத்தரும் நஞ்சு, முறையாய் வரும் ரோகங்களைத் தடுக்கும். மேலே தடவினால் புண்ணாகும்.

**உபயோகம்:**—இது முறையாய் வரும் ரோகங்களை குணமாக்க வல்லமையுள்ளது. நாள்பட்ட ஆரூத சரும ரோகங்களுக்கு இதைக்கொடுத்தால் வெகு சீக்கிரத்தில் குணமாக்கும். இது நஞ்சு பதார்த்தம். அளவுக்கு அதிகமானால் கெடுதி செய்யும். இதைக் கொடுக்க முறைக்காய்ச்சல் செவ்வையாக கேள்க்கும்.

**அளவு:**—($\frac{1}{16}$) வீசம் முதல் ($\frac{1}{8}$) அரைக்கால் கிறென்ஸ் வரையில் அதிகரித்துக் கொடுக்கலாம். இத்துடன் ரொட்டிச் சதையும் சக்கரையும் சேர்த்து மாத்திரைகளாக்கிக் கொடுக்கப்படும்.

---

* பாஷாணங்களில் 64 சாதிகள் உண்டு. அவைகள் அடியில் காண்க.

32. **பிறவிப்பாஷாணங்கள்:**—1 வெள்ளைப்பாஷாணம் (எலிப்பாஷாணம்,) 2 அஞ்சன பாஷாணம், 3 அப்பிரக பாஷாணம், 4 அவுபல பாஷாணம், 5 இலிங்க பாஷாணம், 6 கந்தக பாஷாணம், 7 கரடுத்தாளகம், 8 கற்கடக பாஷாணம், 9 கற்பரிபாஷாணம், 10 கற்பாஷாணம், 11 காயச்சற் பாஷாணம், 12 காந்த பாஷாணம், 13 கார்முகில் பாஷாணம், 14 குதிரைக்கல் பாஷாணம், 15 கந்தசம், 16 கௌரி பாஷாணம், 17 கோளக பாஷாணம், 18 சங்க பாஷாணம், 19 பறங்கிப்பாஷாணம் (சவ்வீரம்), 20 சரகாண்டம், 21 சாலாங்க பாஷாணம், 22 சிலாமதம், 23 சீதாங்க பாஷாணம், 24 சிரபந்தபாஷாணம், 25 சூத பாஷாணம், 26 தகட்டு தாளகம் (அரிதாரம்), 27 தாலம்பம், 28 துத்த பாஷாணம், 29 தொட்டி பாஷாணம், 30 பலண்டுறுக பாஷாணம், 31 மனோசிலை, 32 மிருதம், (அங்கணன்).

32. **வைப்புப்பாஷாணங்ள்:**—1 வைப்பரிதாரம், 2 வெள்ளை, 3 வாண கந்தகம், 4 மிருதாசிங்கி, 5 பொற்றொட்டி, 6 பூரம், 7 அமரசிலை கந்தகம், 8 அயத்தோட்டி, 9 இந்திர பாஷாணம், 10 இரசிதம், 11 இரத்த பாஷாண்ம், 12 இலவண பாஷாணம, 13 எருமை நாதத்தோட்டி, 14 கருமுகில், 15 காகம், 16 குங்குமம் அஞ்சரகுளச்சு, 17 கோடாசொரி, 18 கோழித்தலை கந்தகம், 19 கௌரி, 20 சவ்வீரம், 21 சாதிலிங்கம், 22 சூதம், 23 செப்புத்தொட்டி, 24 சோரம், 25 தீமுறுகல், 26 துத்தம், 27 துரிசு, 28 தொட்டி, 29 நாகப்பாஷாணம், 30 நீலம் (ஈயக்குழலி), 31 பஞ்சபட்சி, 32 பவளப்புற்று.

## வாந்தி உப்பு (உப்பு.)

### Tartar Emetic—டார்டர்மெடிக்.

**குணம்:**—இது வெள்ளை; குமட்டல், துவர்ப்பு கொஞ்சம் புளிப்புள்ளது. காற்றுப்பட்டால் மங்கலாகும், நீரில் கரையும்.

**செய்கை:**—சுவேதகாரி, வியதாபேதகாரி, கபஹரகாரி, வமனகாரி. இது மகா சிரேஷ்டமான அவுஷதம்.

**உபயோகம்:**—இது அளவுக்கு அதிகமாய்ச் சாப்பிட்டால் விஷமிக்கும். ஜாக்கிரதையாய் கொடுத்தால் சுவாசக்குழல, சவ்வு, மூளை, இருதயம் இவைகளில் காணும் பலமான ரோகங்கள் அதி சீக்கிரத்தில் குணமாகும்; அன்றியும் ரணசன்னி, பிரசவகால சன்னி, சுரங்கள் முதலிய கடூர ரோகங்களை நிவர்த்தி செய்வதில் இது மகா வல்லமையுள்ளது.

**அளவு:**—$\frac{1}{16}$(பஉ) முதல் $\frac{1}{8}$ (ஞ அரைக்கால் கிறென்ஸ் நாள்பட்ட வியாதிக்கும், அரைக்கால் முதல் மூன்று வீசம் ($\frac{3}{16}$) கிறென்ஸ் வியர்வையாக்கவும், கபத்தை வெளியாக்கவும், 1 முதல் 2 கிறேன்ஸ் வாந்தியாக்கவும், கொடுக்கப்படும். வாந்தியர்கும்போது மெத்த ஜலம் குடிக்க வேண்டியது.

## சவ்வீரம் வீரம்.

### Hydrargyri Bichloridum.— ஹைடிரார்ஜிரி பைகுளோரிடம்.

**குணம்:**—இது வெள்ளையாயும, காரமாயும, பளிங்குக்கல்லு அல்லது ஸ்படிக்கக்கல்லுபோலேயும் இருக்கும் ஜலத்திலும்சாராயத்திலும்கரையும்.

**செய்கை**—வியதாபேதகாரி.

**உபயோகம்:**—சன்னி (13), சிலேஷ்மம் (20), மேகம் (20), சுவாசம் (5), காசம் (5), கண்டமாலை (18), குஷ்டம் (18), கொருக்கு, சருமரோகங்கள் இவைகளுக்கு இதை சுத்திசெய்து ஒரு நெல்லிடை இஞ்சிசாற்றிலாவது, வெல்லத்திலாவது காலையிலும் மாலையிலும் கொடுத்துவர குணமாகும்.

## மனோசிலை.

### Red Arsenic.— ரேட் அாசநீக்.

**குணம்:**—கடையில் விற்பது வைப்புச்சரக்கு. செய்யும் விதம்:—ஒருபங்கு கந்தகத்துடன் 2 பங்கு வெள்ளைப்பாஷாணம் சேர்த்து எரித்தால் மனோசிலையாகும். பிறவிச்சரக்கில் ஒரு பங்கு சுத்தபாஷாணமும் 2 பங்கு கந்தகமும் சேர்ந்திருக்கிறது.

**செய்கை—உபயோகம்:**—சருமரோகம், சுவாசம் (5), குளிர்சுரம், குஷ்டம் (18), இவைகளுக்கு இதை சுத்திசெய்துக் கொடுக்க குணமாக்கும்.

அளவு:—($\frac{1}{16}$) வீசம் முதல் ($\frac{1}{8}$) அரைக்கால் கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## தாளகம்.

Yellow Arsenic.—எல்லோ ஆரஸநீக்.

குணம்:—கடையில் விற்பது வைப்புச்சரக்கு. செய்யும் விதம்:—கந்தகமும் சுத்தப்பாஷாணமும் சரி எடை சேர்த்து உருக்கினால் தாளகமாகும். பிறவிச்சரக்கில் ஒருபங்கு சுத்தபாஷாணமும் 3 பங்கு கந்தகமும் சேர்ந்திருக்கின்றது.

**செய்கை—உபயோகம்:**—ஜீக்வாரோகம், தாடைரோகம், குஷ்டம் (18), குளிர்சுரம், சுவாசம (5), காசம் (5), க்ஷயம் (4), சிரஸ்தாபம் இவைகளுக்குக் கொடுக்க இது தகுதியான மருந்து.

அளவு:—($\frac{1}{16}$) வீசம் முதல் ($\frac{1}{4}$) கால் கிறேன்ஸ சுத்தி செய்துக் கொடுக்கலாம்.

## உலந்தாலிங்கம்—லிங்கம்.

Cinnabar.—ஸின்னபார்.

குணம்:—வைப்புச்சரக்கானது சிவந்த பளுவாய் ஊசிக்கம்பிபோல் இருக்கும். ஜலத்தில் கரையாது. பிறவிச்சரக்கும் உண்டு.

**செய்கை:**—வியதாபேதகாரி.

**உபயோகம்:**—இதை சுத்திசெய்து அனுபானத்தில் கொடுக்க சுரம் (64), வாதம் (80), அதிசாரம் (6), சந்நிபாதம் (13), அர்புதபுண், அதிமூத்திரம், கிரந்தி (9), குஷ்டம் (18), தேசுகுத்தல் முதலியவைகள் குணமாகும்.

அளவு:—4 முதல் 10 கிறெனஸ் சுத்திசெய்து கொடுக்க குணமாகும்.

## (இங்கிலிஷ்) ரஜதபஸ்மம்.

Oxide of silver—ஆக்ஸைட் ஆப் ஸில்வர்

குணம்:—இது உளதா நிறம்; வாசனையும் ருசியும் இல்லை.

**செய்கை:**—பலகாரி, அங்காகர்சணநாசகாரி, சமனகாரி.

**உபயோகம்:**—குன்மம் (8), மந்தாக்கினி, ரத்தவமனம், சூலை எரிவு குழந்தையின் நேடித்த பேதி, முதலியவைகளுக்கு இதைக் கொடுக்க தவராமல் சகுணத்தை தரும். தந்தி மேகம், வெள்ளை இவைகளுக்கு பன்றி நெய்யுடன் சேர்த்து நீர்த்தாரையில் உபயோகிக்கலாம்.

அளவு:—$\frac{1}{2}$ முதல் 1 கிறென்ஸ் மாத்திரை செய்துக் கொடுக்கலாம்.

## அபினி உப்பு.

Muriate of Morphia—முயுரியேட் ஆப் மார்பியா.

**குணம் :—** இந்த உப்பு அபினியிலிருந்து எடுக்கப்படும். இது வெள்ளையாயும், அதிகசப்பாயும் இருக்கும். ஜலத்திலும் ஆல்கோஹலிலும் கரையும். பொட்டிலுப்பு திராவகம் சேர்த்தால் சிவந்தநிறமாகும்.

**செய்கை—உபயோகம் :—** அபினிக்கு உள்ள செய்கைகளெல்லாம் மார்பியாவுக்கு உண்டு; ஆனால்தலைவலி, விகாரம் இந்த துர்குணங்களை உண்டாக்காது. உஷ்ணப்படுத்துகிற குணமுமில்லை. அபினியைக் கொடுக்கும் ரோகங்களுக்கு இதைக்கொடுக்கலாம். இது நஞ்சு பதார்த்தம். அளவுக்கு அதிகமானால் விஷமித்துக்கொல்லும்.

**அளவு :—** ¼ (வ) முதல் ½ (த) கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## காடிக்காரம்.

Nitrate of silver—நைட்ரேட் ஆப் ஸில்வர்.

**குணம்:—** இது கட்டி அல்லது நீண்ட கம்பிகளாயிருக்கும். கட்டியானது வெள்ளையாயும், தெளிவாயும் இருக்கும். கம்பிகளானது அழுக்குப் படிந்த வெள்ளை நிறமாயிருக்கும். உடம்பில்பட்டால் கருத்து புண்ணாக்கும்.

**செய்கை:—** அங்காகர்சனநாசகாரி, சமனகாரி.

**உபயோகம்:—** இது சரீரத்தின் மேல்ப் பட்டால் புண்ணாகும், கொப்பளிக்கும். இதை உள்ளுக்குக் கொடுத்தால் வலிப்பு (5), குன்மம் (8), குணமாகும். இது உஷ்ணத்தை தணிக்கும். இதை வெந்நீரில் கரைத்து கண்ணோவுக்கு கண்களிலும், ஸ்திரிகளின் வெள்ளைக்கு யோனிலும், புருஷர்களின் வெள்ளைக்கு நீர்த்தாரையிலும் உபயோகித்தால் உடனே குணத்தைத் தரும். ரணத்தின் துர்மாமிசத்தை நீக்க இதைப் போடப்படும். நில்லாத வீக்கத்தின்மேல் இதனால் கோடு கோடாக இழுத்தால் குணமாகும். தேள் கொட்டல், நாய்க்கடி, பாம்புக்கடி, இவைகளுக்கு கடிவாயில் போடப்படும்.

**அளவு:—** ¼ (வ) முதல் 2 கிறேன்ஸ் மாத்திரை செய்துகொடுக்கலாம்.

## (இங்கிலிஷ்) தங்க பஸ்மம்.

Peroxide of Gold—பேர் ஆக்ஸைட் ஆப் கோல்ட்.

**குணம்:—** இது ஒருவித கருப்பு நிறமாயிருக்கும். ஜலமிட்டால் மஞ்

சள் நிறமாகும். ஜலத்தில் கரையாது. வெளிச்சம், அல்லது சூடு பட்டால் கெட்டுபோகும்.

**செய்கை—உபயோகம்:—** உட்சுரம், மூலம், சன்னி, வலிப்பு, வாதம், பித்தம், குன்மம், பாண்டு, சூலை, குஷ்டம், மேகம் முதலிய கபோ ரோகங்களுக்கு இதைக் கொடுக்க தகுதியானது.

**அளவு:—** ஒரு கிறெணில் பத்தில் ஒரு பாகம் முதல் ¼ (வ) கிறென் கொடுக்கலாம்.

## ஆயோடைட் ஆப் மெர்க்கியுரி.

Iodide of Morcury—ஆயோடைட் ஆப் மெர்க்கியுரி.

**செய்கை:—** உஷ்ணகாரி, வியதாபேதகாரி.

**உபயோகம்:—** இதில் ரசம், ஐயோடையின் இவைகள் சேர்ந்திருக்கிறது. கறுப்பு நிறமான சீசாவில் போட்டு காற்றுப் புகாமல் வைக்கவும். இது நஞ்சு பதார்த்தம். இது ரசத்தின் குணத்தைக் காட்டும். குஷ்டம், மேகம் முதலிய கபோ ரோகங்களுக்குக் கொடுக்க இது வெகுத் தகுதியான மருந்து.

**அளவு:—** 1 முதல் 3 கிறேன்ஸ்க்கொடுக்கலாம்.

## ஹைடிரார்ஜிரி பின்ஐயோடிடம்.

Hydrargyri Biniodidum—ஹைடிரார் ஜிரீ பின்ஐயோடியம்.

**குணம்:—** இது மிகுந்த சிவப்பாய் இருக்கும், ஜலத்தில் கரையாது, ஆல்கோஹலில் கரையும்.

**உபயோகம்:—** ஒரு திராம் வெண்ணெயிலாவது, மெழுகு பிளாஸ்திரியிலாவது இந்த மருந்து 8 கிறேன்ஸ் வைத்து மிஸ்ரித்து ஆமுதரணங்களுக்குபோட வெகு சீக்கிரத்தில் ஆற்றும். உள்ளுக்குக் கொடுக்கக்கூடாது.

## ஸல்பேட் ஆப் குவைனு (உப்பு).

Sulphate of Quina.—ஸல்பேட் ஆப் குவைனு.

**குணம்:—** இந்த உப்பு வெள்ளையாயும் பளபளப்பாயும், சிறு நீண்டகம்பிகள்போலிருக்கும். காற்றுப்பட்டால் சூர்ணமாகும், வெகு கசப்புள்ளது. குளிர்ந்த ஜலத்தில் கரையாது.

**செய்கை:—** பல்காரி, காலக்கிரமமாய் வரும் ரோகங்களை குணமாக்கும்.

உபயோகம்:—குளிர் சுரத்துக்கு இது சஞ்சிவி; சுரம் இல்லாதபோது குறைந்த அளவில் அடிக்கடியும்; குளிர் வருமுன் அதிக அளவில் ஒரேத் தடவையில் கொடுக்கவேண்டியது. இதினால் மலபந்தம், தலைவலி, உஷ்ணம், காதில்இரைச்சல் இவைகள் உண்டாகும். இதை அதிகமாய்ச் சாப்பிட்டு காதுசெவிடு ஆனதும் உண்டு. காதில் இரைச்சல்க் கண்டவுடனே மருந்தை நிறுத்தவும். இதை கொடுப்பதற்குமுன் மலத்தை கழித்தால் வெகு குணத்தைக்காட்டும். இதை சிரோபாரம், வயிறுதாபனம் இவைகள் கண்டிருக்கும்போதுக் கொடுக்கலாகாது.

அளவு:— 1 முதல் 10 கிறேன்ஸ் கொடுக்கலாம். முறைக்காச்சலுக்கு 10 முதல் 20 கிறேன்ஸ் சுரம் வருமுன் கொடுக்கவும். இதை மாத்திரைகள் செய்தாவது அல்லது அத்துடன் விளாவின கந்தகத்திராவகம் 5 துளி விட்டு ஜலம் சேர்த்து கொடுக்கவேண்டியது.

## வெலிரியனேட் ஆப் குவைனு (உப்பு.)

. Valerianate of Quina:—வேலிரியனேட் ஆப் குவைனு.

குணம்:—இந்த உப்பு வெகு கசப்புள்ளது.

செய்கை:—அங்காகர்சன நாசகாரி, அல்ப உஷ்ணகாரி, பலகாரி.

உபயோகம்:—இதைக்கொடுக்க வலிகளோடு கூடிய ஜன்னிகள் உடனேத் தீரும். அடிக்கடி வரும் நரம்புப்பற்றிய வியாதிகளுக்கு இது சஞ்சீவி.

அளவு.—2 கிறேன்ஸ் தினம் 3 தடவைக் கொடுக்கலாம். வாதகுடைச்சலுக்கு குடைச்சல்க்காண ஒரு மணிக்குமுன் இதை இரட்டித்த அளவில் கொடுக்கவும். இதை மாத்திரைகள் செய்துக் கொடுக்கலாம்.

## ஆர்ஸினேட் ஆப் குவைனு (உப்பு.)

Arsenite of Quina–ஆர்ஸினேட் ஆப் குவைனு.

உபயோகம்:—குளிர்சுரத்துக்கு இது வெகு நல்ல மருந்து. இதைக் கொடுத்தால் தவறாமல் நன்மை செய்யும்.

அளவு:—($\frac{1}{10}$) ஒரு கிறேனில் பத்தில் ஒருபாகம் முதல் $\frac{1}{4}$ (வ) கிறேன் வரையில் மெத்த ஜலத்தில் கரைத்துக் கொடுக்க வேண்டியது.

## சைட்ரேட் ஆப் ஐரன் அன்ட் குவைனு (உப்பு.)

Citrate of Iron and Quina–சைட்ரேட் ஆப் ஐரன் அன்ட் குவைனு.

குணம்:—இந்த உப்பு ஜலத்தில் கரையும்.

**செய்கை:**—பல்காரி,

**உபயோகம்:**—காலக்கிரமமாய் வரும் ரோகங்களை குணமாக்கும். இ ரத்தத்தை விருத்திக்கவும், தேகத்தில் பலத்தையுண்டாக்கவும் வல்லமை இதற்கு உண்டு.

**அளவு:**—2 முதல் 5 கிறேன்ஸ் தினம் 3 தடவைக் கொடுக்கலாம்.

## ஸான்டோனின் (உப்பு.)

### Santonine-ஸான்டோனின்.

**குணம்:**—இந்த உப்பு பிரகாசமாயும், தகடுகளாயும் இருக்கும். வெ ளிச்சம்பட்டால் மஞ்சள் நிறமாகும், கசக்கும், ஜலத்தில் கரையாது, சாரா யத்தில் கரையும், சூடுபட்டால் பறந்து போகும்.

**செய்கை:**—கிருமிநாசகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்:**—இதைக் கொடுத்தால் உருண்ட நாகப்பூச்சி, திமிர்ப் பூச்சி, இவைகளைக் கொன்று வெளிப்படுத்தும். இது சிறு குழந்தைக ளுக்கும் தகுதியான மருந்து.

**அளவு:**—4 முதல் 6 கிறேன்ஸ் அல்லது இன்னம் அதிகமாய் பெரிய வர்களுக்கும் ; ½ (௨) முதல் 2 கிறேன்ஸ் வயதுக்குத்தக்கபடி குழந்தைகளு க்கும் கொடுக்கவேண்டியது. ஸ்காமோனி, ரேவல்சின்னி அயச்செந் தூரம், சிற்றாமணக்கெண்ணெய் இவைகளில் எதிலாவது சேர்த்து குழந் தைகளுக்குக் கொடுக்கலாம்.

## எட்டிக்கொட்டை உப்பு.

### Strychnine—ஸ்டிரிக்னைன்.

**குணம்:**—இந்த உப்பு பழுப்பாயும், மணலைப்போலும், கசப்பாயும் இருக்கும். ஜலத்தில் மெத்தகரையாது, ஆல்கொஹலில் கரையும்.

**செய்கை, உபயோகம்:**—எட்டிக்கொட்டையின் செய்கைகளே இதற் கு உண்டு. அதை உபயோகிக்கும் ரோகங்களுக்கு இதையும் உபயோகிக் கப்படும். நித்திரையில் கை கால் சதைகளில் இசிவுகண்டால் மருந்துதே கத்தில் பற்றினதற்கு அடையாளம் ; மருந்து உடனே நிறுத்தவும், அளவு க்கு அதிகமானால் ரணஜன்னிக்குறிகள் காணும், தாடைக்கிட்டிக் கொள் ளும். இது சிலருக்கு தேகத்தில் சேர்ந்து ஒரே தடவையாய் குணத்தைக் காட்டும். 8 வயதுள்ள ஒரு பெண் ¾ (ஙு) கிறேன் உப்பை சாப்பிட்டு இ றந்து போனதும் உண்டு. ஆகையால் இதை வெகு ஜாக்கிரதையாய்க்கொ டுக்கவேண்டியது.

## துவர்ப்பு உப்பு.

### Tannic acid—டானிக் ஆஸிட்.

**குணம்:**—இந்த உப்பு துவர்ப்பு பதார்த்தங்களிலிருந்து எடுக்கப்படும். இது மஞ்சள் வெள்ளை கலந்த நிறமாயும், பிரகாசமாயும், துவர்ப்பாயும் இருக்கும், ஜலத்தில் கரையும்.

**செய்கை:**—ஸங்கோஷனகாரி.

**உபயோகம்:**—ரத்தபெருக்கு, பெரும்பாடு, தூர்பலருக்கு காணும்பேதி வியர்வை, இவைகளுக்குக் கொடுக்கப்படும். மந்தாக்னிக்கு கொடுக்க அவ்வளவு தகுதியானது அல்ல. ரணத்தின் மேல்போட சீழ்குறைட்டும்.

**அளவு:**—½ (உ) முதல் 2 கிறேன்ஸ் ஜலத்தில் கொடுக்கலாம்.

## மாசிக்காய் உப்பு.

### Gallic Acid—காலிக் ஆஸிட்.

**குணம்:**—இந்த உப்பு மாசிக்காயிலிருந்து எடுக்கப்படும். வெள்ளை மஞ்சள் கலந்த நிறமாய் இருக்கும். காற்றில்கெடாது. கொஞ்சம் துவர்ப்பாய் இருக்கும், பிறகு தித்திக்கும்.

**செய்கை:**—ஸங்கோஷனகாரி.

**உபயோகம்:**—இதை வெந்நீரில்போட்டு வாயைக்கொப்பளித்தால் வாய் ரணம் குணமாகும். இதை ரத்தகாசம், ரத்தபிரமேகம், ரத்தவமனம், பெரும்பாடு, அதிவியர்வை முதலிய ரோகங்களுக்குக்கொடுக்க வெகு நன்மை செய்யும். இது மூத்திரத்தில் இறங்கியிருப்பதை அன்னபேதியை போட்டுப்பார்த்தால் தெரியும்.

## பெல்லடொனா உப்பு.

### Sulphate of Atropia—ஸல்பேட் ஆப் அட்ரோபிம்.

**குணம்:**—இந்த உப்பு பெல்லடொனா வேரிலிருந்து எடுக்கப்படும்.

**செய்கை:**—அங்காகர்சன நாசகாரி, வேதனாசாந்தகாரி.

**உபயோகம்:**—பெல்லடோனாவுக்கு உள்ள செய்கைகளே இதற்கும் உண்டு. ஆனால் விசேஷித்து இருக்கும். இதில் 8 கிறேன்ஸ்யை ஒரு அவுன்ஸ் வெந்நீரில் கரைத்து கண்ணிலிட கண்தாரைவிரியும். நேத்திரப்படல் ரோகத்துக்கு இதை முக்கியமாய் உபயோகிக்கப்படும். ரணவைத்தியர்

களுக்கு இது உபயோகமுள்ள மருந்து. இதை உள்ளுக்குக்கொடுத்தால் கொன்று விடும்.

## சாம்பிராணி பதங்கம்.

Benzoic Acid—பேன்ஜாயிக் ஆஸிட்.

**குணம்:**—இது வெள்ளையாய், மிருதுவாய், சிறுகம்பிகளாய் இருக்கும். புளிப்பும் காரமும் உள்ளது.

**செய்கை:**—கபஹரகாரி.

**உபயோகம்:**—இது இருமல் ரோகத்துக்கு நல்ல மருந்து. தனியாய்க் கொடுப்பது அரிது. கபஹரகாரிகளோடு இதை சேர்த்து அதிக ஜலமிட்டுக் கொடுக்கவேண்டியது.

**அளவு:**—5 முதல் 30 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## மண்டூரம்.

**செய்கை:**—தாருட்டியகாரி.

**உபயோகம்:**—அஸ்திசுரம், கபரோகம், மகோதரம், பாண்டு, சோபை வீக்கம், காசம், இளைப்பு, முதலியவைகளுக்கு இதை செந்தூரமாக்கிக் கொடுக்கப்படும்.

## காரீயம்.

Black Lead—பிளாக் லேட்.

**உபயோகம்:**—இதை பஸ்மமாக்கி குஷ்டம், குன்மம், வலிப்பு இவைகளுக்குக் கொடுக்கப்படும்.

## வெள்ளீயம்.

White Lead—வைட் லேட்.

**உபயோகம்:**—பிரமேகம், கபரோகம், மேகம், சுரம், சுவாசம் இவைகளுக்கு இதை பஸ்மமாக்கி கொடுக்கத்தீரும்.

## தாம்பிரம்.

Copper—காப்பர்.

**உபயோகம்:**—மகோதரம், சந்நிபாதம், வெண்குஷ்டம், திரிதோஷம் குன்மம், பிலீகம், கபரோகம், காசம், தாதுநஷ்டம் முதலிய பற்பல கோரரோகங்களுக்கு இதை செந்தூரமாக்கிக் கொடுக்கப்படும்.

## முத்து—சிவரத்தினம்.

செய்கை:—வீரியவர்த்தனகாரி.

உபயோகம்:—கோழை, அஸ்திசுரம், தேகஎரிச்சல், இவைகளுக்குக் கொடுக்க குணமாகும். வீரிய விருத்தியாக்கும்.

## பவளம்.

உபயோகம்:—இதை பஸ்மமாக்கி கபரோகம், சுரம், இருமல், காசம் இவைகளுக்குக்கொடுக்க குணமாகும்.

## ரசகர்ப்பூரம்—பூரம்.

உபயோகம்:— இதை சுத்திசெய்து ½ (உ) முதல் 1½ குன்றிமணி யிடை அனுபானத்திலிட பித்த சூலை, வாதபிடிப்பு, வயிற்றுநோய், சிலேஷ்மம் (20), மேகம் (20), வாதம் (80), குணமாகும்,

---

# 17-வது அத்தியாயம்.

---

## கலவைச் சூர்ணங்கள்.

---

### சீமைச்சுண்ணாம்பு கலவைச்சூர்ணம்.

Compound Powder of chalk—**கம்பவுண்டு பவுடர் ஆப் சாக்.**

செய்முறை:— சுத்திசெய்த சீமைச்சுண்ணாம்பு ½ (உ) பவுண்ட், கருவாப்பட்டை 4 அவுன்ஸ், டார்மேண்டில் ரூட் 3 அவுன்ஸ், விளாம்பிசின் 3 அவுன்ஸ், திப்பிலி ½ (உ) அவுன்ஸ் இவைகளைத் தனித்தனியே சூர்ணித்து சேர்த்துக்கொள்ளவும்.

செய்கை :— ஆம்லநாசகாரி, சங்கோசனகாரி, உஷ்ணகாரி.

உபயோகம் :— குழந்தை, நாஜூகதேகமுடையவர்கள் இவர்களுக்கு காணும் பேதி முதலியவைகளுக்குக் கொடுக்க குணமாகும்.

அளவு:— 5 முதல் 20 கிரேன்ஸ் கொடுக்கலாம்.

### ஜாலப் கலவை சூர்ணம்.

Compound Powder of Jalap—**கம்பவுண்ட் பவுடர் ஆப் ஜாலப்.**

செய்முறை:— ஜலப் சூர்ணம் 3 அவுன்ஸ், திராக்ஷஉப்பு 6 அவுன்ஸ், சுக்கு 2 திராம். இவைகளை தனித்தனியே சூர்ணித்து சேர்த்துக்கொள்ளவும்.

**செய்கை:—** விரேசனகாரி.

**உபயோகம்:—** இதைக்கொடுக்க தண்ணீர்த் தண்ணீராய் பேதியாகும். வயிறுக்கடுக்காது· மலபந்தக்காரர்களுக்குக்கொடுக்க தகுதியான மருந்து.

**அளவு:—** 20 கிறேன்ஸ் முதல் 60 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## ஸ்காமோனி கலவை சூர்ணம.

## Compound Scammony Powder—கம்பவுண்ட் ஸ்காமோனி பவுடர்.

**செய்முறை:—** ஸ்காமோனி 1 அவுன்ஸ், ஜாலப் கெட்டிச்சத்து 1 அவுன்ஸ், சுக்கு 2 திராம் இவைகளை தனித்தனியே சூர்ணித்து சேர்த்துக் கொள்ளவும்.

**செய்கை:—** விரேசனகாரி.

**உபயோகம்;—** மலபந்தம், கிருமி, நீர்கோவை இவைகளுக்கு இதைக்கொடுத்தால் செவ்வையாய் பேதியாக்கும்.

**அளவு:—** 10 முதல் 30 கிறேன்ஸ் தூளை ஜலத்தில் கொடுக்கலாம்.

## கைநோ கலவை சூர்ணம்.

## Cempound Powder of Kino—கம்பவுண்ட் பவுடர் ஆப் கைநோ.

**செய்முறை:—** கைநோ 15 திராம், கருவப்பட்டை 4 திராம், உலர்ந்த அபினி 1 திராம், இதைகளை தனித்தனியே சூர்ணித்து சேர்த்துக்கொள்ளவும். 20 கிறேன்ஸ் சூர்ணத்தில் 1 கிறேன் அபினி இருக்கிறது.

**செய்கை:—** சங்கோசனகாரி.

**உபயோகம்:—** அதிசாரபேதி, ரத்தபேதி, சீதபேதி முதலியவைகளுக்குக்கொடுக்க இது மகா சிரேஷ்டமான மருந்து.

**அளவு:—** 10 முதல் 20 கிறேன்ஸ் ஜலத்தில்கொடுக்கலாம்.

## இபிகாகியு ஏனு கலவை சூர்ணம்.

## Dover's Powder—டோவர்ஸ் பவுடர்.

**செய்முறை:—** இபிகாகியு ஏனு சூர்ணம், உலர்ந்த அபினி வகைக்கு திராம் ஒன்று, ஸல்பேட் ஆப் பொடாஷ் திராம் 8 இவைகளைச்சேர்த்து செவ்வையாய் அரைத்துக்கொள்ளவும். 10 கிறேன்ஸ் சூர்ணத்தில் 1 கிறேன் அபினி இருக்கிறது.

**செய்கை—உபயோகம்:—** வாந்தி, சிரோபாரம், இவைகள் காணும் போது இதைக் கொடுக்கலாகாது. இருமல், முடக்குவாதம், நீர்கோவை ஐலுப்பு, முதலியவைகளுக்குக்கொடுக்க இது வெகு நல்ல் மருந்து.

**அளவு:—** 5 முதல் 10 கிறேன்ஸ் கொடுக்கலாம்.

## அஞ்சனக்கல் கலவை பஸ்மம்.

Co. Antimonial Powedr—கம்பவுண்ட் ஆண்டிமோனியல் பவுடர்.

**குணம்:—** இது வெள்ளையாய் நறநறவென்று விரல்களுக்கு தட்டுப் படும். வாசனையும், ருசியும் இல்லை. ஜலத்தில் கரையாது.

**செய்கை:—** சுவேதகாரி, வியதாபேதகாரி, சுரஹரகாரி, வமனகாரி.

**உபயோகம்:—** இதை குறைந்த அளவில்கொடுக்க சருமரோகத்தை நிவர்த்தியாக்கும். சுரம், கீல்வாதம் இவைகளுக்குக்கொடுக்க இது அடுத்த அவுஷதம்.

**அளவு:—** 3 அல்லது 6 முதல் 10 கிறேன்ஸ் வரையில் தேனிலாவது அல்லது கர்ப்பூரம், அபினி, இவைகளோடு சேர்த்தாவது கொடுக்கலாம்.

## சீமைச்சுண்ணாம்பு கலந்த ரசபஸ்மம்.

Grey Powder—கிரேபவுடர்.

**குணம்:—** இந்த பஸ்மம் பளுவாயும், சாம்பல் நிறமாயும் இருக்கும். ஜலத்தில் கரையாது.

**செய்முறை:—** 3 அவுன்ஸ் சுத்திசெய்த ரசத்தை, 5 அவுன்ஸ் சுத்தி செய்த சீமைச்சுண்ணாம்புடன் சேர்த்து ரசம் கண்ணுக்குத்தோற்றாமல் போகிறவரையில் அரைத்துக்கொள்ளவும். 8 கிறேன்ஸ் பஸ்மத்தில் 3 கிறேன்ஸ் ரசம் இருக்கிறது.

**செய்கை:—** ஆம்லநாசகாரி, வியதாபேதகாரி, விரேசனகாரி.

**உபயோகம்:—** இது குழந்தைகளுக்குக்கொடுக்க வெகுசிலாக்கியமான அவுஷதம். மந்தபேதி, அஜீர்ணம் முதலியமந்தத்தால் உண்டாகும் சகலவியாதிகளுக்கும் கொடுக்கப்படும். உஷ்ணபேதி, சீதரத்தபேதி இவைகளுக்கு இதை அனுபானத்தில் கொடுக்க அதிசீக்கிரத்தில் குணமாக்கும்.

**அளவு:—** 2 முதல் 5 கிறேன்ஸ் குழந்தைகளுக்கும், 5 முதல் 30 கிறேன்ஸ் பெரியவர்களுக்கும் தேனிலாவது, சர்க்கரையிலாவது கொடுக்கலாம்.

## ரேவல் சின்னி கலவை சூர்ணம்.

Compound Rhubarb Powder—கம்பவுண்ட் ருபார்ப் பவுடர்.

**செய்முறை:—** 1 பவுண்ட் மாக்னீஷிய, 2 அவுன்ஸ் சுக்குத்தூள், 4 அவுன்ஸ் ரேவல் சின்னி சூர்ணம் இவைகளையெல்லாஞ்சேர்த்து அரைத்துக் கொள்ளவும்.

**செய்கை—உபயோகம்:—** இதை குழந்தைகளுக்கு பேதியை உண்டாக்குவதற்கு கொடுக்க வெகு நல்லமருந்து. பெரியவர்களுக்கும் கொடுக்கலாம்.

**அளவு:—** 20 முதல் 60 கிறேன்ஸ் பெரியவர்களுக்கும், 5 முதல் 10 கிறேன்ஸ் குழந்தைகளுக்கும் கொடுக்கப்படும்.

---

## 18-வது அத்தியாயம்.

---

சில சரக்குகள் ஆணாகவும், சில சரக்குகள் பெண்ணாகவும் இருப்பதை நமக்கு தெரிந்திருக்கவேண்டியது. உப்புசரக்குகள் ஆண் அல்லது விந்துஎன்றும், புளிப்பு சரக்குகள் பெண் அல்லது சுரோணிதம் என்றும் சொல்லப்படும். இவ்விரண்டும் சேர்ந்தால், சேர்ந்துகட்டியாய் போகிறதினாலே ஆண்சரக்கு, பெண்சரக்கு என்று பெயர் பெற்றன. அவைகளை இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

### ஆண்-பெண்-சரக்குகள்

| ஆண்சரக்கு. | பெண்சரக்கு. | ஆண்சரக்கு. | பெண்சரக்கு. |
|---|---|---|---|
| கல்லுப்பு. | பழம் புளி,லிங்கம். | அப்பிரகம். | காயந்தசுருக்கு. |
| வெடியுப்பு. | படிக்காரம். | கௌரிப்பாஷா | புளிமாங்காய். |
| காந்தம். | காடி. | ணம். | |
| சுடன். | துரிசு. | வெள்ளைப்பா | பனங்கள்ளு. |
| கடல்நுரை. | கற்சன நீர். | ஷாணம். | |
| ரசம். | கந்தகம். | வைக்கிராந்தம். | நிமிளை. |
| இரும்பு. | எரியலாம் எண் } | தங்கம். | மனோசிலை. |
| | ணெய். } | நவக்ஷாரம். | வெங்காரம். |
| பேதி. | பொன்னம்பர். | பச்சைகர்ப்பூரம் | இந்துப்பு. |
| தொட்டிப்பா | புளியரணை; } | கர்ப்பூரசலா | தாம்பிரம். |
| ஷாணம், | புளிநரணை. } | சித்து. | |
| | | மாங்கிசபேதி. | கல்மதம். |
| | | வீரம். | புளியாரை, } |
| | | | நாகம். } |

## 19-வது அத்தியாயம்.

திராவகங்கள், ஐயநீர்கள், ஈதர்கள் முதலிய மஹாவல்லமையுள்ள அவுஷதங்களின் பெயர்களும் உபயோகங்களும் கூறப்படும்.

### கந்தகத்திராவகம்.

Sulphuric Acid—ஸல்புரிக் ஆசிட்.

**குணம்:**—இது தளமாயும், அதிபுளிப்பாயும் இருக்கும். தேகத்தில் பட்டால் புண்ணாகும். ஜலத்துடல் சேர்த்தால் ஜலம் சூடாகிவிடும்

**செய்கை:**—விரணகாரி, க்ஷோணகாரி, ஸங்கோசனகாரி.

**உபயோகம்:**—இதை உள்ளுக்குச் சாப்பிடக் கூடாது. பட்டவிடம் புண்ணாகும். இத்துடன் ஜலம் சேர்த்து செய்யப்படும் விளாவின கந்தகத்திராவகத்தை உள்ளுக்குக் கொடுக்க உபயோகமுள்ளது. அதை அடியில்சொல்லப்படும்.

### விளாவின கந்தகத்திராவகம்.

Diluted Sulphuric Acid—டைலுடேட் ஸல்புரிக் ஆசிட்.

**செய்முறை.**— 15 கிராம் கந்தகதிராவகத்தை, 20 அவுன்ஸ் ஜலத்துடன் கொஞ்சங்கொஞ்சமாய் விட்டு சேர்த்துக்கொள்ளவேண்டியது. அதிக சூடுண்டாகும்.

**செய்கை:**— சீதளகாரி, ஸங்கோசனகாரி, பலகாரி.

**உபயோகம்:**— இதை துர்பலம், ரத்தவாந்தி, அதிவியர்வை, காசம், ரத்தகாசம், நீடித்தசரும ரோகங்கள், அதிசாரம், அஜீர்ணம், விக்கல், வாந்திபேதி, முதலிய கடோ ரோகங்களுக்கு கொடுக்க வெகு குணத்தைத் தரும். வாந்தியை நீக்க இது வெகு நல்ல மருந்து.

**அளவு:**— 4 முதல் 30 துளி நிலவேம்புக் கசாயத்தில் கொடுக்கலாம். இதை பேனாவிலாவது, கிலாஸ்குழாவினாலாவது உறிஞ்சிப் பற்களுக்குப் படாமல் சாப்பிட்டு சவட்டுப்பு கலந்த ஜலத்தால் வாயைக் கொப்பளித்து விடவேண்டியது.

### கறிஉப்புத்திராவகம்.

Hydrochloric Acid—ஹைட்ரோகுளோரிக் ஆசிட்.

**குணம்:**—கிர்த்தோஷமுடையத்திராவகம் நிறமற்றதாய் இருக்கும்;

ஆனல் சாதாரணமாய் மங்கலான மஞ்சள் நிறமுடையது. இதன் வாச னைப் பட்டால் மூச்சடைப்பு காணும்.

செய்கை:— விரணகாரி, காரமுள்ள நஞ்சு.

உபயோகம்:—இதை உள்ளுக்குச் சாப்பிடக் கூடாது. பட்டவிடம் புண்ணாகும். ½ (ஐ) முதல் 1 கிராம் கறிஉப்புத்திராவகத்தை 4 அவுன்ஸ் ஜலத்தில் சேர்த்து வாயைக் கொப்பளிக்கவாவது ரணங்களைக்கழுவவாவது உபயோகிக்கப்படும். இத்துடன் ஜலம் சேர்த்து செய்யப்படும் விளா வினக்கறி உப்புத்திராவகத்தை உள்ளுக்குக்கொடுக்க உபயோகமுள்ளது. அதை அடியில் சொல்லப்படும்.

## விளாவினகறிஉப்புத் திராவகம்.

Diluted Hydrochloric Acid—டைலுடேட் ஹைட்ரோகுளோரிக் ஆஸிட்

செய்முறை:—1 அவுன்ஸ் கறிஉப்பு திராவகத்துடன் 3 அவுன்ஸ் தீநீர்விட்டு சேர்த்துக்கொள்ளவும்.

செய்கை:—பலகாரி, சீதளகாரி, கிருமிநாசகாரி, பூதிகந்த நாசகாரி.

உபயோகம்:—ஜீர்ண உறுப்புகளுக்கு பலத்தை உண்டாக்கவும், வயி ற்றில் கிருமிகளை உற்பத்திஆக்காமல் செய்யவும், இதற்கு வெகு வல்லமை உண்டு. மூத்திரரோகம், சொறுக்கை, விஷசுரம், சுரம் இவைகளுக்கு இதைக்கொடுக்க உடனே குணத்தை அறியலாம்.

அளவு:—10 முதல் 20 துளி ஜலத்திலாவது, கசப்பு கசாயத்திலாவ துக் கொடுக்கலாம். இதைச்சாப்பிடும் விதிகள் விளாவின கந்தகத்திராவகத் தைச்சாப்பிடும் விதிகளை அனுசரிக்கவும்.

## பொட்டிலுப்புத்திராவகம்.

Nitric Acid—நைட்ரிக் ஆஸிட்.

குணம்:—தோஷமற்ற பொட்டிலுப்பு திராவகத்துக்கு நிறமில்லை. மார்பியாவுடன் (அபினிஉப்பு) சேர்ந்தால் சிவந்துபோகும். பட்டவிடம் புண்ணாகும்.

செய்கை:—காரமுள்ள நஞ்சு, விரணகாரி.

உபயோகம்:—இதை உள்ளுக்குச்சாப்பிடகூடாது. இதினல் விஷ க்கடிகளைப்புண்ணாக்கப்படும். இதை தேங்காய் எண்ணெயுடன்சேர்த்து சொறி சிரங்கு முதலிய சரும ரோகங்களுக்குப்பூசிவர குணமாகும். இந்த

திராவகத்துடன் ஜலம் சேர்த்துச்செய்யப்படும் விளாவின பொட்டிலுப்பு திராவகத்தை உள்ளுக்குக்கொடுக்க உபயோகமுள்ளது. அதை அடியில் காண்க.

## விளாவின பொட்டிலுப்புத் திராவகம்.

Diluted nitric acid—டைலுடேட் நைட்ரிக் ஆஸிட்.

**செய்முறை:**—3 அவுன்ஸ் பொட்டிலுப்புத் திராவகத்தை 17 அவுன்ஸ் தீ நீரில் விட்டு சேர்த்துக்கொள்ளவும்.

**செய்கை:**—பலகாரி, சீதளகாரி, வியதாபேதகாரி.

**உபயோகம்:**—மூத்திரரோகம், கொருக்கை, மேகவாதம், பக்கசூலை, மேகப்புடை, பிலீகம், அதிமூத்திரம், நீர்க்கோவை, சுரம், அஜீர்ணம், பேதி, சூலைஎரிவு, முதலிய பயங்கரமான ரோகங்களுக்கு இது அடுத்த அவுஷதம். இதைக்கொடுத்தவுடனே குணத்தை அறியலாம்.

**அளவு:**—10 முதல் 30 துளி ஜலத்தில் கொடுக்கலாம். இதைச்சாப்பிடும் விதிகள் விளாவின கந்தகத்திராவகத்தைச் சாப்பிடும் விதிகளை அனுசரிக்கவும்.

## சொர்ணபேதித்திராவகம்.

Nitro Hydrochloric Acid—நைட்ரோ ஹைட்ரோகுளோரிக் ஆஸிட்.

**குணம்:**—இது பசுமையான பொன்னிறமாய் இருக்கும்; பொன்னை கரைத்துவிடும். இதின் வாசனைப்பட்டால் மூச்சடைப்பு காணும்.

**செய்முறை:**—ஒரு அவுன்ஸ் பொட்டிலுப்பு திராவகத்துடன் இரண்டு அவுன்ஸ் கறிஉப்பு திராவகம்சேர்த்து கற்கார்க்குடைய பச்சை சீசாவில் போட்டு குளிர்ச்சியான இடத்தில் வைக்கவேண்டியது.

**செய்கை:**—கார முள்ள நஞ்சு, விரணகாரி.

**உபயோகம்:**—கறிஉப்பு திராவகம், பொட்டிலுப்பு திராவகம் இவைகள் ஜலத்தில் விளாவி உபயோகிப்பதுபோலவே இதையும் ஜலத்தில் விளாவிக்கொடுத்தால் வியாதிகளை நீக்கி தேகத்துக்குப்பலத்தைக் கொடுக்கும். இதற்கு துவர்ப்புகுணமும் உண்டு. இதை மூத்திரரோகங்கள், மேஹரோகங்கள், பித்தபாண்டுரோகம், வாந்திபேதி, சருமரோகங்கள், முதலிய பற்பல கரோரோகங்களுக்குக் கொடுக்க வெகு நன்மை செய்யும்.

**அளவு:**—அதிக ஜலமிட்டு விளாவின திராவகத்தில் 8 முதல் 20 துளிக்கொடுக்கலாம். இதைச்சாப்பிடும் விதிகள் விளாவின கந்தகத்திராவகத்தைச்சாப்பாடும்விதிகளை அனுசரிக்கவும்.

## விளாவின திமுறுகல் பாஷாணத்திராவகம்

Diluted Phosphoric Acid—டைலுடேட் பாஸ் பொரிக் ஆஸிட்.

**செய்முறை:**—இங்கிலீஷ் புஸ்தகத்தில் விவரமாகதெரிவித்திருக்கின்றது. அதில் பார்வையிடவும்.

**செய்கை:**—சீதளகாரி, பலகாரி, வீரியவர்த்தனகாரி.

**உபயோகம்:**—தாகத்தை அடக்க. இது வெகு நல்ல மருந்து. ஆதலால் மதுமூத்திரரோகத்தில் தாகத்தை அடக்கக் கொடுக்கப்படுகின்றது.

**அளவு:**—10 துளி முதல் 1 திராம் வரையில் ஜலத்தில் கலந்து சர்க்கரைச்சேர்த்துக் கொடுக்கலாம்.

## ஸ்பிரிட் ஆப் நைடரிக் ஈதர்.

Spirit of Nitric Ether—ஸ்பிரிட் ஆப் நைடரிக் ஈதர்.

**குணம்:**—இது வெள்ளையாயும், இனிப்பாயும், சில்லென்று இருக்கும்.

**செய்கை:**—அங்காகர்சன நாசகாரி, உற்சாககாரி, மூத்திரவர்த்தனகாரி, சுவேதகாரி.

**உபயோகம்:**—இதை மூத்திரரோகம், மகோதரம், சுரம், நீர்க்கட்டு, நீர்எரிவு முதலிய அநேக கொடிய ரோகங்களுக்குக் கொடுக்கத்தவறாமல் நன்மை செய்யும்.

**அளவு:**—½ (ஐ) முதல் 2 திராம் தகுந்த அனுபானங்களில் கொடுக்கவும்.

## ஸல்பியூரிக் ஈதர்.

Sulphuric Ether—ஸல்பியூரிக் ஈதர்.

**குணம்:**—இது பரிசுத்தமாய், வெள்ளையாய், நல்லவாசனையாய் இருக்கும். அதித்துரையில் பறந்துவிடும். தீப்பட்டால் பற்றிக்கொள்ளும். ஜலத்தைப் பார்க்கிலும் இது லேசானது.

**செய்கை:**—அல்ப உஷ்ணகாரி.

**உபயோகம்:**—இதைக்கொடுத்தால் சர்வாங்கம் உஷ்ணித்து அதிசீக்கிரத்தில் சாந்தமாகும். மார்பு அடைப்பு, சூலை, மாந்தம், நரம்புப்பற்றிய தலைவலி, இருதய துடிப்பு, மூர்ச்சை, சுவாசம், காசம், வயிற்றுவலி குதகசூலை, தொண்டைக்கம்மல், நரம்பைப்பற்றிய சகல ரோகங்களுக்கும் கொடுக்க இது வெகு சிரேஷ்டமானது. இதை அடிக்கடி கொடுக்க

வேண்டியது. ஸஸ்திரவேலைக்கு நோய் தெரியாமலிருக்க குளோரொபா ரம் என்னும் மருந்தை கண்டுபிடிப்பதற்கு முன் இதை முகரவைக்கப் படும். இப்போது ஸஸ்திர வேலைக்கு உபயோகப் படுத்துகிறதில்லை.

அளவு :—15 முதல் 60 துளி ஜலத்தில் கொடுக்கலாம்.

## குளோரொபாரம்.

### Chloroform—குளோரோபாரம்.

**குணம்** :—இது ஜலத்தைப்பார்க்கிலும் பளுவாயும், வெள்ளையாயும் இருக்கும். ஜலத்தில் கொஞ்சமாய் கரையும். காற்றுப்பட்டால் பறந்து விடும்.

**செய்கை** :—அங்காகர்சன நாசகாரி, நித்திராகாரி, உஷ்ணகாரி, சமனகாரி, ஸ்மிரிதிரோதகாரி.

**உபயோகம்** :—தனுர்வாதம், வலி (5), இசிவு, சூதகஜன்னி, அஜிர்ணம், அதிஸாரம், குடைச்சல், இரைப்பு, சுவாசம், காசம், இருமல் முதலிய வைகளை வெகுசீக்கிரத்தில் நிவர்த்தியாக்க இதற்கு மஹாவல்லமை உண்டு. இதைத்தகுந்த அனுபானத்தில் கொடுக்கவேண்டியது. இதை மோந்தால் உணர்ச்சியில் லாமலும் நோய்த்தெரியாமலும் செய்து விடுவதால் ஸஸ்திர வேலைக்கு, உபயோகித்து வருகிறார்கள். ஸஸ்திரவேலைக்கு உபயோகிக்கும் விதிகள் இங்கிலீஷ் புஸ்தகத்தில் பார்வை யிடவும். இதை கொஞ்சமாய் உள்ளுக்குக்கொடுத்தால் உஷ்ணித்து நாடியைத்தீவரப் படுத்தும்; அதிகமாய்கொடுத்தால் கயப்புக்காணும், பிரக்ஞையில்லாமல் செய்யும், பிராண அபாயமும் நேரிடும். ஆகையால் இதை அளவுக்கு அதிகமாய்க் கொடுக்கலாகாது.

அளவு :—5 முதல் 10 துளிவரையில் சாராயம், விளாம்பிசின், முட்டையின் மஞ்சள்கருவு இவைகளில் எதிலாகிலும் கொடுக்கலாம்.

## நவக்ஷார ஜெயநீர்.

### Liquor Ammonia—லைகர் அம்மோனிய.

**செய்கை** :—அங்காகர்சன நாசகாரி, ஆம்லநாசகாரி, உஷ்ணகாரி, சுவேதகாரி, சோணகாரி.

**உபயோகம்** :—இதை பல்ஹீனம், வாந்திபேதி, சூதகஜன்னி, குளிர்மை, அஜிர்ணம்; முதலிய பற்பல பலத்த ரோகங்களுக்கு இதை அனுபானத்தில்க் கொடுத்தால் உடனே குணத்தை அறியலாம். மயக்கம், தலைவலி, மூர்ச்சை, காக்கைவலி, முதலியவைகளுக்கு இதை முகரவைத்தால் உட

னே பிரக்கினையை வரும். இதற்கு வயிற்றிலுள்ள புளிப்பைக்கண்டிக்க வெகு வல்லமை உண்டு. தேள், பூரான், பாம்பு முதலியவைகளின் விஷக் கடிகளுக்கு இதை கடிவாயில் போட்டு தேய்த்தும், உள்ளுக்கும் ஜலத்தில் கொடுக்கலாம்.

அளவு :—10 முதல் 30 துளி, ஜலம், பால், கர்ப்பூரஜலம் முதலிய வைகளில் கொடுக்கலாம்.

## பரிமள நவக்ஷாரமது.

Aromatic Spirits of Ammonia—ஆரொமாடிக் ஸ்பிரிட்ஸ் ஆப்அமோனி

துணம்:—இது காரமாயும், இனிப்பாயும், இருக்கும். இதை [ய. காற்றுப்படாமல் குளிர்ச்சியான இடத்தில் வைக்கவேண்டியது.

செய்கை:—உற்சாஹகாரி.

உபயோகம்:—நவக்ஷார ஜெய நிருக்கு இருக்கும் செய்கைகளே இதற்கும் உண்டு; ஆனால் இது இனிப்பாயும், வாசனையாயும், காரமாயும் இருக்கும். மூர்ச்சை, தலைவலி, சோர்வு, மாந்தம், குலைஎரிவு, சூதகஜன்னி முதலிய பலமான ரோகங்களுக்கு இதைக்கொடுக்கத் தகுதியானது.

அளவு :—15 முதல் 60 துளி ஜலத்தில கொடுக்கலாம்.

## இங்கு நவக்ஷாரமது

Foetid Spirit of Ammonia—பயட் ஸ்பிரிட் ஆப் அம்மோனிய.

செய்முறை :—பரிமள நவக்ஷாரமது வுடன் பெருங்காய பாவனத்திரவத்தைச் சேர்த்து செய்யப்படும்.

செய்கை :—அங்காகர்சன நாசகாரி, உற்சாஹகாரி.

உபயோகம் :—இதை காசம், சுவாசம், வலி (5), இசிவு, சூதகஜன்னி, சன்னிமுதலிய கரோ ரோகங்களுக்குக் கொடுக்கத் தவராமல் நன்மை செய்யும்.

அளவு :—½ (உ) முதல் 1 திராம் கர்ப்பூர ஜலத்தில்க் கொடுக்கலாம்

## லைகர் அம்மொனிய அஸிடேடிஸ்.

Liquor Ammonia Acetatis—லைகர் அம்மோனிய அஸிடேடிஸ்.

துணம்:—இந்த உப்பு காற்றுப்பட்டால் நீராகிவிடும். ஆகையால் ஜலத்தில் கலந்து வைககவேண்டியது.

செய்முறை:—ஒருபையின்ட்டில்யூடேட் அஸிடிக் ஆஸிட்டில் 9 திராம்நவக்ஷார்உப்பு அல்லது நுரைஎழும்பாமலிருக்கஎவ்வளவுதேவையானதோ

அவ்வளவு உப்பை சேர்த்து கொள்ளவும். உப்பிலிருக்கிற கார்போனிக் ஆஸிட் வாயு வெளிப்படுவதே பொங்குதலுக்குக்காரணம்.

**செய்கை:**—சுவேதகாரி, உஷ்ணகாரி, மூத்திரவர்த்தனகாரி.

**உபயோகம்:**—இத்துடன் பன்னீரைச்சேர்த்து கண்ணோவுக்குப்போடலாம். இதை ஜலத்திற்சேர்த்து வெள்ளைக்கு நீர்த்தாரையில் அடிக்கவும், காயம், சுளுக்கு, எலும்புமுறிவு முதலியவைகளுக்கு மேலுக்கு போடவும் இது வெகு நல்ல மருந்து. நீர்க்கட்டு, கீல்வாதம், சுரம், முதலிய சுரே ரோகங்களுக்கு வியர்வையை உண்டாக்க இது தகுதியான அவுஷதம். இதை அடிக்கடி கொடுக்கப்படும்.

**அளவு:**—2 முதல் 6 திராம 4 மணிக்கு ஒருதரம் கர்ப்பூரஜலத்தில் கொடுக்கவும்.

## லைகர் பொட்டாஸ்ஸி.

Liquor Pottasse—லைகர் பொட்டாஸ்ஸி.

**குணம்:**—இது வெள்ளையாய், தெளிவாய், தளமாய், விறுவிறுப்பாய், காரமாய் இருக்கும். கல்கார்க்குபச்சை சீசாவில் போட்டுவைக்கவேண்டியது.

**செய்கை:**—ஆம்லநாசகாரி, மூத்திரவர்த்தனகாரி, அஸ்மரிஹரகாரி, வியதாபேதகாரி, ஸோபாநாசகாரி.

**உபயோகம்:**—இதைக்கீல்வாதம், அஜிர்ணம், வயிறுஎரிவு, வயிறு இரைச்சல், குலை எரிவு, முதலிய கொடிய ரோகங்களில் உண்டாகும் புளிப்பைக் கண்டிக்கவும், மேகம், க்ஷயம், கண்டமாலை, சருமரோகம் முதலிய பலமான ரோகங்களை நிவர்த்தியாக்கவும், அடிக்கடி உபயோகிக்கப்படும். நாள்பட இதைச்சாப்பிட்டால் தேகத்தின் பலத்தை ஹரிக்கும். அளவுக்கு அதிகமாயாவது, ஜலம் விடாமலாவதுக் கொடுத்தால் கொன்றுவிடும்.

**அளவு:**—10 முதல் 40 துளி பாலிலாவது, தகுந்த அனுபானத்திலாவதுக் கொடுக்கலாம்.

## சவ்வீர ஜெயநீர்.

Liquor Hydrargyri Bichloridi—லைகர் ஹைடிரார்ஜரிபைகுளோரிடை.

**செய்முறை:**—10 கிறேன்ஸ் சவ்வீரம், 10 கிறேன்ஸ் நவக்ஷாரம் இவைகளை ஒருபைன்ட் வெந்நீரில் சேர்த்துக்கொள்ளவும். ½ (உ) கிறேன் சவ்வீரம் ஒரு அவுன்ஸ் ஜெயநீரில் உண்டு.

செய்கை:—உபயோகம்:—சவ்வீரத்தைக்கொடுக்கும் ரோகங்களுக்கு இதைக்கொடுக்கப்படும். அதின் செய்கைகளே இதற்கும் உண்டு.

அளவு:—½ (அ) முதல் 2 திராம்வீதம் ஜலத்திலாவது, நன்னாரிவேர் கஷாயத்திலாவதுக் கொடுக்கலாம்.

## வெள்ளைப்பாஷாண ஜெயநீர்.

Liquor Pottasse Arsenitis—லைகர் பொடாஸி ஆர்ஸிணைடிஸ்.

செய்முறை:— ½ பைன்ட் திநீரில் 80 கிறேன்ஸ் வெள்ளைப்பாஷாணத்தூள், 80 கிறேன்ஸ் கார்பொனெட் ஆப் பொடாஸ், இவைகளைப்போட்டுக்கரைகிறவரையில் எரித்து, ஆறினபிறகு 5 திராம் கம்பவுன்ட் டிங்சர் ஆப் லாவென்டர் சேர்த்து, பிறகு ஒரு பையின்ட் வெள்ளைப்பாஷாண ஜெயநீர் ஆகும்படி தேவையான ஜலத்தைச்சேர்த்துக்கொள்ளவும்.

செய்கை:—உபயோகம்:—வெள்ளைப்பாஷாணத்தின் செய்கைகளே இதற்கும் உண்டு. அதை உபயோகிக்கும் ரோகங்களுக்கு இதைக்கொடுக்கலாம். ஒரு அவுன்ஸ் ஜெயநீரில் 4 கிறேன்ஸ் வெள்ளைப்பாஷாணம் உண்டு.

அளவு:—3 முதல் 5 துளி தினம் 2—3 தடவைக்கொடுக்கலாம்.

## டனோவன்ஸ் ஷொலுஷன்.

Donovan's Solution—டனோவன்ஸ் ஷொலுஷன்.

செய்முறை:—சுத்தப்பாஷாணம் 6 கிறேன்ஸ், சுத்திசெய்த ரசம் 16 கிறேன்ஸ், சுத்திசெய்த ஐயொடயின் 50½ கிறேன்ஸ், இவைகளை கல்வத்திலிட்டு ½ (அ) திராம் ஆல்கோஹல்விட்டு ஈரம்வற்றி உலர்ந்துபோகிறவரையில் அரைத்து அத்துடன் 8 அவுன்ஸ் ஜலத்தை கொஞ்சங்கொஞ்சமாகவிட்டு அரைத்து ஒரு குப்பியில்போட்டு கொதிக்கிறவரையில் சுடவைத்து, குளிர்ந்தபிறகு 8 அவுன்ஸ், 6 திராம் ஆகும்படி தேவையான தீ நீரைச்சேர்த்துக்கொள்ளவும். ஒரு அவுன்ஸ் மருந்தில் ஒரு கிறேன் பாஷாணமும், 2 கிறேன்ஸ் ரசமும், 6 கிறேன்ஸ் ஐயோடைனும் உண்டு.

செய்கை:—பாஷாணம், ரசம், ஐயோடைன் இவைகளுக்குஉள்ள செய்கைகளே இதற்கு உண்டு.

உபயோகம்:—மேகரோகம் (20), குஷ்டம், சருமரோகங்கள், முதலிய மஹாகொடியரோகங்களுக்கு இதைக்கொடுக்கத்தவராமல் குணத்தைக் காட்டும்.

அளவு:—10 முதல் 30 துளிவீதம் ஜலம், அல்லது வேறுஅனுபானத்தில்கொடுக்கவும். மற்றப்பாஷாண இனத்தை கொடுப்பதுப்போலவே இதையும் சாக்கிரதையாய் கொடுக்கவேண்டியது.

## விளாவின ஹைட்ரோஸையானிக் ஆஸிட்(50 பங்கு ஜலஞ்சேர்த்து விளாவினது.)

Dilnted Hydrocyanic Acid–டைலுடேட் ஹைட்ரோஸையானிக் ஆஸிட்

செய்கை:—வேதநா சாந்தகாரி, சமனகாரி.

உபயோகம்:—இது மெத்த விஷமுள்ள திராவகம். இதை வெகு ஜாக்கிறதையாய் கொடுத்தால் நீடித்த இருமல், நரம்புவலி, இருதய ரோகம், குலையெரிவு, இவைகள் குணமாவதற்கு சந்தேகமில்லை. இதை ஜலத்தில் கலந்து நமைச்சலுக்குத் தடவலாம். இதை விஷமிக்கும்படிச் சாப்பிட்டால் வலி, கஷ்டசுவாசம், பிரக்ஞை யில்லாமை; முதலியவைகள் கண்டு உடனே பிராணம் போய்விடும். அதிகமாய்ச் சாப்பிட்டால் 2—3 பெருமூச்சு உள்ளுக்கு வாங்கிக்கொண்டே பிராணம் போய்விடும். ஆகையால் இதை கொடுக்கும்போது வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டியது.

அளவு:—2 முதல் 5 துளி ஒரு அவுன்ஸ் ஜலத்தில் கலந்து சர்க்கரைச்சேர்த்துக் கொடுக்கலாம். இதை ஒரு தடவைக்கு தான் ஆகும்படி செய்துக்கொடுக்க வேண்டியது. பலதடவைக்கு ஆகும்படி செய்து கொடுத்தால் திராவகம் ஜலத்தின்மேல் மிதந்துவிடும். அதை ஒரே வேளையில் தெரியாமல் எடுத்துக் கொண்டால் விஷமிக்கும்.

## லைகர் குவைனு எமார்பஸ்.

Liquor Quina Amorphous—லைகர் குவைனு எமார்பஸ்.

உபயோகம்:—இந்த திராவகத்தில் 8 துளிக்கு அதிகமாய்க் கொடுக்கலாம். 8 துளியில் ஒரு கிறேன் குவைனு இருக்கிறது. குவைனுக் கொடுக்கும் ரோகங்களுக்கு இதைக்கொடுக்கலாம். குழந்தைகள் இனிப்பாய்ச் சாப்பிடும் பொருட்டு இதை யுண்டாக்கப்பட்டது. குழந்தைகளுக்கு இது நல்ல மருந்து.

## கடலைப் புளிப்பு.

(Vinegar of the Bengal horse gram.)

உபயோகம்:— கடலைச் செடியின் மேலில் விழும் பனியை துணியைப் போட்டுச் சேகரித்துப் பிழிந்து எடுக்கப்படும். இதை உள்ளுக்குச் சாப்பிட்டால் அனலைத்தணிக்கும். அதிகமானால் பேதி நேரிடும்.

## அஸிடிக் ஆஸிட் (காடி)

Acetic Acid—அஸிடிக் ஆஸிட்.

குணம் :—இது வெள்ளையாயும், வாசனையாயும், கசப்பாயும் காரமாயும் இருக்கும்.

செய்கை :—உபயோகம் :— எச்சித்தழும்புக்கு மேலுக்குப் போட்டால் உடனே தீரும். இதைதேகத்தின் மேல்போட்டால் புண்ணாகும். க்ஷயரோகத்தில் காணும் வியர்வையை தணிக்க உள்ளுக்கு ஜலம், அல்லது வெறு அனுபானத்தில் சேர்த்துக் கொடுக்கலாம். ஆண்குறியில் உண்டாகும் மருலுக்கும், காய்ப்புக்கும் போட குணமாகும். 17 அவுன்ஸ் வெந்நீரில் 23 கிராம் அஸிடிக் ஆஸிட் என்னும் காடியை ச்சேர்த்து வைத்துக் கொண்டு உபயோகிக்கவும்.

---

## 20-வது அத்தியாயம்.

---

## கலவை பாவனத்திரவங்கள்.

Compound Tinctures—கம்பவுண்ட டிங்சர்ஸ்.

---

### சாம்பிராணி கலவை பாவனத்திரவம்.

Compound Tincture of Benzoin—கம்பவுன்ட டிங்சர் ஆப் பென்ஜாயின்.

செய் முறை :—சாம்பிராணி $3\frac{1}{2}$ அவுன்ஸ்; ஸ்டொராக்ஸ $2\frac{1}{2}$ அவுன்ஸ்; பால்ஸம் ஆப் டொலு 10 கிராம்; மூசாம்பரம் 5 கிராம்; இவைகளைப் பொடித்து 2 பையின்ட ரெக்டிபைட் ஸிபிரிட் சாராயத்தில் போட்டு 7 நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவும்.

செய்கை :—கபஹரகாரி.

உபயோகம் :—இதை ரணம், காயம், வெட்டு, இவைகளுக்கு தடவிவர குணமாகும். இருமல், கபம் முதலியவைகளுக்கு இதைக் கொடுக்க வெகு நன்மை செய்யும்.

அளவு :—$\frac{1}{2}$ (ஐ) முதல் 2 கிராம், விளாம்பிசின் சேர்ந்த ஜலம், சர்க்கரைப்பாகு இவைகளில் சேர்த்து ஜலத்தில் கலந்துக்கொடுக்க வேண்டியது.

## கர்ப்பூர கலவை பாவனதிரவம்

Compound Tincture of camphor—கம்பவுண்ட டிங்சர் ஆப் காம்பர்.

செய் முறை :—கர்ப்பூரம் 50 கிரேன்ஸ், அபினி தூள் 72 கிரேன்ஸ், சாம்பிராணிப் பதங்கம் 72 கிரேன்ஸ், சோம்புத்தயிலம் 90 துளி இவைகளை எல்லாம் 2 பைண்ட புருவ் ஸ்பிரிட் சாராயத்தில் போட்டு 7 நாள் ஊறவைத்து வடிகட்டிக் கொள்ளவும். ½ (ஐ) அவுன்ஸ் திரவத்தில் சுமார் 1 கிரேன் அபினி இருக்கிறது.

செய்கை :—கபஹர காரி, நித்திரா காரி.

உபயோகம் :—இருமலைத் தணிக்க இது சஞ்சிவி. அதிசாரத்துக்கு இதைக்கொடுக்க வெகு குணத்தைத் தரும்.

அளவு—½ (ஐ) முதல் 4 திராம் ஜலத்தில் கொடுக்கலாம்.

## ரேவல் சின்னிக் கலவை பாவனத் திரவம்.

Compound Tincture of Rhubarb—கம்புவுண்ட டிங்சர் ஆப் ருபார்ப்.

செய் முறை :—ரேவல் சின்னித்தூள் 2½ அவுன்ஸ், அதிமதுரத்தூள் 6 திராம், சுக்குத்தூள் 3 திராம், குங்குமப்பூ 3 திராம்இவைகளை 2 பைண்ட புருவ் ஸ்பிரிட் சாராயத்தில் போட்டு 7 நாள் ஊறவைத்து வடிகட்டிக் கொள்ளவும்.

செய்கை .—தீபனகாரி, மலகாரி.

உபயோகம்:—இதை பசியில்லாமைக்கும், மலபந்தத்துக்கும் கொடுக்க வெகு நன்மை செய்யும்.

அளவு:— ஒரு திராம் பசியை உண்டாக்கவும், 4 முதல் 8 திராம் பேதியாக்கவும் கொடுக்கலாம்.

## நில ஆவாரை கலவை பாவனத் திரவம்.

Compound Tincture of senna—கம்பவுண்ட டிங்சர் ஆப் சின்ன.

செய் முறை :—நில ஆவரை 3½ அவுன்ஸ்; கேக்விதை 3½ திராம்; ஏலம் 1 திராம்; விதை நீக்கின திராக்ஷபழம் 5 அவுன்ஸ் இவைகளை 2 பையிண்ட புருவ் ஸ்பிரிட் சாராயத்தில் போட்டு 7 நாள் ஊறவைத்து வடிக் கட்டிக் கொள்ளவும்.

செய்கை—உபயோகம் :—நில ஆவரைக் கொடுக்கப்படும் ரோகங்களுக்கு இதைக்கொடுக்க வெகு குணத்தை உண்டாக்கும்.

அளவு:—2 முதல் 4 கிராம், ஜலத்தில் கொடுக்கலாம்.

## 21-வது அத்தியாயம்.

### கலவை பூசதைலங்கள்.

Compound Liniment—கம்பவுண்ட் லினிமென்ட்

சில கலவை பூசத்தயிலங்கள் செய்யும் விதிகளும், உபயோகங்களும் அடியில் காண்க.

| லினிமெட்களின் பெயர்கள். | செய்முறை. | குணமாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|
| கலவை கர்ப்பூர பூசத்தைலம். (Compound Liniment of camphor கம்ப்வுண்ட் லினிமெண்ட் ஆப் காம்பர்.) | கர்ப்பூரம் 2½ அவுன்ஸ், லெண்டர்த்தயிலம் 1 டிராம், ரெக்டிபையிட்ஸ்பிரிட் சாராயம் 17 அவுன்ஸ் இவைகளை எல்லாம் சேர்த்து கரைத்துக்கொண்டு, காரமான லைகர்அம்மோனியா 3 அவுன்ஸ் விட்டு குலிக்கிக்கொள்ளவும். | இதை நோயுள்ள இடத்தில் போட்டு தேய்த்தால் நோய் குணமாகும். |
| கலவை ரசப்பூசத்தயிலம். (Compound Liniment of mercury. கம்பவுண்ட் லினிமெண்ட் ஆப் மெர்குரி) | ஒரு அவுன்ஸ் கர்ப்பூரமும், 1 டிராம் ரெக்டிபையிட் ஸ்பிரிட் சாராயமும் சேர்த்து அரைத்து பிறகு 4 அவுன்ஸ் பன்றிநெய்யும், 4 அவுன்ஸ் இளகிய ரசக்களிம்பும் சேர்த்து அரைத்துக்கொண்டிருக்கும்போதே 4 அவுன்ஸ் நவக்ஷாரஜெய நீரை கொஞ்சங்கொஞ்சமாய் விட்டு எல்லாவற்றையும் மிஸ்ரித்துகொள்ளவும். | எலும்பு தடிப்பு, மேகத்தில் எடுத்த நோவு, வீக்கம், நீர்கோண்டிருப்பது இவைகளின்பேரில் போட்டு தேய்த்தால் குணமாகும். |
| சவுக்கார பூசத்தயிலம். (Soap Liniment. ஸோப் லினிமெட்) | 2 அவுன்ஸ் நீரை, 18 அவுன்ஸ் ஸ்பிரிட் ஆப் ரோஸ் மெரி இவ்விரண்டும் சேர்த்து, பிறகு 2 அவுன்ஸ் கட்டி சவுக்காரமும், 10 டிராம் கர்ப்பூரமும்சேர்த்து அடிக்கடி குலுக்கி கணாகிறவரையில் ஊறவைக்கவும். | வாதநோய்களின்பேரில் தடவி தேய்த்தால் குணமாகும். |

# 22-வது அத்தியாயம்.

## வைன்பாவனத்திரவங்கள்.

குழந்தைகளுக்கும் நாஜூக ஸ்திரிகளுக்கும் உபயோகமாகிய வைன்பாவனத்திரவங்களின் உபயோகம், செய்முறை, அளவு முதலியவைகள் சொல்லப்படும்.

| வைன் பாவனத்திரவங்கள் செய்யும் பதார்த்தங்களின் பெயர்கள். | பதார்த்தங்களின் அளவு. | வைன் சாராயத்தின் அளவு. | செய்முறை. | வைன்பாவனத் திரவம் ஒரு தடவைக்குக் கொடுக்கும் அளவு. | இந்த மருந்துகளால் நிவர்த்தியாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|---|---|
| | அவுன்ஸ. | பயிண்ட். | | துளிகள். | |
| கால்சிக்கம் (Colchicum.) | 8 | 2 | பதார்த்தங்களை நொறுக்கி வைன் சாராயத்தில் 7 நாள் ஊறவைத்து வடிகட்டிக் கொள்ளவும். | 15—20 | சூலைக்கட்டு, கணுவாதம் தீரும். |
| இபிகாகியு ஏனு (Ipecacu-anha.) | 2½ | 2 | | 15—45 | சபத்தை வெளியாக்கும் வியர்வை உண்டாக்கும். |

இவ்விதமாக பதார்த்தங்களின் வைன் பாவனதிரவங்கள் வேண்டியபோது செய்து கொள்ளலாம்.

# 23-வது அத்தியாயம்.

## எஸ்ஸென்ஸ்கள்—Essences.

எஸ்ஸென்ஸ்கள் செய்யும் விதங்கள், உபயோகங்கள், அளவுகள் முதலியவைகளை சொல்லப்படும்.

| எஸ்ஸென்ஸ்கள் செய்யும் பதார்த்தங்களின் பெயர்கள். | பதார்த்தங்களின் தயிலம். | ரெக்டிபயிட் ஸ்பிரிட் சாராயம். | செய்முறை. | எஸ்ஸென்ஸ் ஒருதடவைக்குக்கொடுக்கும் அளவு. | எஸ்ஸென்ஸ்களால் நிவர்த்தியாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|---|---|
| | அளவு. | | | | |
| | அவுன்ஸ். | அவுன்ஸ். | | துளி. | |
| பெப்பர்மெண்ட் (Pepper-ment.) | 1 | 9 | பதார்த்தங்களின் தயிலத்தை ரெக்டிபயிட் ஸ்பிரிட் சாராயத்திலே சேர்த்துக் குலுக்கிக் கொள்ளவும். | 20—90 | உஷ்ணம் செய்யும், வாயு தீரும். |
| கெக்விதை (Carraway.) | 1 | 9 | | 20—60 | ஷை ஷை |
| சோம்பு (Anise.) | 1 | 9 | | 30—40 | வாயு தீரும். |
| சதகுப்பை (Dill.) | 1 | 9 | | 20—40 | ஷை |

☞ இவ்விதமாக பதார்த்தங்களின் எஸ்ஸென்ஸ்கள் வேண்டியபோது செய்துக்கொள்ளலாம்.

## 24-வது அத்தியாயம்.

### தயிலங்கள்.

### Oils—ஆயில்ஸ்.

பதார்த்தங்களிலிருந்து தயிலங்கள் எடுக்கப்படும் விதிகள், உபயோகங்கள், முதலியவைகளைச் சொல்லப்படும்.

| தயிலங்கள் எடுக்கப்படும் பதார்த்தங்களின் பெயர்கள். | தயிலங்கள் எடுக்கப்படும் விதிகள். | தயிலம் சர்க்கரையில் தோய்த்து உள்ளுக்குக் கொடுக்கும் அளவு. துளி. | தயிலங்களால் நிவர்த்தியாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|
| பெப்பர்மெண்ட் (Pepperment) | பூண்டை ஜலத்தில் போட்டு வாலையிலிட்டு தயிலம் இறக்கப்படும். | 2— 4 | வாதசூலை, குலைஎரிவுத்தீரும். |
| வாதுமை ... (Almond) | பருப்பை செக்கிலிட்டு எடுக்கப்படும். | 0 | மேல்பூச தயிலத்தோடு சேர்க்கப்படும். |
| சருவாப்பட்டை (Cinnamon) | உப்புஜலத்தில் ஊறவைத்து வாலையிலிட்டு எடுக்கப்படும். | 1— 3 | வாயுத்தீரும். |
| கிராம்பு ... ... (Clove) | வாலையிலிட்டு எடுக்கப்படும். | 2— 5 | வாயுத்தீரும். |
| டர்பென்டயின் (Turpentine) | டர்பென்டயினை வாலையிலிட்டு எடுக்கப்படும். | 0 | வாத நோய்க்கு பூசலாம். |
| கொபெய்பா ... (Copaiba) | மரத்திலிருந்து சேகரிக்கப்படும். | 10—30 | வெள்ளை விழுதல் தீரும். |
| நேர்வாளம் ... (Croton) | பருப்பை செக்கிலிட்டு எடுக்கப்படும். | 1— 2 | பேதியாகும். |
| லின்ஸிட் ... (Linseed) | செக்கிலிட்டு எடுக்கப்படும். | | தீப் புண்ணுக்குத் தடவிக்கத் தீரும். |
| சாதிக்காய் ... (Nutmegs) | இதின் தூளை ஜலத்தில் போட்டு வாலையிலிட்டு எடுக்கப்படும். | 1— 3 | உச்சாகப்படுத்தும். |

| | | | |
|---|---|---|---|
| அருதா ... (Rue) | பூவும் காயும் ஜலத்திலிட்டு பட்டிக்கட்டி இறக்கப்படும். | 2— 5 | வலி, சூதகக்கட்டுத்தீரும். |
| ஸெவைன் ... (Savin) | தளிர்களை ஜலத்திலிட்டு வாலையிலிட்டு எடுக்கப்படும். | 2— 5 | மூத்திரத்தை விருத்திக்கும், சூதகத்தை தாராளப்படுத்தும். |
| கிச்சிலிப்பூ ... (Orange Flowers. | பூவை வாலையிலிட்டு எடுக்கப்படும். | 1— 5 | வாதம், வலி (5) தீரும். |
| செக்விதை ... (Carraway) | விதையை வாலையிலிட்டு எடுக்கப்படும். | 1—10 | வாயு, மந்தம் தீரும். |
| சோம்பு ... ... (Anise) | டை டை | 5—15 | வாயு, வயிற்றுவலி தீரும். |
| பெருஞ்சீரகம் (Fennel) | டை டை | 1—10 | டை டை |
| சதகுப்பை ... (Dill) | டை டை | 1— 5 | டை டை |

☞ இவ்விதமாய் பதார்த்தங்களின் தயிலங்கள் வேண்டியபோது எடுத்துக்கொள்ளலாம்.

## 25-வது அத்தியாயம்.

## பாவனத்திரவங்கள்.

Tinctures—டிங்சர்ஸ்.

### இரும்பு பாவனத்திரவம்.

Tincture of Iron—டிங்சர் ஆப் ஐரன்.

**செய்முறை :—** இங்கிலீஷ் புஸ்தகத்தில் பார்வையிடவும்.

**குணம்:—** இது புளிப்பும், துவர்ப்பும் உள்ளது. சிவப்பும் மஞ்சளும் கலந்த நிறமுள்ளது. துவர்ப்பு கந்த வகைகளை சேர்த்தால் கருத்துப்போகும்.

**செய்கை :—** பலகாரி, மூத்திரவர்த்தனகாரி, சங்கோசனகாரி, விரணகாரி.

உபயோகம் :— இதை ரணத்தின்மேலும், அட்டைக்கடியின் மேலும் தடவ ரத்தம் நிற்கும். நீர்க்கட்டுக்கு இதை கொஞ்சமாக அடிக்கடிக்கொடுக்க சகுணத்தைத்தரும். சொட்டுமூத்திரம், மதுமூத்திரம் இவைகளும், கருப்பை, மூத்திரப்பை, மூத்திரக்குண்டிகாய் முதலியவைகளிலிருந்து வடிகிற ரத்தத்திற்குங் கொடுக்க இது சிரேஷ்டமான ஔஷதம். அக்கிக்கு மேலே போடலாம்.

அளவு :— 10 முதல் 30 துளி கொடுக்கலாம்.

---

சிலபதார்த்தங்களின் டிங்சர்கள் அதாவது பாவனத்திரவங்கள் செய்யும் விதங்கள், அளவுகள் முதலியவைகளை சொல்லப்படும்.

☞ ரோஜனம் (Resin) இனத்தைச்சேர்ந்த பதார்த்தங்கள் ஜலத்தில் கரையாது, சாராயத்தில் கரையும். பிசின் (Gum) இனத்தைச்சேர்ந்த பதார்த்தங்கள் சாராயத்தில் கரையாது, ஜலத்தில் கரையும். ஆகையால் ரோஜனம் அதிகமாயிருக்கிறபதார்த்தங்களை இரட்டித்து வடித்த (Rectified spirit) சாராயத்திலும்; ரோஜனம் கொஞ்சமாயிருக்கிற பதார்த்தங்களை புரூப் ஸ்பிரிட் (Proof spirit) சாராயத்திலும் நொறுக்கிப் போட்டு ஏழு நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது. பதார்த்தத்தின் செய்கைகளே டிங்சர்க்கு உண்டு.

| டிங்சர்கள் செய்யும் பதார்த்தங்களின் பெயர்கள். | பதார்த்தங்களின் அளவுகள். | | மேற்சொல்லிய சாராயங்களின் அளவுகள். | டிங்சர்கள் ஒரு தடவைக்குச் சாப்பிடவேண்டிய அளவு. | | டிங்சர்களால் குணமாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|---|---|---|
| | அவுன்ஸ். | திராம். | பயின்ட். | திராம். | துளி. | |
| அகோனைட் ... (Aconite) | 15 | 0 | 2 | 0 | 5—7 | பதார்த்தத்தின் செய்கைகள் இதற்கு உண்டு. |
| பெருங்காயம் ... (Assafoetida) | 5 | 0 | 2 | 1—2 | 0 | ஷை குதஜன்னி குணமாகும். |
| கலம்பா ... ... (Calumba) | 3 | 0 | 2 | 1—2 | 0 | பதார்த்தத்தின் செய்கைகளே இதற்கு உண்டு. |
| எரிவண்டு ... ... (Cantharides) | ½ | 0 | 2 | 0 | 10—60 | ஷை ஷை |
| காஸ்டொரியம் ... (Castoreum) | 2½ | 0 | 2 | 1—2 | 0 | ஷை ஷை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சிரெட்டா ... (Chiretta) | 5 | 0 | 2 | 1—3 | 0 | ஷை ஷை |
| சின்கொனு ... (Cinchona) | 8 | 0 | 2 | 1—3 | 0 | ஷை ஷை |
| டிஜிடெலிஸ் ... (Digitalis) | 4 | 0 | 2 | 0 | 10–40 | ஷை ஷை |
| கடுகுரோகணி ... (Hellabore) | 5 | 0 | 2 | 0 | [illegible] | ஷை ஷை |
| குரோசாணி ஓமம் (Hyoscyamus) | 5 | 0 | 2 | $\frac{1}{2}$—2 | 0 | ஷை ஷை |
| ஐயோடைன் ... (Iodine caustic) | 0 | $\frac{5}{6}$ | $\frac{1}{20}$ | 0 | 0 | உள்ளுக்குச்சாப்பிடக்கூடாது. மேலுக்குத்தடவ வீக்கம்கரையும். |
| ஐயோடைட் ஆப் பொடாஸியம் ... (Iodide of Potassium) | 0 | 1 | | | | |
| ஜாலப் ... ... (Jalap) | 5 | 0 | 2 | 1—2 | 0 | பதார்த்தத்தின் செய்கைகளே இதற்கு உண்டு. |
| வாளெந்திர போளம் ... ... (Myrrh) | 3 | [illegible] | 2 | $\frac{1}{2}$—1 | 0 | ஷை ஷை |
| குவாஷியா .. (Quassia) | 0 | 10 | 2 | $\frac{1}{2}$—2 | 0 | ஷை ஷை |
| அபினி ... .. (Opium) | 3 | 0 | 2 | 0 | 15–45 | ஷை. எண்ணெயும் இதுவும்சமமாகசேர்த்துக்காதிலிட காதுவலிதீரும். |
| நரிவெங்காயம் (Squill) | 5 | 0 | 2 | 0 | 10–30 | கபம்நீங்கும், மூத்திரம் விருத்திக்கும். |

☞ இவ்விதமாகவே பதார்த்தங்களின் டிங்சர்கள் வேண்டியபோது செய்துக்கொள்ளலாம்.

# 26-வது அத்தியாயம்.

## ஸ்பிரிட்ஸ்கள்—Spirits.

சிலபதார்த்தங்களின் ஸ்பிரிட்ஸ்கள் செய்யும் விதிகளும், நிவர்த்தியாக்கும் ரோகங்களும், கொடுக்கும் அளவுகளும் அடியில் காண்க.

| ஸ்பிரிட்ஸ்கள் செய்யும் பதார்த்தங்களின் பெயர்கள். | பதார்த்தங்களின் தயிலங்கள். அளவு. கிராம். | புருவ் ஸ்பிரிட் சாராயம். அளவு. பயிண்ட்ஸ். | செய்முறை | ஸ்பிரிட் மருந்தை ஒரு தடவைக்குக் கொடுக்கும் அளவு. கிராம். | ஸ்பிரிட் மருந்துகளால் நிவர்த்தியாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|---|---|
| கெக்விதை (Carraway) ... ... ... | 2 | 8 | புருவ்ஸ்பிரிட் சாராயத்தில் பதார்த்தங்களின் தயிலத்தைக் சேர்த்துக் குலுக்கிக் கொள்ளவும். | 1—4 | வாயுதீரும், பசியை உண்டாக்கும். |
| சோம்பு (Anise) ... ... ... | 2 | 8 | | ½—1 | டை டை |
| பெப்பர்மெண்ட் (Pepperment) ... ... | 3 | 8 | | ½—2 | டை டை |

☞ இவ்விதமாக பதார்த்தங்களின் ஸ்பிரிட்சள் வேண்டியபோது செய்துக்கொள்ளலாம்.

# 27-வது அத்தியாயம்.

## தீநீர்கள்.

Waters—வாட்டர்ஸ்.

சிலபதார்த்தங்களின் தீநீர்கள் செய்யும் விதிகளும், நிவர்த்தியாகும் ரோகங்களும் கொடுக்கும் அளவுகளும், அடியில்காண்க.

| வாட்டர்ஸ்கள் அல்லது தீநீர்கள் செய்யும் பதார்த்தங்களின் பெயர்கள். | தீநீர்கள் செய்வதற்கு பதார்த்தங்களின் எஸ்ஸென்ஸ். அளவு. | ஆவிநீர். அளவு. | செய்முறை. | தீநீரை உட்கொள்ளக்கொடுக்கும் அளவு. | தீநீர்களால் நிவர்த்தியாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|---|---|
| | அவுன்ஸ். | பயின்ட். | | அவுன்ஸ். | |
| சோம்பு (Anise) ... ... | 1 | 4 | ஆவி நீருடன் பதார்த்தத்தின் எஸ்ஸென்ஸை சேர்த்து குலுக்கி விடவேண்டியது | ½—2 | வாய, அதிசாரம் தீரும். |
| செக்விதை (Carraway) ... | 1 | 4 | | 1—4 | வாயு, மந்தம் தீரும். |
| சதகுப்பை (Dill) ... .. | 1 | 4 | | ½—3 | மாந்தம் தீரும். |
| பேப்பர்மெண்ட் (Pepperment) | 1 | 4 | | 1—2 | வாதசூலை, குலைஎரிவு தீரும். |
| கர்ப்பூரம் (Camphor) ... ... | கர்ப்பூரம அவுன்ஸ் ¼ | 4 | கர்ப்பூரத்துடன் 40 துளி சாராயத்தை விட்டு அரைத்து ஆவிநீரை சேர்த்து வடிகட்டிக்கொள்ளவும். | 2—3 | மருந்துகளோடு சேர்த்துக் கொடுக்கப்படும். |

☞ இவவிதமாக பதார்த்தங்களின் தீநீர்கள் வேண்டியபோது செய்துகொள்ளலாம்.

# ௨௮-வது அத்தியாயம்.

சாராயங்களில் பலவிதங்களுண்டு. அவைகளின் பெயர்கள், குணங்கள் முதலியவைகளை அடியில்சொல்லப்படும்.

## ஆல்கோஹல்—Alcohol.

இந்த சாராயம் சுத்தமாயும், வெள்ளையாயும், வாசனையாயும், காரமாயும் ஜலரூபமாயும் இருக்கும்.

## ரெக்டிபையிட் ஸ்பிரிட்—Rectified Spirit.

இந்த சாராயத்தில் ஆல்கோஹல் 84 பங்கும், ஜலம் 16 பங்கும் இருக்கின்றது. இதினால் தடித்த ரோஜன (குங்கிலியம்-Resin) பதார்த்தங்களை டிங்சர் செய்யப்படும்.

## புரூவ் ஸ்பிரிட்—Proof Spirit.

இந்த சாராயத்தில் ஆல்கோஹல் 48 பங்கும், ஜலம் 52 பங்கும் இருக்கின்றது. இதினால் ரோஜனம் (குங்குலியம்-Resin) கொஞ்சமாய் இருக்கும் பதார்த்தங்களை டிங்சர் செய்யப்படும்.

## பிராந்தி சாராயங்களின் விபரம். (Brandy)

| சாராயங்களின் பெயர்கள். | 100 பங்கு சாராயத்தில் | | சாராயங்களின் செய்கைகள் |
|---|---|---|---|
| | ஆல்கோஹல் | ஜலம் | |
| ரம் சாராயம்-(Rum) | 51 முதல் 54 பங்கு | 46 முதல் 49 பங்கு | உஷ்ணம், வியர்வை உண்டாக்கும். |
| உஸ்கி சாராயம்-(Whiskey) | | | மூத்திரத்தை விருத்திக்கும். |
| ஜின் சாராயம்-(Gin) | | | |
| சுதேச பிராந்தி-(Country Brandy) | | | |

சாராயங்கள் எல்லாம் முதலில் உற்சாகப்படுத்தி பிறகு சோர்வு காணும். கொஞ்சமாய் சாப்பிட்டால் தேகத்துக்கு சவுக்கியம். ஆனால் தொடாமலிருப்பது உத்தமம். பிராந்திக்கு நாடியைத்தீவிரப்படுத்துகிற குணமும், தீபனத்தை உண்டாக்கிற குணமும் உண்டு. மூர்ச்சை, சுவாசமில்லாமல் பிணம்போல் இருக்குதல் இவைகளுக்கு இருதயஸ்தானத்தில் பிராந்தியை போட்டுத்தேய்த்தால் குணமாகும். துர்பலருக்கு இதைக்கொடுக்கலாம்.

## ஒயின் சாராயங்களின் விபரம் (Wine.)

| ஒயின் சாராயங்களின் பெயர்கள் | அல்கோஹால் அளவு. | சாராயங்களின் செய்கைகள். |
|---|---|---|
| போர்ட்வைன் (Port Wine)<br>மெடியரா வைன்-(Madiara Wine)<br>ஷெரிவைன்-Sherry Wine | இம்மூன்றிலே அல்கொஹால் அதிகமாயிருக்கும். | பிராந்தியைப் பார்க்கிலும் வைன் சாராயத்துக்குக்கயப்பு குறைச்சல். வைன் கொடுக்க நாடியைத் தீவிரப்படுத்தி பலத்தைஉண்டாக்கும். தேசத்தை போஷிக்காது. ரோகங்களுக்குக் கொடுக்கப்படும். |
| கிலெரெட் வைன்-(Claret Wine)<br>க்ஷாம் பென்வைன்-(Champagne Wine) | இவ்விரண்டில் அல்கொஹால் கொஞ்சமாயிருக்கும். | |

---

### 29-வது அத்தியாயம்.

---

## களிம்புகள்.

ஆயின்ட்மெண்ட்—Ointment.

---

### கிரியசொட் ஆயின்ட்மெண்ட்.

Creasote Ointment—கிரியசோட் ஆயின்ட்மெண்ட்.

**செய்முறை:**— ½ (௨) திராம் கிரியஸொட், 1 அவுன்ஸ் பன்றி நெய் இவைகளை சேர்த்து அரைத்துக் கொள்ளவும்.

**உபயோகம்:**—ரணம், சருமரோகம் இவைகளுக்குத்தடவகுணமாகும்.

### ஐயோடைட் ஆப் லெட் ஆயின்ட்மெண்ட்.

Iodide of Lead Ointment—ஐயோடைட் ஆப் லேட் ஆயின்ட்மெண்ட்.

**செய்முறை:**— 1 அவுன்ஸ் ஐயோடைட் ஆப் லெட், 8 அவுன்ஸ் பன்றிநெய் இவைகளைச்சேர்த்து மஸ்ரித்துக்கொள்ளவும்.

**உபயோகம்:**—கட்டி, மூட்டு வீக்கம் இவைகளுக்கு தடவிவர தீரும்.

## ஐயோடைட் மெர்க்கியூரி ஆய்ன்ட்மெண்ட்.

Iodide of Mercury Ointment-ஐயோடைட் மெர்க்கியுரி ஆய்ன்ட்மேன்ட்.

செய்முறை :— 2 அவுன்ஸ் வெள்ளைமெழுகு, 6 அவுன்ஸ் பன்றிநெய் இவைகளைசேர்த்து உருக்கி அத்துடன் ஐயோடைட் ஆப் மெர்க்கியுரி 1 அவுன்ஸ் சேர்த்து மிஸ்ரித்துக்கொள்ளவும்.

உபயோகம் :— மேகரணங்களுக்கு துணியின்மேல் தடவிப்போட குணமாகும்.

## ஐயோடின் ஆய்ன்ட்மெண்ட்.

Iodine Ointment—ஐயோடின் ஆய்ன்ட்மேண்ட்.

செய்முறை :— ½ (ஒ) திராம் ஐயோடின், 1 திராம் ஐயோடைட் ஆப் பொடாஸியம், இவைகளுடன் 1 திராம் ரெக்டிபைட் ஸ்பிரிட் சாராயத்தைச் சேர்த்து அரைத்து, பிறகு 2 அவுன்ஸ் பன்றிநெய்யைச் சேர்த்து மிஸ்ரித்துக்கொள்ளவும்.

உபயோகம் :— இதை புரைக்குழல், கண்டமாலை இனத்தைச்சேர்ந்த கட்டிகள் இவைகளின்மேல் தடவிவர குணமாகும்.

## ஸெவைன் ஆய்ன்ட்மெண்ட்.

Savine Ointment—ஸெவைன் ஆய்ன்ட்மேண்ட்.

செய்முறை :— 12 அவுன்ஸ் பன்றிநெய்யுடன் 3 அவுன்ஸ் வெள்ளை மெழுகைச்சேர்த்து உருக்கி அதில் 6 அவுன்ஸ் ஸெவைன் இலை தூளைச்சேர்த்து நார்துணியில் வடிகட்டிக்கொள்ளவும்.

உபயோகம் :— பிளிஸ்டர் செய்த ரணத்தின்மேல் இதை துணியில் தடவிப்போட ரணம் ஆராது.

## இளகிய ரசக்களிம்பு.

Blue Ointment—பிளூ ஆய்ன்ட்மேன்ட்.

செய்முறை :— ரசம் 12 அவுன்ஸ், பன்றிநெய் 11½ அவுன்ஸ், ஆட்டுக்கொழுப்பு ½ (அ) அவுன்ஸ் இவைகளில் ரசத்தை கல்வத்திலிட்டு அத்துடன் ஆட்டுக்கொழுப்பும் கொஞ்சம் பன்றிநெய்யும் சேர்த்து ரசத்தின் அணுக்கள் கண்களுக்குப்படாமல் போகிறவரையில் அரைத்து பிறகு மீதியிருக்கிற பன்றிநெய்யையும் சேர்த்து மிஸ்ரித்துக்கொள்ளவும்.

உபயோகம் :— இதை மேகரணம், மேகக்கட்டிகள் இவைகளுக்குத் தடவிவர குணமாகும்.

## கந்தக கலவைக்களிம்பு.

செய்முறை:—கந்தகம் 2 அவுன்ஸ், வெடியுப்பு 20 கிறேன்ஸ், ஒயிட் அலிபோர் (White Hellebore) 5 திராம், இளகிய சவுக்காரம் 2 அவுன்ஸ், பன்றி நெய் 6 அவுன்ஸ் இவைகளை மிஸ்ரித்து கொள்ளவும்.

செய்கை—உபயோகம்:—உஷ்ணகாரி — ஆறாத சிரங்குகளுக்கும் எச்சிற்றழும்புக்கும் போட குணமாகும்.

## 30-வது அத்தியாயம்.

### சத்துகள்.

Extract—எக்ஸ்டிராக்ட்.

சிலபதார்த்தங்களின் சத்துகள் எடுக்கும் விதிகளும், உபயோகங்களும் அடியில் காண்க.

| சத்து எடுக்கும் பதார்த்தங்களின் பெயர்கள். | சத்து எடுக்கும் விதங்கள். | ஒருதடவைக் கொடுக்கக்கூடிய அளவு. | இந்த மருந்தால் நிவர்த்தியாகும் ரோகங்களின் பெயர்கள். |
|---|---|---|---|
| | | கிறேன். | |
| ஆகோனேட் ... (Aconite) | இலையின் சாற்றை வடிகட்டாமல் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவும். | 1—2 | கீல்வாதம், இருதயரோகம். |
| கால்சிகம் ... (Colchicum) | ஒருபவுண்ட் பச்சைகிழங்கை நொறுக்கி ஒரு அவுன்ஸ் அஸிடிக் ஆசிட் கொஞ்சங்கொஞ்சமாகசேர்த்து எடுத்தசாற்றை சுண்டக்காய்ச்சிக் கொள்ளவும். | 1—3 | கீல்வாதம், முடக்குவாதம். |
| பெல்லடோனா (Belledona) | ஆகோனேட் சத்து செய்வதுபோல் செய்துகொள்க. | ½—1 | பெல்லடோனா நிவர்த்தியாக்கும் ரோகங்கள். |
| கும்மட்டிக்காய் (Colocynth) | இதின் சாற்றைசுண்டக்காய்ச்சிக் கொள்ளவும். | 5—20 | விரேசனகாரிகளோடு சேர்த்துக் கொடுக்கப்படும். |
| கோனியம் ... (Conium) | இலையின்சாற்றைச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவும். | 3 | கீல்வாதம், நரம்புவேதனை. |
| ஐயாஸியாமஸ் (Hyoscyamus) | ஷை ஷை | 5—30 | இசுவு, இருமல், வாதநோய். |

☞ இவ்விதமாக பதார்த்தங்களிலிருந்து சத்துக்கள் வேண்டியபோது எடுத்துக்கொள்ளலாம்.

## 31-வது அத்தியாயம்.

ஜீவவர்க்க சம்மந்தமான பதார்த்தங்களும் அவைகளின் குணம், செய்கை, முதலியவைகளும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

### பால்களின் விபரம் (Milk.)

| பால்களின் பெயர்கள். | பால்களின் உபயோகங்கள். |
|---|---|
| வெண்பசும்பால். | பித்தரோகங்கள் (40) தீரும். |
| செம்பசும்பால். | வாதரோகங்கள் (80) தீரும். |
| கறும்பசும்பால். | சிலேஷ்மரோகங்கள் (90) தீரும். |
| கபிலைபசும்பால். | திரிதோஷங்கள் தீரும். |
| கறுப்புமாதர்பால். | நேத்திரரோகங்கள் (மாத்திரம்) தீரும். |
| சிவப்புமாதர்பால். | வாதபித்தசிலேஷ்ம் ரோகங்கள் தீரும். |
| வேசியர்பால். | பற்பலரோகங்கள் உண்டாகும். |
| எருமைபால். | ஷை ஷை |
| செம்மறியாட்டுப்பால். | ஷை ஷை |
| வெள்ளாட்டுப்பால். | ஜாடராக்கினி வர்த்தனகாரி. சுவாசம், காசம், வாதவீக்கம், முதலியவைகள் தீரும். தீபனத்தை உண்டாக்கும். |
| குதிரைப்பால். | தாருட்டியக்காரி. சுக்கிலத்தை விருத்திக்கும், புணர்ச்சியில்வல்லமை உண்டாகும். |
| கழுதைப்பால். | சீழ் பிரமேகம், கரப்பான், சிரங்கு, புண், வாதம் தீரும். |

### காஸ்டோரியம்.

Costoreum—காஸ்டோரியம்.

**குணம்:**—இது பீவர் (Beaver) ஜெந்துவிலிருந்து எடுக்கப்படும். கஸ்தூரியைப்போல ஒத்த ஓர்வித பதார்த்தம்.

**செய்கை:**— அங்காகர்சனநாசகாரி, ருதுவர்த்தனகாரி, லகுஉஷ்ண காரி.

**உபயோகம்:**— நரம்பைப்பற்றி வருகிற வலி (5), சூதகசன்னி முதலியவைகளுக்குக் கொடுக்க இது வெகுத்தகுதியான அவுஷதம்.

**அளவு:**— 10 முதல் 20 கிறேன்ஸ் அனுபானத்தில் கொடுக்கவும்.

## கஸ்தூரி.

Musk—மஸ்க்

**குணம்:**—மானைப்போல் ஒரு ஆண்மிருகத்திலிருந்து கஸ்தூரி எடுக்கப்படும். கஸ்தூரி இருக்கிறப்பை அண்டவட்டிவாயும் முன் புறத்தில் ரோமங்களும் உண்டு. கஸ்தூரி மிருதுவாயும், சிவப்புங் கருப்புங் கலந்த நிறமாயும், வாசனையாயும் இருக்கும்.

**செய்கை**—அங்காகர்சன நாசகாரி, உஷ்ணகாரி.

**உபயோகம்:**—இதை வலி (5), ரணசன்னி, சூதக சன்னி, நாய்க்கடி சன்னி, வாந்திபேதி, சுரம், மாந்தம், முதலிய பற்பல வியாதிகளுக்கு கொடுக்க தவராமல் வியாதிகளை நிவர்த்தியாக்கும்.

**அளவு:**—1 முதல் 5 கிறென்ஸ் அனுபானத்தில்க் கொடுக்கலாம்.

## முட்டை.

Egg—எக்

**குணம்:**—கோழிமுட்டையானது சகலருக்கும் தெரிந்த பதார்த்தம். முட்டையின் ஓட்டுக்குள் வெள்ளைக்கரு, மஞ்சள்க்கரு என 2 வித பதார்த்தங்களுண்டு. வெள்ளைச்கரு ஜலத்தில் கரையும்; மஞ்சள்க்கரு தடித்த எண்ணெய்போல் இருக்கும்.

**செய்கை—உபயோகம்:**—பதார்த்தங்களின் அழுக்கை நீக்கவும், எரிச்சலைத் தணிக்கவும் வெள்ளைக் கருவை உபயோகிக்கப்படும். *மஞ்சள் கருவை டி, பால், எண்ணெய் இவைகளில் எதிலாவது சேர்த்துக்கொடுக்க தேகத்தைபோஷிக்கும். இதை எரித்தால் எண்ணெய் ஜனிக்கும். இதற்கு அண்டத்தயிலம் என்று பெயர். இந்த தையிலத்துடன் குங்குமப்பூ, கோரோசனை சேர்த்து குழந்தைகளின் மாந்தம், வலிப்பு இவைகளுக்குக் கொடுக்க குணமாகும்.

## மீன் எண்ணெய்.

Cod-liver-oil—காட் லிவர் ஆயில்.

**குணம்:**—இந்த எண்ணெயானது கறுப்பும் மஞ்சளுங் கலந்த நிறமாயும், தெளிவாயும், ஒருவித வாசனையாயும், கொஞ்சம் குமட்டலாயும்

இருக்கும். எண்ணெய்ச் சத்துகள் இதில் இருப்பதும் தவிர கொஞ்சம் ஐயோடைன், புரோமின் முதலிய உப்புகள் இருக்கின்றன. இந்த எண்ணெயானது காட் (Cod) என்கிற மீனின் ஈரலிலிருந்து எடுக்கப்படும்.

**செய்கை—உபயோகம்:—** துர்பலம், க்ஷயம், அதிசாரம், கண்டமாலை, அக்கினி மந்தம், சரும ரோகங்கள், மூட்டு நோய், சூலைக்கட்டு, முதலிய பற்பல கொடிய ரோகங்களுக்கு இது சஞ்சீவி. இதை தேகத்தில் ரத்தத்தை விருத்தியாக்கவும் பசியை நன்றாய் உண்டாக்கவும் கொடுக்கப்படும். மேல்கண்ட ரோகங்களில் தேகம் சுட்கித்து மெலிந்து இருக்கிற போது இதைக் கொடுத்தால் நோயாளி ஸ்தூலித்து சவுக்கியம் உண்டாவதற்கு யாதொரு சந்தேகமில்லை. இதை நாள்பட்டச் சாப்பிடவேண்டியது. இதை சரும ரோகத்துக்கும், கீல்களின் வீக்கத்துக்கும் மேலுக்குப் பூசிவர குணமாகும்.

**அளவு:—** 2 முதல் 8 கிராம் பெரியவர்களுக்கும், 1 முதல் 2 கிராம் குழந்தைகளுக்கும் பால், காபி, டீ, ஒயின் முதலியவைகளில் கொடுக்கலாம். குறைந்த அளவில் ஆரம்பித்து படிப்படியாய் அதிகரித்துகொள்ளவும்.

## தேன்.

Honey—ஹனி.

**குணம்:—** தேனிகள் புஷ்பங்களிலிருக்கிற மதுவை உண்டு, தேன் கூட்டில் சேர்த்து வைக்கிற பதார்த்தத்துக்கு தேன் என்று பெயர்.

**செய்கை—உபயோகம்:—** இது தேகத்தை போஷிக்கும், இருமலைத் தணிக்கும், மலத்தை கழிக்கும். இதை வாயைக் கொப்பலிக்கிற ஜலத்துடன் சேர்த்து உபயோகிக்கலாம்.

## எரிவண்டு.

Cantharidis—கேந்தாரிடிஸ்.

**குணம்:—** இந்த வண்டில் பல சாதிகள் உண்டு.

**செய்கை:—** உஷ்ணகாரி, மூத்திரவர்த்தனகாரி, ஸோனகாரி, கொடிய நஞ்சு.

**உபயோகம்:—** இதை கொஞ்சமாகக் கொடுக்க மூத்திரத்தை விருத்திக்கும். நாள்பட்ட வெள்ளை, தந்திமேகம், மூத்திரப்பை ரோகம், நீர்க்கட்டு, எலும்புருக்கி, குஷ்டம், சொறி, சிரங்கு, கக்கு இருமல், முதலிய பற்பல பயங்கரமான வியாதிகளுக்குக் கொடுக்க குணமாகும். இதை அடிக்கடியாவது அதிகமாயாவது உள்ளுக்குச் சாப்பிட்டால் நீர்அடைப்பு

உண்டாக்கிக் கொன்று விடும். நோயுள்ள இடத்தில் இதை போட்டால் கொப்பளித்து உடனே நோய் தணியும். இதற்கு மூத்திர உருப்புகளை கெடுதி செய்கிற குணம் உண்டு.

அசாவு:—இதற்கு பதில் எரிவண்டுப்பாவனத்திரவம் கொடுக்கப்படும்.

## மான்கொம்பு.

Hart's Horn—ஹார்டஸ் ஹார்ன்.

**உபயோகம்:**—இதை அஸ்தி காங்கை, கண்ணோவு, கை கால் எரிவு இவைகளுக்கு பஸ்மமாக்கிக் கொடுக்கலாம்.

## யானை நகம்.

**உபயோகம்:**—இதை கத்தியால் சீவி வேப்பெண்ணெயில் போட்டு காய்ச்சி வடித்த எண்ணெயில் ஒரு விராகனிடை வீதம் தினம் 2 தடவைச் சாப்பிட்டுவர காசம், சுவாசம், இரைப்பு முதலியவைகள் தீரும்.

## அட்டை.

Leech—லீச்.

**குணம்:**—அட்டையில் அநேக சாதிகள் உண்டு.

**செய்கை--உபயோகம்:**—ரத்தம் கட்டிக்கொண்டு இருக்கிற இடத்தில் (தாபன ரோகம்) அட்டையைக் கடிக்கவிட்டால் அவ்விடத்திலிருக்கிற ரத்தத்தை உறிஞ்சி விடும். அக்கி சண்ட இடத்தில் இதைக் கடிக்கவிடக் கூடாது. இது கடித்த இடத்தில் கரித்துணி, அயத்திரவகம், காடிக்காரம், முதலிய துவர்ப்பு மருந்துகளை போட்டு நிறுத்த வேண்டியது. சில்வேளை கடித்த இடத்தைத் தைக்கவேண்டியதாயும் நேரிடும்.

## கொரோசனை.

**உபயோகம்:**—இது பசு அல்லது எருதின் பித்தப்பையிலுள்ள ஒரு விதக் கல்லு. 2—3 புளியங்கொட்டை அளவாக ஒரு பையிலிருக்கும். இதில் கொஞ்சம் எடுத்து வெற்றிலைச் சாற்றிலாவது அல்லது முலைப்பாலிலாவதுக் கொடுக்க குழந்தைகளின் மாந்தம், சுரம், ஐஉப்பு குணமாகும்.

## முசுறு முட்டை.

**உபயோகம்:**—வலி (5), வாதம், இசிவு, ஜன்னி, கர்ணரோகம் இவைகளுக்கு இதை உபயோகிக்கப்படும்.

## மயில் இறகு.

**உபயோகம்:**—இதின் சாம்பலை தேனில் கலந்துக் கொடுக்க வாந்தி, விக்கல் குணமாகும்.

## புனுகு சட்டம்.

உபயோகம்:—வாதம், பித்தம், இவைகள் தீரும்.

## சவ்வாது.

**உபயோகம்:**—சிரஸ்தாபரோகம், வாதம், கபம், ஜல பீனிசம் இவைகளுக்கு இதை உபயோகிக்கப்படும்.

## நீர்ப் பஞ்சு.

Sponge—ஸ்பன்ஜ்

**உபயோகம்:**—இது ஓர் வித பாசி. இதை சிறு துண்டுகளாக்கி மெழுகைக் காய்ச்சி அதில் தோய்த்தாவது, அல்லது நூலால் சுற்றியாவது ரணத்தின் புரை வாயில் வைத்தால் அவாரத்தை பெரிதாக்கும். இதை சுட்டு சூர்ணித்து ½ (ற) முதல் 1 கிராம் வரையில் தேனில் கலந்து கழுத்தில் காணும் புரைக்குழல், கண்டமாலை, இவைகளுக்கு உள்ளுக்கு கொடுக்க குணமாகும்.

---

## 32-வது அத்தியாயம்.

---

ஆயுள்வேதியர்கள் சிகிச்சை செய்ய ஆரம்பிக்கும் முன் இதினடியில் கண்டிருக்கிற சில முக்கியமான விஷயங்களை விசேஷமாய் கவனித்து ஆராய்ந்து சிகிச்சைகள் செய்வார்களாகில் ரோகிகள் நிரோகிகள் ஆவதற்குசந்தேகமில்லை.

1. நஞ்சுள்ள பதார்த்தங்கள் வைத்திருக்கும் ஏனங்களுக்கு நஞ்சு என்று துண்டு கடுதாசிகளில் எழுதிஒட்டி தனிப்பட வைக்கவேண்டியது.

2. மருந்துகளில் சிலது வெளிச்சம் பட்டால் கெட்டுபோகும். அவைகளை நீல நிறமுடைய சீசாவிலாவது, வெள்ளை சீசாவுக்கு நீலக் கடுதாசியை அதைச்சுற்றிலும் வொட்டியாவது போட்டுவைக்க வேண்டியது.

3. சில மருந்துகள் காற்றுப்பட்டால் கெட்டுபோகும். அவைகளை கற்கார்க்கு சீசாவில்போட்டுவைக்கவேண்டியது.

4. ஆயுள் வேதியர்கள் முதலில் அஷ்டவித பரிக்ஷைகளாலும், ரோகம் உண்டான ஆதிகாரணங்களாலும், ரோகம் இன்னதென்று அறிந்துகொண்டு பிறகு ரோகிகளின் வயது முதலிய (12) விஷயங்களை அனுசரித்து அவர்களுக்குத் தகுந்த மருந்துகளை நிதானித்தறிந்து அவை

களின் அளவுகளை புஸ்தகத்தில் கண்டறிந்து நோயாளிகளின் இஷ்டப்படி தகுந்த அனுபானங்களில் கொடுக்க வேண்டியது. தினந்தோரும் மலம், மூத்திரம், பசி இவைகளைக் கிரமப்படுத்தி சிகிக்ஷைகள் செய்ய வேண்டியது.

5. நோயாளிப் படுத்திருக்கும் இடத்தில் தூபங்களைப்போட்டு அவ்விடத்திலுள்ள நாற்றங்களை நீக்கிவிடவேண்டியது. நோயாளியின் மெத்தை முதலானப் படுக்கைகளை தினந்தோரும் உதரி வேறுஇடத்தில் போடவேண்டியது. அன்றியும் நோயாளி தினம் சுத்தமான வஸ்திரங்களைத் தரித்துக்கொள்ளவேண்டியது. சுத்தமானதும், காற்றுள்ளதும், நாற்றமில்லாததும், ஈரமில்லாததுமான இடத்தில் நோயாளியின் படுக்கை போடவேண்டியது. நோயாளி சாப்பிடக் கூடாத பதார்த்தங்களைப் படுக்கைக்த சமீபம் வைக்கலாகாது. அன்றியும் சமீபத்திலிருந்துக் கொண்டு நோயாளிக்கு இஷ்டமில்லாத விஷயங்களை சொல்லுதல், கூச்சலிடுதல், அழுதல் முதலியவைகள் கூடாது.

6 கர்ப்பஸ்திரீகள், பால்கொடுக்கும் ஸ்திரிகள், இவர்களுக்கு மாதாந்திர ருது காணுதல் அரிது. பிரவிடை ஆகாத சிறு பெண்களுக்கு ருதுவர்த்தனகாரிகளைக் கொடுக்கலாகாது. கருப்பை பருபக்குவமானால் ஒழிய சுரோணிதம் வெளிப்படாது. இவைகளைக்கொடுத்தால் மோசங்கள் சம்பவிக்கும். ஒரு மருந்து குணத்தைக் காட்டாவிட்டால் அந்த இனத்தில்சேர்ந்த மற்றொருமருந்து குணத்தைத் தரும். இவை ஒன்றோடொன்று சேர்த்துக்கொடுக்க குணத்தை விசேஷிக்கும். கருப்பையில் காணும் ரணரோகத்துக்கு ருதுவர்த்தனகாரிகள் கொடுக்க கூடாது.

7. கபத்தை விருத்தியாக்கி வெளிப்படுத்த கபஹரகாரிகளைக் கொடுக்க வேண்டியது. பலஹீனருக்கு குமட்டலையுடைய கபஹரகாரிகளைக் கொடுக்க கூடாது. வமனகாரிகளாலும், அதிக ஜலம் சாப்பிடுவதாலும், உஷ்ணம் மிதமாக வைத்திருப்பதாலும் கபஹரகாரிகளின் குணத்தை விசேஷிக்கும். தாபனம் கண்டிருக்கும்போது கபஹரகாரிகளைக் கொடுக்கலாகாது. விரோசனகாரிகள், மூத்திரவர்த்தனகாரிகள், அபினிசேர்ந்த மருந்துகள் இவைகளைக் கொடுப்பதால் கபஹரகாரிகளின் குணத்தை குறைக்கும்.

8. சிறு குழந்தைகளுக்கு நித்திராகாரிகளைக் கொடுக்க கூடாது. ரத்த புஷ்டியுள்ளவர்களுக்கு இது சீக்கிறத்தில் குணத்தைத் தரும். புருஷர்களைப் பார்க்கிலும் ஸ்திரீகளுக்கு இதை குறைந்த அளவில் கொ

டுக்கவேண்டும். அதிக கபம் வெளிப்படும் இருமலுக்கும், மூளையில் ரத்தம் கட்டினதற்கும், நீடித்த இருதய ரோகத்திற்கும், நித்திராகாரிகளை ஜாக்கிறதையாய்க் கொடுக்கவேண்டியது. நாசூக சரீரத்தையுடையவர்களுக்கு கொஞ்சம் அளவில் ஆரம்பித்து நாளுக்குநாள் அதிகரித்துக் கொள்ளவும். கர்ப்பஸ்திரீக்கு இதைக் கொடுத்தால் பிண்டத்திற்கு மோசம் நேரிடும். மேல்சொல்லிய கபரோகங்களுக்கு இதைக்கொடுத்தால் கபம் உள்ளுக்கு அடைப்பட்டு மூச்சடைப்புகாணும். இது அளவுக்கு அதிகமானால் விஷமிக்கும்.

9. நீடித்த ரோகங்களுக்கு வியதாபேத காரிகள் கொடுக்கும்போது நோயாளிகள் பத்தியம், ஸ்நானபானம் முதலியவைகளில் ஜாக்கிறதையாய் இருக்கவேண்டியது. அப்படிக்கு இல்லாவிட்டால் மருந்துச் சாப்பிட்டும் பிரயோஜனமில்லை. இவைகளைச் சாப்பிட்டால் வெளிக்கு யாதொன்றும் காட்டாமல் உள்ளேயே வியாபித்து குணத்தைக்காட்டும்.

10. வேதனை சாந்தகாரிகள் மஜ்ஜை நரம்புகளிலும், மூளையிலும் வியாபித்து நித்திரையை உண்டாக்குவதால் நோவுடைய ரோகங்களுக்கு எல்லாம் கொடுக்கப்படும்.

11. ஆம்லநாசகாரிகள் நாசூகசரீர முடையவர்களுக்குக் கொடுக்கக்கொழுப்பைக் கரைத்து தேகத்தை இளைக்கச்செய்யும். ஆகையால் அவர்களுக்கு காரணமில்லாமல் கொடுக்கலாகாது. இவைகளை அஜாக்கிரதையாயாவது, அதிகமாயாவது, நாள்படவாவது சாப்பிட்டால் கெடுதிசெய்யும். இவைகள் போஜனம் செய்து 2 அல்லது 3 மணிநேரம் சென்ற பிறகுச் சாப்பிட வேண்டியது.

12. கிருமிநாசகாரிகள் தனியாகக் கொடுக்காமல் ஒன்றோடொன்று சேர்த்துக் கொடுப்பது நல்லது. இவைகளைச்சாப்பிட்டு மறுநாள் சிற்றாமணக்கெண்ணெயை பேதிக்குச்சாப்பிட வேண்டியது.

13. நஞ்சுண்டோருக்கு விஷநாசகாரிகள் உடனே கொடுக்கவேண்டியது.
14. நேத்திரரோகிகளை வெளிச்சமுள்ள இடத்தில் வைக்கலாகாது.
15. செவிரோகிகளை சப்தமில்லாத இடத்தில் வைக்கவேண்டும்.
16. நுரை ஈரல் ரோகிகளை பேசவொட்டாமல் செய்யவேண்டும்,
17. சிரோரோகிகளை உட்கார வைக்க வேண்டியது.
18. கைகால் தாபனரோகிகளை படுக்க வைக்க வேண்டியது.

19. நரம்புகளுக்கு பலத்தை உண்டாக்கி வலிரோகங்கள் (5) நீக்குகிற அங்காகர்சன நாசகாரிகள் வலி நின்றிருக்கும் காலத்தில் கொடுக்க

வலியை வரவொட்டாமல் செய்யும். இவைகளை நாள்படக் கொடுக்க வேண்டியது. பித்த உருப்புகளில் கெடுதிகளால் உண்டாகும் வலிகளுக்கு ரசம் சேர்ந்த மருந்துகளையும், வயிற்றில் அதிபுளிப்பால் உண்டாகும் வலிரோகங்களுக்கு க்ஷாரங்களையும், வயிற்றில் கிருமிகளால் காணும் வலிகளுக்கு கிருமிநாசகாரிகளையும் கொடுக்க குணமாகும் வலிரோகத்தில் தாபனம் கண்டால் அடிக்கடி வலிகள் காணும், அப்போது பயங்கரமாய் இருக்கும். வலிரோகத்தில் மலம், மூத்திரம், தீபனம் இவைகளை கவனித்துக் கிரமப்படுத்தவேண்டும்.

20. அதிசாரம், ரத்தப்பெருக்கு முதலியவைகளில் தாபனம் கண்டிருக்கும்போது ஸங்கோசன காரிகளைக் கொடுக்கக்கூடாது.

21. துவக்ஸபோடகாரிகள் நரம்புகளில் நீர் சென்று உண்டான வீக்கத்தின்பேரில் போட்டு நீரை வற்றச்செய்து வீக்கத்தைக்கரைக்கவும் சரீரத்துக்குள் இருக்கும் தாபனத்தை வெளியாக்கவும், தேகத்தை உஷ்ணிக்கவும், ஓர் இடத்திலுள்ள கெட்டநீரை வேறொருயிடத்தில் கொண்டுவரவும் மேலுக்கு உபயோகப்படுத்தப்படும். ஸ்தனம், அண்டகோசம், முதலிய மிருதுவான இடங்களிலும், தாபனம் கண்டிருக்கும்போதும், சிறுகுழந்தைகளுக்கும்(பிளிஸ்டர்)புண்ணாக்கக்கூடாது. எரிவண்டு பிளாஸ்திரிபோட்டு 6 அல்லது 12 மணி நேரம்வைத்து பிறகு எடுத்து பொல்டிஸ்கட்ட கொப்பளிக்கும். கர்ப்பஸ்திரீகளுக்கு ஸ்தனம், மார்பு இவைகளில் புண்ணாக்கக்கூடாது. இவைகளை உபயோகித்து வருகையில் சிரிச்சரம் கண்டால் அதை நீக்கி மெழுகுக் களிம்பைப் போட கொப்பளமாகும். அதிகமாய் ஜலம்சாப்பிட்டால் நீர் எரிவு குணப்படும். பிளிஸ்டர் செய்த இடத்தை ஆறாமல் வைத்து இருக்கவேண்டியபோது ஸேவைன் ஆயின்ட்மேன்ட்போட வேண்டியது. நரம்பைப்பற்றிய வியாதிகளுக்கு முள்ளந் தண்டின் பேரிலும்; உன்மாத ரோகத்துக்கு பிடரியிலும், சூதகசூலை, ஸ்திரீகளின் மேகம், குழந்தைகளின் சொட்டு மூத்திரம் இவைகளுக்கு திரிகஸ்தானத்திலும், காது வலிக்கு காதுக்கு பின் புறத்திலும், சந்திக சிலேஷம் ரோகத்துக்கு மூட்டின் பேரிலும், நேத்திர ரோகத்துக்கு புருவத்தின் மேல்புரம், கன்னப்பொறி, பிடரி, காதின் பின் பக்கம் இவைகளிலும்; வாந்தி ரோகத்துக்கு அகாகதஸ்தானத்திலும், பிளிஸ்டர் செய்தால் ரோகங்கள் குணமாகும். குழந்தைகளுக்கு பிளிஸ்டர் பிளாஸ்திரியின் பேரில் எண்ணெயை தடவி நோயுள்ள இடத்தில் போட்டு அந்த யிடம் சிவந்த உடனே எடுத்துவிட்டு சூடான போல்டிஸ்கட்ட சீக்கிரத்தில் கொப்பளிக்கும். அந்த

பேரரத்தை, அதிமதுரம், தாளிசப்பத்திரி, வகைக்கு விராகனிடை ½(ρ), உலர்த்தி சூர்ணித்து போட்டு காய்ச்சி, பாகுபதத்தில் இறக்கிசீசாவில்போட்டு தினம் பகலில் 3 தடவையும், இரவில் 3 தடவையும்குழந்தையின் நாக்கில் தடவிவர கக்குவான் என்ற கக்கு இருமல் தீரும். கக்கு இருமலுக்கு இது சஞ்சீவி

## திப்பிலி ரசாயனம்.

திப்பிலி பலம் 20, மிளகு பலம் 10, சுக்கு பலம் 20, குரோசாணி ஓமம், சோம்பு, சீரகம், சன்னராஷ்டகம், துப்பராஷ்டகம், தாளிசபத்திரி லவங்கப்பத்திரி, லவங்கப்பட்டை, கடுக்காய், தானிக்காய், நெல்லிமுள்ளி, லவங்கம், ஏலம், சித்திரமூலம், வகைக்கு பலம் 2 இவைகளை இளவறுப்பாய வறுத்து சூர்ணித்து சமனிடை சர்க்கரையைச் சேர்த்து தேன்விட்டுப் பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டு கொட்டைப்பாக்கு அளவு 40 நாள் சாப்பிட்டால் காசம் (5), சிலேஷ்மரோகங்கள் (96), வாதரோகம் (80), இருமல், வாந்தி முதலியவைகள் குணமாகும்.

## கந்தக ரசாயனம்.

சுத்திசெய்த கந்தகம் பலம் 6, கடுக்காய், தானிக்காய், நெல்லிமுள்ளி வெப்பாலே அரிசி, சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், கிராம்பு, லவங்கப்பத்திரி, நீர்முள்ளி வித்து, சுத்திசெய்த சேங்கொட்டை வகைக்கு பலம் 1, இவைகளெல்லாம் சூர்ணித்து சமஇடை சர்க்கரையைச்சேர்த்து தேன், நெய் இவைகள் விட்டு பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டு கொட்டைப்பாக்களவு 48 நாள் கொடுக்க குஷ்டம் (18), கிரகணி (11), அக்கினிமந்தம், அதிசாரம் (6), உதரரோகம் குணமாகும். தாதுவிருத்தியுண்டாகும்.

## பறங்கிப்பட்டை ரசாயனம்.

சுத்திசெய்த பறங்கிப்பட்டை பலம் 16, கொடிவேலிவேர், சங்குவேர், நன்னாரிவேர், அமுக்கிருக்கிழங்கு, நிலப்பனைக்கிழங்கு, திப்பிலிமூலம், தாளிசப்பத்திரி, லவங்கப்பத்திரி, மிளகு, திப்பிலி, ஓமம், குரோசாணிஓமம், கருஞ்சீரகம், சித்தரத்தை, பேரரத்தை, கடுக்காய், தானிக்காய், நெல்லிமுள்ளி, செவ்வியம், வால்மிளகு, கோஷ்டம், கசகசா, மல்லி, ஜடாமாஞ்சில், கிராம்பு, சாதிக்காய், லவங்கப்பட்டை, சுக்கு வகைக்கு பலம் ½ (ρ), சீரகம், ஏலம் வகைக்கு பலம் 1, இவைகளை உலர்த்தி சூர்ணித்து, பசும்பாலில் பிட்டம்வைத்து உலர்த்தி அத்துடன் நெய் படி 2, சீனிசேர் 2, தேன்படி 1¼ (கவ) சேர்த்து பிசைந்து ஒரு பீங்கானில் வைத்துக்கொண்டு பாக்களவு தினம்2 தடவை சாப்பிட்டுவர வாதம் (80), மேகம் (20), மேகவாயு, மேகத்தடிப்பு, மேகஊறல் முதலிய சகல மேகசம்பந்தமான ரோகங்கள் குணமாகும். பத்தியம்—புளி, புகை, ஸ்திரிபோகம் தள்ளவும்.

# 48-வது அத்தியாயம்.

## வடகங்கள்.

யுனானி, கர்நாடக கிரந்தங்களைப்பார்வையிட்டு மேகராஜ சுவர்ணவடகம், மதனபோக சுவர்ணவடகம் முதலிய மகாசிலாக்கியமான வடகங்கள் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

## மேகராஜசுவர்ணவடகம்.

பறங்கிப்பட்டை, நன்னாரிவேர், வகைக்கு பலம் 40, பொடித்து இரு தூணி ஜலத்தில்போட்டு எட்டிலொன்றாகக்காய்ச்சி வடித்த கஷாயத்தில் சீனி கற்கண்டு சேர் 1, போட்டுப்பாகுசெய்து அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, வகைக்கு பலம் 2, சூர்ணித்து சேர்த்து பதத்தில் எடுத்து அதில் ஒரு விரா. வீதம் எடுத்து அதில் $\frac{1}{4}$ (வ) குன்றிமணியிடை நமசிவாய செந்தூரம், அல்லது $\frac{1}{4}$ (வ) குன்றிமணியிடை ரசசெந்தூரமும், அரிசியிடை வீர செந்தூரமும், சேர்த்தரைத்து மூடி சிறுத்தட்டைபில்லையாக்கி அதற்கு தங்கரேக்குகளால் கவசமிட்டு உலர்த்தி ஒரு கற்கார்க்கு சீசாவில்போட்டு வைத்துக்கொண்டு ஒரு பில்லை வீதம் தினம் 2 தடவைச்சாப்பிட்டுவரமேகம் (20) தீரும், தாதுபுஷ்டி உண்டாகும். பத்தியம்—பாலும் அன்னமுஞ் சாப்பிடவும்.

## வாதஹரவடகம்.

ஒரு சேர் சீனியுடன் தேவையான ஜலத்தைச்சேர்த்து பாகுசெய்து அதில் வஸ்திரகாயஞ்செய்த வெண்மைநிறமுள்ள சுக்குத்தூள் சேர் 1, போட்டுக் ... பதத்தில் வரும்போது 10 துளி பெப்பர்மெண்ட் தயிலத்தை (Peppermint oil) விட்டு துளாவி எடுத்து ஒரு விரா. வீதம் பில்லைகளாக்கி சீசாவில்போட்டு வைத்துக்கொண்டு தினம் ஒரு பில்லைச்சாப்பிட்டுவர வாயு தீரும், பசி உண்டாகும். ரசபஸ்மம் தேனில் சாப்பிட்டு பிறகு இதைச்சாப்பிட மெத்த நன்மைசெய்யும்.

## சென்முகவடகம்.

3 பலம் நாருஇல்லாததும் தோலைநீக்கினதுமான இஞ்சியை சிறு துண்டுகளாக்கி அத்துடன் சீரகம், மிளகு, கொத்தமல்லிவிதையின் பருப்பு, இந்துப்பு, வகைக்கு பலம் 2 சேர்த்து ஒரு பீங்கானில்போட்டு 3 நாள் போதுமான எலுமிச்சம்பழச்சாறுவிட்டு ஊறவைத்து ரவியில் உலர்த்தி, மறுபடியும் புளிப்புமாதுளைச்சாற்றால் 3 நாள் ஊறவைத்து பெருங்காயம் விரா. 1 சேர்த்து அரைத்து ஒரு பைசா அளவாக பில்லைகளாக்கி ரவியில் உலர்த்

தி தினம் ஒரு பில்லைச்சாப்பிட்டுவர அஜீர்ணம், அக்கினிமந்தம், பித்தம், வாதம் தீரும், பசி உண்டாகும்.

## மதனபோகசுவர்ணவடகம்.

4 குருணி ஜலத்தில் மலாக்கா சந்தனக்கட்டை, பட்டைநீக்கின வில்வவேர், இவைகளின் கத்தியால் சீவின சீவல் வகைக்கு சேர் 5, நன்னாரிவேர் சேர் 4, விலாமிச்சுவேர் சேர் 2 நொறுக்கிப்போட்டு எரித்து ஒரு குருணியாக்கி வடித்தகசாயத்தில் சுக்கு, மிளகு, திப்பிலி, பறங்கிப்பட்டை, புரஷன்பிசின் வகைக்கு விரா. 5, எட்டிக்கொட்டை விரா. 1, சுத்திசெய்த கஞ்சா விரா. 1, பொடித்துப்போட்டு சுண்டக்காய்ச்சி, உலர்த்தி, அத்துடன் குங்குமப்பூ விரா. ½ (ற), அபினி விரா. ½ (ற) சேர்த்து கல்வத்திலிட்டு பந்நீரால் 2 ஜாமம் அரைத்து ½ (ற) விரா. வீதம் சிறு பில்லைகளாக்கி ஒவ்வொரு பில்லைக்கும் தங்கரேக்கால் கவசமிட்டு சுவர்ணபில்லைபோலாக்கி உலர்த்தி தினம் 1 அல்லது 2 தடவை ஒரு பில்லை வீதம் சாப்பிட்டு உடனே பசும்பால் சேர் 1 குடித்துவர தாதுவிருத்தி, சுக்கிலத்தடிப்பு, தீபனம், தேகதேஜசு, உண்டாகும்.

## சவுபாக்கியவடகம்.

2½ சேர் இஞ்சிச்சாற்றில் 4 சேர் சீனியை சேர்த்து பாகுசெய்து அதில் சுக்கு, மிளகு, ஓமம், வகைக்கு பலம் 8, திப்பிலி, மல்லி, கோஷ்டம், அதிமதுரம், அக்கிரகாரம், பறங்கிப்பட்டை, கருவாப்பட்டை, குரோசாணி ஓமம், தாளிசபத்திரி, சித்தரத்தை, கண்டத்திப்பிலி, வகைக்கு பலம் 1, காசாஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி, வால்மிளகு, வகைக்கு விரா. 2½ (உற) இவைகளை சூர்ணித்து சேர்த்துக்கிண்டி ஒரு சுத்தமான பலகையின்மேல் நெய்யைத்தடவி அதின்மேல்கொட்டி நெய்யைத்தடவின வாழை இலையால் ஒரே மட்டமாக்கிக்கத்தியால் சதுரபில்லைகளாக்கி 2-3 விரா. வீதம் தினம் காலையில் பிரசவித்த ஸ்திரிகள் பிரசவித்து 11வது நாள் முதல் சாப்பிட்டுவர வாயுவை கண்டித்து தீபனத்தை உண்டாக்கி நீரோகிகளாக இருக்கச்செய்யும்.

## ஸ்திரிபோகரத்னவடகம்.

பட்டைநீக்கின வில்வவேர், நன்னாரிவேர், விலாமிச்சுவேர், மலாக்கா சந்தனக்கட்டை வகைக்கு வீசை 1, பொடித்து இருதூணி ஜலத்தில்போட்டு எரித்து எட்டிலொன்றாக்கி வடிக்கவும். இந்த வடித்த கசாயத்தை மறுபடியும் எரித்து ஒரு ஆழாக்காக்கி அத்துடன் சீனிகற்கண்டு சேர் 1½ சேர்த்து பாகுசெய்து, அதில் சுத்திசெய்த ஜாதிக்காய், வால்மிளகு, நீர்முள்ளிவிதை, சிறு பூனைக்காலிவிதை, புதுமுருங்கைவிதை, நிலப்பனைக்கிழங்கு, புரசன் பிசின், நிலக்கடம்பு, வகைக்குப்பலம் 1, சூர்ணித்து வஸ்

திரகாயஞ்செய்ததூளும், கோரோசனை, குங்குமப்பூ, சுத்திசெய்த கஞ்சா, அபினி வகைக்கு விரா. 1 இவைகளின் தூளும், சேர்த்துக்கிண்டி பதத்தில் எடுத்து, $\frac{1}{4}$ (வ) அணா அளவாக பில்லைகளாக்கி ஒவ்வொருபில்லையின் மேல் (ஒருபக்கத்தில்) $\frac{1}{4}$ (வ) அணா அளவாக தங்கரேக்கைத்தடவி ஒரு கற்கார்கு சீசாவில் போட்டுவைத்துக்கொண்டு தினம் ஒரு பில்லை சாப்பிட்டு அதின் மேல் 2 சேர் காய்ச்சின பசும்பாலை சாப்பிட்டுவர தாதுபுஷ்டி, சுக்கிலத்த டிப்பு, தேகதேஜசு, தீபனம், ஸ்திரிபோகவிருப்பம் இவைகள் உண்டாகும்.

## அயக்காந்தவடகம்.

அரப்பொடி, காந்தம், ரசம், கந்தகம், லிங்கம், வகைக்கு பலம் 1 சுத்திசெய்து அத்துடன் பெருங்காயம் பலம் 1 சேர்த்து கல்வத்திலிட்டு கற்றாழைச்சாற்றால் 4 சாமம் அரைத்து அத்துடன் சுக்கு, மிளகு, திப்பிலி வகைக்கு பலம் 1 சூர்ணித்து சேர்த்து மறுபடியும் ஒரு சாமம் ஷை சாற்றால் அரைத்து ஒரு பைசா அளவாக பில்லைகளாக்கி உலர்த்தி சீசாவில்போட்டு வைத்துக்கொண்டு ஒரு பில்லை தேனில் தோய்த்து தினம் சாப்பிட்டுவர பாண்டு, சோகை, வீக்கம், குன்மம், சன்னி, வாயு தீரும்.

---

# 49-வது அத்தியாயம்

---

## * பாவனங்கள்.

பதார்த்தங்களை பற்பல ரசங்களில் ஊறவைத்து பக்குவப் படுத்துவதால், ரசங்களின் குணங்களை பதார்த்தங்களின் குணங்களுடன் சேர்ந்து அந்த பதார்த்தங்களுக்கு அதி விசேஷ குணத்தை உண்டாக்கி அநேக வித பலமான ரோகங்களை அதி சீக்கிரத்தில் குணமாக்க வல்லமையுள்ள பாவனங்கள் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

## பாவனக் கடுக்காய்.

100 பெருங்கடுக்காயை கழுநீரில் ஒரு நாள் ஊறவைத்து மறுநாளும் புதுக்கழுநீரில ஊறவைக்கவும். இப்படி 9 தடவை செய்து எடுத்து கொட்டைகளை நீக்கி எலுமிச்சம்பழச்சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து எடுத்து

---

* சாற்றில் ஊறவைத்துப் பக்குவப்படுத்தப்படும் பதார்த்தத்திற்கு பாவனம் என்று பெயர்.

4 படி புளித்தமோரில் போட்டு சுண்டக்காய்ச்சி எடுத்துக்கொள்ளவும். மிளகு, சீரகம், திப்பிலி, சுக்கு, பெருங்காயம், வகைக்குப் பலம் 1, இந்துப்பு பலம் 3, இவைகளைச் சூர்ணித்து மேற்படி கடுக்காய்களில் செலுத்தி உலர்த்தி ஒரு ஜாடியில் வைத்துக்கொண்டு தினம் ஒரு கடுக்காய் காலையில் சாப்பிட்டுவர அரோசிகம், பித்தம், அக்கினிமந்தம், வாயு, குன்மம், தீரும், மலமிறங்கும்.

## பாவனச் சீரகம்.

2 சேர் சீரகத்தை வல்லாரை, கையாந்தகரை, பொன்னாங்காணி, புளியாரை, இஞ்சி, எலுமிச்சம்பழம், இவைகளின் சாறுகளில் தனித்தனியே ஒரு நாள் ஊறவைத்து நிழலில் உலர்த்தி தினம் காலையில் 2 விராகனிடை வீதம் சாப்பிட்டுவர பித்தவாயு, உஷ்ணம், அக்கினி மந்தம், மலபந்தம், தீரும். ரத்த விருத்தி, தாது புஷ்டி உண்டாகும்.

## பாவன மிளகு.

ஒரு சேர் நல்லமிளகை 2 சேர் கையாந்தகரைச் சாற்றில் போட்டுச் சுண்டக்காய்ச்சி, பிறகு 2 சேர் எலுமிச்சம்பழச் சாற்றில் போட்டு இந்துப்பு சேர் ½ சேர்த்துச் சுண்டக்காய்ச்சி நிழலில் உலர்த்தி தினம் காலை, மாலை 5–10 மிளகு சாப்பிட்டுவர அக்கினிமந்தம், உஷ்ணவாயு, தீரும். ரத்தவிருத்தியாகும்.

## பாவனத் திப்பிலி.

ஒரு சேர் (பெரிய) அரிசித்திப்பிலியை கையாந்தகரை, வல்லாரை, நெய்ச்சுட்டி, சிறுக்கீரை, இஞ்சி, முசு முசுக்கை, பொன்னாங்காணி, கீழாநெல்லி, நாயுருவி இவைகளின் சாற்றில் வகைக்கு மூன்று நாள் ஊறவைத்து, பிறகு எலுமிச்சம்பழச்சாறு சேர் 1, இந்துப்பு சேர் ½ இவ்விரண்டும் சேர்த்து அதில் 3 நாள் ஊறவைத்து உலர்த்தி தினம் காலையில் ஒரு திப்பிலியை சாப்பிட்டுவர காசம் (5), சுவாசம் (5), உஷ்ணவாயு, முதலியவைகள் தீரும், பசியை உண்டாக்கும்.

## பாவன ஓமம்.

ஒரு சேர், ஓமத்தின் அரிசியை ஒரு நாள் புளித்த மோரில் ஊறவைத்து உலர்த்தி, பிறகு 2 சேர் எலுமிச்சம் பழச்சாறும், ½ சேர் இந்துப்பும் சேர்த்து அதில் 2 நாள் ஊறவைத்து உலர்த்தி தினம் 2 தடவை ஒரு விராகனிடை வீதம் கொடுக்க வயிற்றுவலி, அக்கினிமந்தம், வாயு, வயிற்றுப்பல், அஜீர்ணம் குன்மம், முதலிய பற்பல ரோகங்கள் குணமாகும்.

# 50-வது அத்தியாயம்.

## ஹல்வாக்கள்.

யுனானி, கர்நாடக வைத்திய கிரந்தங்களில் சொல்லிய ஹல்வாக்களில் மோகவல்லி ஹல்வா, மதனசஞ்சீவி ஹல்வா, போகவல்லி ஹல்வா, முதலிய வெகு நல்ல ஹல்வாக்களை இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும். இவைகளைச் சாப்பிட்டு வருகின்றவர்களுக்கு தாது புஷ்டியை யுண்டாக்கி அதிஸ்திரீ போக விருப்பம் உண்டாகு மென்பதற்குச் சந்தேகமில்லை.

## மோகவல்லி ஹல்வா.

கார்ன் புளோர் (Corn Flour) மாவு சேர் 1, எருமை வெண்ணெய் சேர் 2, இவ்விரண்டும் சேர்த்து நுரை எழும்பும் வரையில் மத்தித்து 4 சேர் பாலிற் கரைத்து அத்துடன் சுத்திசெய்த வாதுமைப்பருப்பு சேர் 1, கசகசா விராகனிடை 5, ஏலம் விராகனிடை 2, குங்குமப்பூ விராகனிடை ½ (உ), இவைகளை பாலால் மைபோல் அரைத்துச் சேர்த்து, சீனி சேர் 2, பந்நீர் சேர் ½ (உ), நெய் சேர் ½ (உ), போட்டு எரித்து அடிக்கடி துழாவி சரியான பதத்தில் எடுத்து ¼ (வ), சேர் வீதம் தினம் சாப்பிட்டுவர தேக புஷ்டி, தாது விருத்தி, சுக்கிலத்தடிப்பு, உண்டாகும்.

## மதன சஞ்சீவி ஹல்வா.

ஒரு சேர் வாதுமைப்பருப்பை ஜலத்திலிட்டு ஊறவைத்து தோலை நீக்கி அத்துடன் ஏலம், சாதிக்காய், கிராம்பு, சாதிப்பத்திரி, வால்மிளகு வகைக்கு விராகனிடை 2½ (2உ), நெய்யில் வறுத்து சேர்த்து, கசகசா சேர் ½ (உ), சாலாமிசரி சேர் ¼ (வ) இவைகளை எல்லாம் சேர்த்து பாலாலரைத்து 6 சேர் பசும்பாலில் கரைத்து எரித்து இடைவிடாமல் துழாவிக் கொண்டேயிருக்கவும். தடிப்பாய்வரும் சமயத்தில், நீர் முள்ளிவிதை, சிறு பூனைக்காலிவிதை வகைக்குப் பலம் 1, குங்குமப்பூ விராகனிடை ½ இவைகளை சூர்ணித்துப் போட்டுக் கிண்டி, பிறகு பந்நீர் சேர் ¼ (வ),பசும்நெய் சேர் 1, சீனாகற்கண்டுத்தூள் சேர் 2, சேர்த்து பதத்தில் எடுத்து தினம் ¼ (வ), சேர் வீதம் சாப்பிட்டுவர ஸ்திரீ போகத்தாலுண்டாகும் மேகம் முதலியவைகள் தீரும், தாதுபுஷ்டி உண்டாகும்.

## போகவல்லி ஹல்வா.

சுத்திசெய்த வாதுமைப்பருப்பு பலம் 8, கச கசா பலம் 4, சாலாமிசரி பலம் 2, நீர்முள்ளிவிதை பலம் 1, சாதிக்காய் பலம் ½, வால்மிளகு

பலம் $\frac{1}{4}$ (வ), ஏலம் பலம் $\frac{1}{8}$, (ஞ) இவைகள் பசும்பாலாலரைத்து 6 சேர் பசும் பாலில் கரைத்து எரித்து 2 சேர் ஆக்கி அதில் பந்நீர் சேர் $\frac{1}{2}$, நெய்சேர் 1, சீனிசேர் 2, போட்டுக்காய்ச்சி பதத்தில் எடுத்து தினம் $\frac{1}{4}$ (வ) சேர் வீதம் சாப்பிட்டுவர நீர் எரிவு, போகர்தாதுவுண்டாகும் உஷ்ணம் தீரும். தாது புஷ்டி உண்டாகும்.

## வாதுமை ஹல்வா.

கோதுமை, கசகசா, சவ்வரிசி, சுத்திசெய்த வாதுமைப்பருப்பு வகைக்கு சேர் $\frac{1}{4}$ (வ), ஜலத்தில் ஊறவைத்து மைபோல் அரைத்து 4 சேர் பசும்பாலில் கரைத்து அதில் சீனி சேர் 1, பந்நீர் சேர் $\frac{1}{4}$ (வ), நெய் சேர் $\frac{1}{4}$ (வ), சேர்த்துக்காய்ச்சி பதத்தில் எடுத்து $\frac{1}{1}$ சேர்வீதம் சாப்பிட்டுவர தாதுபுஷ்டி உண்டாகும்.

## கோதுமை ஹல்வா.

கோதுமையின் வெண்மையான ரவா (நொய்) யை எந்திரத்திலிட்டு மாவாக்கின மாவும், பச்சை சம்பா அரிசியை ஜலத்தில் ஊறவைத்து எடுத்து இடித்து வஸ்திர காயம் செய்த மாவும் வகைக்கு ஆழாக்கு 1, எருமைப்பால், முற்றின தேங்காய்ப்பால் வகைக்கு படி 1, இவைகளில் சேர்த்துக் கரைத்து, எரித்து அடிக்கடி துழாவிகொடுத்து பதத்தில் சீனி சேர் $1\frac{1}{2}$, ஏலரிசிதூள் விராகனிடை 2, சுத்தி செய்த வாதுமைப்பருப்பு சேர் $\frac{1}{4}$ (வ), நெய் சேர் $\frac{1}{2}$, பந்நீர் சேர் $\frac{1}{2}$ இவைகளை எல்லாம் சேர்த்து சரியான பதத்தில் எடுத்து $\frac{1}{4}$ (வ) சேர் வீதம் தினம் சாப்பிட்டுவர தாது புஷ்டி உண்டாகும்.

---

# 51-வது அத்தியாயம்.

---

## தாதுபுஷ்டி அவுஷதங்கள்.

இங்கிலீஷ், யுனானி, கர்நாடக கிரந்தங்களை பார்வையிட்டு மஹா சிரேஷ்டமான பலகாரிகள், தாதுப்புஷ்டி, தேகப்புஷ்டி, ரத்தவிருத்தி உண்டாகும் மருந்துகள் சர்வஜன உபகாரமாக இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும். அவைகளை சாப்பிட்டுவருகின்றவர்களுக்கு தேகத்தில் பலமும், தாதுப்புஷ்டியும், தேகப்புஷ்டியும் ரத்தவிருத்தியும் உண்டாகுவதற்கு யாதோரு சந்தேகமுமில்லை.

**தேகத்தில் பலம் உண்டாக:—**

1. விளாவின கந்தகத்திராவகம் 15 துளி, நிலவேம்புக்கசாயம் 10 திராம், ஆரஞ்சிப்பழத்தோல் பாணிதம் 1 திராம், இவைகளைச்சேர்த்து தினம் 3 தடவைக் கொடுக்க பலத்தை உண்டாக்கும்.

2. 5 விரா. சீரகத்தை இரவில் ஒரு மண்குண்டானில் போட்டு, 4 அவுன்ஸ் ஜலத்தை விட்டு ஊறவைத்துக் காலையில் ஒரு கருநொச்சிக்கட்டையால் அரைத்துச் சாப்பிட்டுவர வச்சிர சரீரமுண்டாகும்

3. விளாவின கந்தகத்திராவகம் 1½ திராம், ஷின்கொனாக்கசாயம் 6 அவுன்ஸ், இவைகளைச் சேர்த்து ஒரு அவுன்ஸ் வீதம் கொடுக்க பலத்தை உண்டாக்கும்.

4. நாகபஸ்மம் (Oxide of Zinc) 5 கிறேன்ஸ், ஜென்சன் சத்து 5 கிறேன்ஸ் இவைகளைச் சேர்த்து 2 மாத்திரைகளாக்கி காலையில் ஒன்றும் மாலையில் ஒன்றும் கொடுத்துவர பலத்தை உண்டாக்கும்.

5. பால் துத்தம் 1 திராம், ஜென்சன் சத்து 20 கிறேன்ஸ், குவைனா ½ (ஐ) திராம், சீமைசாமந்திப்பூத்தயிலம் 6 துளி இவைகளைச்சேர்த்து 30 மாத்திரைகளாக்கி தினம் 3 தடவை ஒரு மாத்திரைவீதம் கொடுத்துவர பலத்தை உண்டாக்கும். (Dr. Golding Bird)

6. பால்த்துத்தம் 6 கிறேன்ஸ், விளாவின கந்தகத்திராவகம் 45 துளி, ஆரஞ்சித்தோல் பாணிதம் ½ (ஐ) அவுன்ஸ், ஆரஞ்சித் தோல்க்கசாயம் 5½ அவுன்ஸ், இவைகளைச் சேர்த்து ஒரு அவுன்ஸ் வீதம் தினம் 3 தடவைக் கொடுத்துவர பலத்தை உண்டாக்கும். (Dr. Druitt).

தேகத்தில் ரத்தம் ஊற:—

1. ஒருபலம் கிராம்பை இரவில் முலைப்பாலில் ஊறவைத்து மறுநாள் அந்தப்பாலால் மைபோலரைத்து, தேன் பலம் ¼ (வ), விட்டு கொதிக்க வைத்து பதத்தில் எடுத்து கடலை அளவாக கொடுத்துவர, தீபனம், ரத்தவிருத்தி உண்டாகும்.

வெந்தியம், கோதுமை வகைக்கு ½ அவுன்ஸ் வறுத்து இரவில் பசும்பாலில் ஊறவைத்துக் காலையில் அரைக்கடைந்து வடித்து நெய், தேன், சர்க்கரை வகைக்கு ½ அவுன்ஸ் சேர்த்து தினம் காலையில் சாப்பிட்டுவர ரத்தவிருத்தி உண்டாகும், விந்து ஊறும்.

3. பலகாரிச்சூர்ணம்.
4. போஜனக்குடாரி மாத்திரை.
5. சுவர்ணமணி மாத்திரை.
6. நாராயண மண்டூர செந்தூரம்.
7. திரிலோகச் செந்தூரம்.
8. அயச்செந்தூரம்.
9. உருக்கு பஸ்மம்.
10. அயபஸ்மம்.
11. திராக்ஷ ஷர்பத்து.
12. பாவன சீரகம்.
13. பாவன மிளகு.

இவைகளை இந்த புஸ்தகத்தில் சொல்லியபடி செய்துக்கொடுக்க ரத்த விருத்தி உண்டாகும்.

**தாதுப்புஷ்டி உண்டாக—:**

1. ஒரு பிடி பச்சைக்கடலை இரவில் ½ (ப) சேர் ஜலத்தில்போட்டு ஊற வைத்து காலையில் வடித்து அந்த ஜலத்தில் சாதிக்காய், சாதிப்பத்திரி வகைக்கு ¼ (வ) கிராம், சூர்ணித்துப்போட்டு, தேன் 2 கிராம் சேர்த்துக்கொடுத்து வர வீரிய விருத்தி உண்டாகும்.

2. கசகசா, வால்மிளகு, வகைக்கு பலம் 2 இளவறுப்பாய் வறுத்து அத்துடன் வாதுமைப்பருப்பு, சீனு கற்கண்டு வகைக்கு பலம் 2 சேர்த்து கல் உரலில் போட்டுக் கடப்பாறையால் இடித்து லேகியமாக செய்து பாக்களவு தினம் 2 தடவைச் சாப்பிட்டுவர தாதுபுஷ்டி உண்டாகும்.

3. தாதுபுஷ்டிச்சூர்ணம்.
4. தாதுபுஷ்டி லேகியம்.
5. அயபஸ்பம்.
6. அப்பிரேக பஸ்மம்.
7. சுவர்ண பஸ்மம்.
8. சுவர்ண ரஜத பஸ்மம்.
9. அயகாந்தச் செந்தூரம்.
10. அயச்செந்தூரம்.
11. சுவர்ணமணி மாத்திரை.
12. கந்தக ரசாயனம்.
13. மதனபோக சுவர்ண வடகம்.
14. ஸ்திரிபோக ரத்தினவடகம்.
15. பாவன சீரகம்.
16. மோகவல்லி ஹல்வா.
17. மதன சஞ்சீவி ஹல்வா.
18. பொகவல்லி ஹல்வா.
19. வாதுமை ஹல்வா.
20. கோதுமை ஹல்வா.

இவைகளில் எதைச் செய்துகொடுத்த போதிலும் தாதுப்புஷ்டி உண்டாகும். இவைகளின் செய்முறை இந்த புஸ்தகத்தில் காண்க.

**தேகப்புஷ்டி உண்டாக:—**

1. மகாகூழ்ப்பாண்ட லேகியம்.
2. போகவல்லி ஹல்வா.
3. மீன் எண்ணெய் (codliver oil)

இவைகளை இப்புஸ்தகத்தில் சொல்லியபடி செய்துக் கொடுக்க தேகபுஷ்டி உண்டாக்கும்.

☞ இன்னும் அநேக மருந்துகள் 14-வது அத்தியாயத்தில் காண்க.

---

## 52-வது அத்தியாயம்.

---

### நஸ்யங்கள்.

கர்நாடக கிரந்தங்களில் சொல்லிய நஸ்யங்களில், அபஸ்மாரம், சன்னி முதலிய மகா கடோமுள்ள ரோகங்களை குணமாக்கு

வதில் வெகு கீர்த்தியைப்பெற்ற நஸ்யங்களை இந்த அத்தியாய த்தில் சொல்லப்படும். இவைகள் சாமான்னியமானவைகளல்ல

## வங்கேசுவர ரசநஸ்யம்.

ரசம், மனேசிலை, கந்தகம், சுக்கு, திப்பிலி, அக்கிராகாரம், வெண்நாவி, சருநாவி, வெங்காரம் வகைக்கு விரா. 1, மிளகு விரா. 9, இவைகளில்ரச மும் கந்தகமும் கல்வத்திலிட்டு அரைத்து* பிறகு கொஞ்சம் மிளகும் மற்ற சரக்குகளும் போட்டு அரைத்து நீல நிறமாக தோன்றினவுடனே பாக்கி மிளகை போட்டு 4 ஜாமம் அரைத்து ஒரு சீசாவில் போட்டு வைத்துக் கொண்டு கொஞ்சம்யெடுத்துநஸ்யமிடசன்னி, தோஷம், மண்டைசிலேஷ் மம் முதலிய பலமானரோகங்கள் குணமாகும்.

## சர்வேசுவர ரசநஸ்யம்.

ரசம், கந்தகம், நாவி, மனேசிலை, வெங்காரம், சுக்கு, மிளகு, திப்பி லி, இவைகளை சமமாக சேர்த்து கல்வத்திலிட்டு 4 ஜாமம், அரைத்து ஒரு சீசாவில் போட்டு வைத்துகொண்டு கொஞ்சம் எடுத்து நஸ்யமிட சன்னி மயக்கம், மண்டைகபம் முதலிய பற்பல கொடிய ரோகங்கள் குணமாகும்.

## * காலபைரவ நஸ்யம்.

ஒரு துணியை மூட்டைப்பூச்சிகளின் ரத்தத்தில் நனைத்து உலர்த்தி, ஒரு கற்கார்கு சீசாவில் போட்டு வைத்துக்கொண்டு, 4 வித அபஸ்மார ரோகங்களுக்கு, கழுதை மூத்திரத்தில் நனைத்து 3 நாள் நஸ்யமிட நாள் பட்டரோகமாயிருந்தபோதிலும் குணமாகும்.

---

# 53-வது அத்தியாயம்.

---

## புகைச்சல்கள்.

**கந்தகப்புகைச்சல்**—Sulphur vapour bath.

மூங்கிற்பத்தைகளால் கோழிகூடுபோல் ஒரு கூடுசெய்து சிரசு நுழை யும்படி ஒரு துவாரம் மேல்பக்கத்தில் வைத்து, மெழுகுதுணியால் பக்குவ

---

* चिरगुट भिजवावें मत्कुणाचेनिरक्तें ॥
तिन दिन खरमूत्रें नासदेयीं पवित्रें ॥
बहुतहीं दिवसाचा तो अपस्मार नाशी ॥
प्रिय सखि तुजलागीं सांगतों निश्चयेसीं ॥

மாய் மூடி அதில், சிரசு வெளியில் இருக்கும்படி நோயாளியை உள்கா ரவைத்து, புகை வெளிப்படாமல் இருக்க கழுத்திருக்கிற இடத்தில் துணி யாலடைத்து, கந்தகத்தை ஒரு சிறு தட்டில் போட்டு நெருப்பின்மேல் வைத்து கூண்டுக்குள் வைக்க, கந்தகம் புகைந்து சரீரமெங்கும் படும். 10—15 நிமிஷம் வரையில் நோயாளியை வைத்திருந்து பிறகு வெளிப்படு த்திவிடவேண்டியது. இந்தச் சிகிச்சை சருமரோகங்கள், இல்வாதரோகம் இவைகளுக்குச்செய்தால் வெகு நன்மைசெய்யும்.

## ரசப்புகைச்சல்—Fumigation.

மேல் சொல்லியபடி ஒருகூடு செய்து அந்தக்கூட்டில் நோயாளியி ன் தலை வெளியிலிருக்கும்படி உட்காரவைத்து 1 அல்லது 2 கிராம் பிளாக் ஆக்ஸட் ஆப்மேர்க்யூரி (Black Oxide of Mercury) என்னும் ரஸபஸ்மத் தை இரும்புத் தட்டில்போட்டுச் சுடவைத்தால், அதிலிருந்து புகை எழும் பிதேசமெங்கும் படும்; அந்தப்புகையை ஆக்கிராணித்தால் சீக்கிரத்தில் வாயைப்பிடிக்கும். விரணம் முதலியவைகளுக்கு ரசப்புகைபோட்டால் வெகு நன்மை செய்யும்.

---

## 54-வது அத்தியாயம்.

## விரேசனகாரிகள்.

அநேக ரோகங்கள் மலபந்தத்தால் உண்டாகுவதால் மலத் தை கிரமப்படுத்த மஹாசிரேஷ்டமான அவுஷதங்களாகிய மாத் திரைகள், சூர்ணங்கள், லவணங்கள், குழம்புகள், எண்ணெய்கள் முதலிய அநேக வித ரூபங்களாக இருக்கின்ற விரேசனகாரிகள் சகலஜனங்களுக்கு அதிஉபயோகமாகும்பொருட்டு இந்த அத் தியாயத்தில் சொல்லப்படும். அவைகளை சாப்பிட்டால் வாதபி த்தசிலேஷ்ம கெட்டநீர்களை வெளியாக்கி அரோக்கிய ஸ்திதி யில் வைக்கும் என்பதற்குச் சந்தேகமில்லை.

**மாத்திரைகள்:—**

(1). ரசபஸ்மம் பலம் 1, சுத்திசெய்த லிங்கம் பலம்2, சுத்திசெய்த வெங் காரம் பலம் 3, சுக்கு பலம் 4, சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு பல ம் 5 இவைகளை கல்வத்திலிட்டு குரோசாணி ஓமம் கசாயத்தால் மை போலரைத்து குன்றிமணி அளவாக மாத்திரைகளாக்கி ஒரு மாத் திரைக்கொடுக்க நன்றாய் பேதியாகும். பேதி அதிகமானால் மோரும் அன்னமும் சேர்த்துச்சாப்பிடவும்.

(2). சுக்கு பலம் 1, ரோஜாமொட்டு பலம் 2, சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு பலம் 3 இவைகள் கல்வத்திலிட்டு சந்தனக்கட்டை, சண்பகப்பூ இவைகளின் கசாயத்தால் ஒரு ஜாமம் அரைத்து குன்றிமணி அளவாக மாத்திரைகளாக்கி ஒரு மாத்திரைக்கொடுக்க செவ்வையாய் பேதியாகும்.

(3). சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு பலம் 5, சுத்திசெய்த லிங்கம், சுத்திசெய்த வெங்காரம், ரசபஸ்மம், ரசசெந்தூரம்வகைக்கு பலம் ½. சுக்கு பலம் 2, மிளகு பலம் 1, திப்பிலி பலம் ½ இவைகள் எல்லாம் கல்வத்திலிட்டு விளாம்பிசின் ஜலத்தால் மைபோலரைத்து குன்றிமணி அளவாக மாத்திரைகளாக்கி ஒரு மாத்திரைக்கொடுக்க வாதம், பித்தம், சிலேஷ்மம் இவைகளைக்கண்டித்து செவ்வையாய் பேதியாகும்.

(4). லிங்கபேதிமாத்திரை
(5). காக்கணன்வேர் பேதியாத்திரை
(6). ரசலிங்கபேதி மாத்திரை
(7). பானுபிரகாச மாத்திரை
(8). ரசமாத்திரை

} இவைகளில் எதைசெய்துக் கொடுத்தபோதிலும் வாத பித்த சிலேஷ்மரோகங்களை கண்டித்து செவ்வையாய் பேதியாகும். செய்முறை இந்தப்புஸ்தகத்தில் காண்க.

சூர்ணங்கள்:—

(1). ¼ (வ) பலம் உலர்ந்தரோஜாமொட்டுகள் நெய்யில் வறுத்து சூர்ணித்து அதற்கு சமமாக சர்க்கரைச்சேர்த்துச்சாப்பிட தண்ணீர் தண்ணீராய் பேதியாகும்.

(2). கலவை ஜாலப் சூர்ணம்
(3). கலவை ஸ்காமொனிச்சூர்ணம்
(4). கலவை ருபார்ப் சூர்ணம்

} இவைகளை புஸ்தகத்தில்பார்வையிட்டுசெய்துக் கொடுக்கபேதியாகும்.

உப்புகள்:—

(1). எப்சன் ஸால்ட்
(2). ரோசல் ஸால்ட்
(3). பாஸ்பேட் ஆப் சோடா

} இவைகளில் எதையாகிலும்அளவை புஸ்தகத்தில் பார்வையிட்டு அனுபானத்தில் கொடுக்க செவ்வையாய் பேதியாகும்.

எண்ணெய்கள்:—

(1). நேர்வாள எண்ணெய் } ½-1 துளி சர்க்கரையில் அவசியமாய் இருந்தால் கொடுக்கலாம். அதிகமாய் பேதியாகும்.

(2). சிற்றுமணக்கெண்ணெய் } கசாயம் முதலிய அனுபானத்தில்கொடுக்க பேதி செவ்வையாய்ஆகும்.

(3). கணத்தெண்ணெய் } இப்புஸ்தகத்தில் பார்வையிட்டு செய்து கொடுக்க பேதியாகும்.

**குழம்புகள்:—**

(1). கும்மட்டிக்காய்க்குழம்பு
(2). விங்கக்குழம்பு

} இவைகளில் எதையாகிலும் இப்புஸ்தகத்தில்பார்வையிட்டு செய்துக்கொடுக்க பேதியாகும்.

**மிக்ஸ்சேர் (mixtures) கள்:—**

(1). பைசல்பேட் ஆப் பொட்டாஸ், கார்போனெட் ஆப் சோடா வகைக்கு ஒரு கிராம், வெவ்வேறாக 2 அவுன்ஸ் ஜலத்தில் கரைத்து சேர்க்க பொங்கும்போதுச்சாப்பிடவும். மலத்தை உதைக்கும், உஷ்ணத்தைத்தணிக்கும். (Dr. Barker)

(2). மாக்னிஷியா கார்போனெட் 40 கிறேன்ஸ், ரேவல்சின்னி (Rhubarb) 15 கிறேன்ஸ், சுக்கு தூள் 5 கிறேன்ஸ், இவைகளைச்சேர்த்துக்கொடுக்க மலம் இறங்கும்.

(3). ரோஜாப்பூக்கஷாயம் 5½ அவுன்ஸ், எப்ஸன் ஸால்ட 6 கிராம், எலுமிச்சம்பழப்பாணிதம் ½ அவுன்ஸ், இவைகளைச்சேர்த்து 4-8 கிராம் கொடுக்க மலம் இறங்கும்.

(4.) சீமை இந்துப்பு (Epson salt) 6 கிராம், மேனு 2 கிராம், வெந்நீர் 1½ அவுன்ஸ் இவைகளைச் சேர்த்துக்கொடுக்க செவ்வையாய் பேதியாகும்.

**துவையல்கள்:—**

சரக்கொன்றைப்புளி, மொளகாய், உப்பு, புளி, இஞ்சி, பெருங்காயம் இவைகளைச்சேர்த்து துவையல்செய்து இராச்சாப்பாட்டுடன் 1-2 கொட்டைப்பாக்கு அளவுச்சாப்பிட காலையில் மலம் தாராளமாயிறங்கும்.

**லேகியங்கள்:—**

(1). கடுக்காய்பிஞ்சி, சூரத்துக்கடுக்காய், சூரத்துக்கறுப்பு உப்பு, சுக்கு, சோம்பு, தான்றிக்காய், நெல்லிவற்றல் வகைக்கு பலம் 1, கடுக்காய் நிலாவரை வகைக்கு பலம் 2, கொத்தமல்லிவிதை பலம் 3 இவைகளை சூர்ணித்து வஸ்திரகாயஞ்செய்து அத்துடன் தேன் தேவையானதுச்சேர்த்து லேகியமாக்கி 1-3 கொட்டைப்பாக்களவு படுக்கைக்கு போகுமுன் தினம் சாப்பிட காலையில் மலம் தாராளமாய் இறங்கும்.

(2). சிற்றாமணக்கெண்ணெய் படி 1 இதில் பேயன்வாழைப்பழம் 30 கற்கண்டுத் தூள், சீரகத்தூள் வகைக்கு சேர் ½ சேர்த்து ஒரு பீங்கானில் போட்டு வெய்யிலில் 8 நாள் வைத்து லேகியபதமாக்கி காலையில் 2-4 பாக்களவுச்சாப்பிட்டுவர மலம் இறங்கும். உஷ்ணம் போகும்

☞ இன்னும் அநேக மருந்துகள் 14-வது, 16-வது அத்தியாயங்களில் காண்க.

# 55-வது அத்தியாயம்.

## பிளாஸ்திரிகள்.

இங்கிலிஷ், யுனானி, கர்நாடக கிரந்தங்களில் சொல்லிய பிளாஸ்திரிகளில் மேகரணம், திப்பட்டரணம், ஆறுதரணம், கத்திகாயம், முதலிய பற்பல ரணங்களை ஆற்றவும்; மேக கட்டிகள், வாயுகட்டிகள் முதலியவைகளைக் கரைக்கவும் கைகண்டபிளாஸ்திரிகளை இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

### ஈயப்பிளாஸ்திரி-(கர்நாடகமுறை).

ஈயச்செந்தூரம் பலம் 1, ரசகர்ப்பூரம் விரா. ½ (ந), மிருதார்சிங்கு விரா ½, முத்துவெள்ளை விரா 1, நல்லெண்ணெய் சேர் ¼ (வ), இவைகளைச் சேர்த்துக் கறுப்பு நிறம் வரும் பதத்தில் காய்ச்சி எடுத்து ஒரு தகரடப்பாவில் போட்டுவைத்துக்கொண்டு கொஞ்சம் எடுத்து துணியில் தடவி போட ரணம் ஆறும்.

### ரசப்பிளாஸ்திரி-Mercury plaster.

இங்கிலீஷ்முறை

ஒரு அவுன்ஸ் ஆலிவ் எண்ணெயில் கந்தகம் 64 கிறேன்ஸ் சேர்த்து அரைத்து பிறகு 24 அவுன்ஸ் ரசத்தைச் சேர்த்து, ரசஅணுக்கள் கண்களுக்குத் தெரியாமல் போகிறவரையில் அரைத்து அத்துடன் 8 பவுண்டு மிருதார்சிங்கு பிளாஸ்திரியை சிறு தீயிட்டு உருக்கி கொஞ்சம் கொஞ்சமாய் சேர்த்துக் கொள்ளவேண்டியது.

செய்கை— உஷ்ணகாரி, சோபநாசகாரி.

உபயோகம்—இதை துணி அல்லது தோலின்மேல் தடவி கட்டிகள் தடிப்புகள், வீக்கங்கள் இவைகளுக்கு போடக்கரைத்துவிடும்.

### மிருதார்சிங்கு பிளாஸ்திரி-Lead plaster

ஒரு பவுண்டு மிருதார்சிங்குத் தூளை, 8 பைண்ட ஆலிவ் எண்ணெய், 2 பைண்ட ஜலம் இவைகளுடன் சேர்த்துசிறு தீயிட்டு எரித்து இடைவிடாமல் துழவிகொண்டே இருக்கவும். பிளாஸ்திரி பதத்துக்கு வரும்வரையில் ஜலம்சுண்டிப்போனால் தீ நீரை கொஞ்சம் சேர்த்துக்கொள்ளவேண்டியது.

உபயோகம்— இதை கத்திவெட்டு காயத்தின் இரண்டு பிரிவுகள் சேர்க்கவும், கட்டிகளை கரைக்கவும் உபயோகிக்கப்படும்.

## ஸ்டிகிங் பிளாஸ்திரி-Sticking plaster

3 பவுன்ட் மிருதார்சிங்கு பிளாஸ்திரியை உருக்கி, அத்துடன் ½ (ற), பவுன்ட், ரோஜனத்தையும் உருக்கி சேர்த்துக்கொள்ளவேண்டியது.

உபயோகம்— இது சருமத்தை உஷ்ணிப்பதால் சில வியாதிகளுக்கு உபயோகிக்கலாகாது. இதை துணியில் தடவி காயங்கள், கட்டிகள், ரணம் இவைகளுக்குபோடப்படும்.

## ஐயோடைட் ஆப் போடாஸ்ஷியம் பிளாஸ்திரி. Iodide of pottassium plaster.

3 அவுன்ஸ் சாம்பிருணியும், 3 திராம் மெழுகும் சேர்த்து உருக்கி அதில் ½ (ற), அவுன்ஸ் ஐயோடைட் ஆப் போடாஸ்ஷியத்தை 1 திராம் ஆலிவ் எண்ணெயில் அரைத்து சேர்த்து அனலை விட்டிறக்கி குளிருகிற வரையில் துழாவவேண்டியது.

உபயோகம்— இதை துணியில் தடவி வீக்கம், கட்டிகள் இவைகளுக்கு போடக்கரையும்.

## கால்பேனம் பிளாஸ்திரி-Galbanum plaster.

4 அவுன்ஸ் கால்பேனம், 4 திராம் டர்பன்டயின் இவைகளைச் சேர்த்து உருக்கி அத்துடன் 12 திராம் குந்திரகம் பிசின், 18 அவுன்ஸ் மிருதார்சிங்குப் பிளாஸ்திரி இவைகளை முதலில் சிறு தீயால் உருக்கி சேர்த்துக்கொள்ளவும்.

உபயோகம் இதை துணியில் தடவிக் கட்டிகளுக்குப்போட கட்டிகள் கரையும்.

## மடல்துத்தச்செந்தூரப் பிளாஸ்திரி. Calamine plaster.

15 அவுன்ஸ் மெழுகை உருக்கி, 2 பையின்ட் ஆலிவ் எண்ணெயைச் சேர்த்து காய்ச்சி தீயை விட்டிறக்கி இறுகிபோகிற பதத்தில் 15 அவுன்ஸ் மடல்துத்தச் செந்தூரத்தைச் சேர்த்து குளிர்ச்சியாகிற வரையில் விடாமல் துழவ வேண்டியது.

உபயோகம்—இதை துணியில் தடவி அக்கினி ரணம், தோலெரிவு, ரணங்கள் முதலியவைகளுக்கு போட குணமாகும்.

## எரிவண்டுப் பிளாஸ்திரி-Cantharidis plaster

12 அவுன்ஸ் பன்றிநெய், 15 அவுன்ஸ் மெழுகு, 15 அவுன்ஸ் ஆட்டுக் கொழுப்பு, இவைகளை சேர்த்து உருக்கி, 6 அவுன்ஸ் ரோஜனத்தை முன்ன

தாகவே உருக்கி சேர்த்து நெருப்பை விட்டு இறக்கி உறைந்துபோக ஆரம்பிக்கிற தருணத்தில் 2 பவுண்ட் எரிவண்டுச் சூரணத்தைப்போட்டு மிஸ்ரித்துக் கொள்ளவேண்டியது.

உபயோகம்— இதை கொப்புளம் எழுப்பி புண்ணுக்க உபயோகிக்கப்படும். சில வேளை புண்ணுக்கவேண்டிய இடத்தில் கடுகை அரைத்து போட்டு பிறகு இதைப் போடவேண்டியதாய இருக்கும்.

---

## 56-வது அத்தியாயம்.

---

### தூபங்கள்.

நோயாளிகள் படுத்திருக்கும் அறை முதலிய இடங்களிலுள்ள நாற்றங்களை வெளியாக்க தூபங்கள் போடப்படும். சூர்ணரூபமாயும் வத்திரூபமாயும் இருக்கின்றவைகள் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

☞ இந்த தூபங்கள் சுவாமிகளுக்கும், சுபகாரியங்களுக்கும் அதிவிசேஷமாய் உபயோகப்படுத்திவருகிறார்கள்.

### கோஹலாப்பூர்தேசத்திய தசாங்குச் சூர்ணம்.

அகிற்கட்டை, மலாகா சந்தனக்கட்டை, தேவதாருக்கட்டை, அனுசிப்பூ, சன்னலவங்கப்பட்டை, ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி, உலர்ந்த மருக்கொழுந்து, வெட்டிவேர், கல்பாசி, கர்ப்பூரம், கார்போகரிசி, கோரைக்கிழங்கு, சாம்பிராணி, மட்டிப்பால், மகளம்பூ, கருவாப்பட்டை, பச்சைஇலை, பூசாந்திப்பட்டை, கிளியூரம்பட்டை, பலசைமஞ்சள், பூலாக்கிழங்கு, சடாமாஞ்சி, தாளிசப்பத்திரி, லவங்கப்பத்திரி, கோஷ்டம், சித்தரத்தை, அதிமதுரம், லவங்கப்பட்டை, பிசின்பட்டை, தேன், பசுவின்நெய், சோம்பு, நன்னாரிவேர், விலாமிச்சுவேர், சிறுநாகப்பூ, கிரயாசிப்பால், குங்கிலு, சண்பகமொக்கு, இவைகள் எல்லாம் சமமாக சூர்ணித்து ஒருஜாடியில்போட்டுவைத்துக்கொண்டு நோயாளி படுக்கையின் இடத்தில் நெருப்பின் மேல் போடப் புகைந்து நாற்றத்தை போக்கும். இந்த தசாங்கு சுவாமிகளுக்கும் விசேஷமாய் உபயோகப்படுத்திவருகிறார்கள்.

### பண்டரிப்பூர் தேசத்திய தசாங்குச்சூர்ணம்.

பூலாக்கிழங்கு, தேவதாரக்கட்டை, அகிற்கட்டை, அகருக்கட்டை, கருங்குங்லியம், தாளிசப்பத்திரி, நன்னாரிவேர், சாம்பிராணி, வகைக்குப் பலம் 2, மலாகா சந்தனக்கட்டை பலம் 6, பூஞ்சாந்துப்பட்டை பலம் 3,

கிளியூரம்பட்டை, கோஷ்டம், பச்சை இலை, வகைக்குபலம் 1½, கொம்பரக்கு, கல்பாசி, சண்பகமொக்கு, மட்டிப்பால், அனுசிப்பூ, குங்கிலு, நிரயாசிப்பால், வெட்டிவேர், விலாமிச்சுவேர், லவங்கப்பத்திரி, சடாமாஞ்சி, சாதிக்காய் வகைக்கு பலம் 1, உலர்ந்த மருக்கொழுந்து, சிறுநாகப்பூ, கிராம்பு வகைக்கு பலம் ¾ (ஞு), சித்தரத்தை, கோரைக்கிழங்கு, மல்லி, ஏலம், கஸ்தூரிமஞ்சள், சோம்பு, வகைக்கு பலம் ½, தேன் பலம் 1¼ (கவ), வெல்லசர்க்கரை பலம் 2, பசும் நெய் பலம் 2, இவைகள் எல்லாம் சூர்ணித்து ஷை நெய்யில் கலந்து ஜாடியில் போட்டு வைத்துக்கொண்டு மேல் சொல்லியபடி உபயோகப்படுத்திக்கொள்ளவும்.

## காசிதேசத்திய தசாங்குச்சூர்ணம்.

பூலாக்கிழங்கு பலம் 1½ (கற), அகிற்கட்டை, தேவதாருக்கட்டை, மலாக்காசந்தனக்கட்டை, சருங்குங்கிலியம், வகைக்கு பலம் 2, கிளியூரம்பட்டை, மட்டிப்பால், நிரயாசிப்பால், பெருஞ்சீரகம், சமுத்திராபச்சை, வகைக்கு பலம் 1, கோஷ்டம், ஏலம், சிறுநாகப்பூ, சன்னலவங்கப்பட்டை, தாளிசபத்திரி, சடாமாஞ்சில், கஸ்தூரிமஞ்சள், மருக்கொழுந்து, சண்பகமொக்கு, சித்தரத்தை, மல்லி, விலாமிச்சுவேர், நன்னாரிவேர், அனுசிப்பூ, நாகணம், புனுகுச்சட்டம், வெற்றிவேர், வகைக்குப் பலம் ½ (ற), பசும்நெய் பலம் 2, இவைகளில் நாகணம், அனுசிப்பூ, சிறுநாகப்பூ, சண்பகப்பூ, பெருஞ்சீரகம், இவைகள் நெய்யால் கொஞ்சம் வறுத்து சூர்ணித்து அத்துடன் மற்ற சரக்குகளை உலர்த்தி சூர்ணித்து சேர்த்து ஷை நெய்யில் மிஸ்ரித்து ஜாடியில் போட்டு வைத்துக்கொண்டு மேல் சொல்லியபடி உபயோகித்துக்கொள்க.

## லக்னோதேசத்திய தூபவத்தி.

1. பூஞ்சாந்திப்பட்டை, லவங்கம், மலாக்கா சந்தனம், நிரயாசிப்பால் வகைக்கு பலம் 1½ (கற), மட்டிப்பால் பலம் 2, சாம்பிராணி, அகருக்கட்டை வகைக்கு பலம் 3, கல்பாசி, லவங்கப்பட்டை, கோஷ்டம், சடாமாஞ்சில், வெட்டிவேர், தேவதாருக்கட்டை, கற்கண்டு, தேன் வகைக்குப் பலம் 1, தாளிசபத்திரி, சன்னலவங்கப்பட்டை, அகிற்கட்டை வகைக்குப்பலம் ¾ (ஞு), கிளியூரம்பட்டை, லவங்கபத்திரி, நன்னாரிவேர், விலாமிச்சுவேர், அதிமதுரம், சிறுநாகப்பூ, வகைக்குப்பலம் ½, பச்சையிலை, சித்தரத்தை, மல்லி, வகைக்குப்பலம் ¼ (வ) இவைகள் எல்லாம் பொடித்து அரைத்துக்கொண்டு, மறுபடியும் இரண்டாந்தடவை அரைக்கையில் பிசின் பட்டை பலம் 1 சேர்த்து அரைத்துக்கொள்க. பிறகு அத்துடன் புனுகுச்சட்டம், பூலாக்கிழங்கு, பூர்ஜப்பத்திரி, கௌலம் வகைக்கு விராகனிடை 1, கூகைநீர் விராகனிடை ½, பச்சைக்கர்ப்பூரம், கஸ்

தூரி வகைக்கு விராகனிடை ⅛ (ஞு), இவைகளை மைபோலரைத்துச் சேர்த்து மிஸ்ரித்து கொண்டு, பிசின்பட்டை ஒரு பாத்திரத்தில் ஊறவைத்து அந்த ஜலத்தை மூங்கிலின் சீவினகுச்சிகளுக்குத் தடவி பின்பு அரைத்த மொத்தையில் கொஞ்சம் கொஞ்சமாக அப்பி பலகையின்மேல் உருட்டி வத்திகளாக்கி உலர்த்தி கொளுத்திவைக்க நாற்றத்தைப் போக்கும்.

2. மலாகா சந்தனக்கட்டை பலம் 5, சாம்பிராணி பலம் 2½, வெல்லசர்க்கரை பலம் 2¼ (2வ), பூஞ்சாந்திப்பட்டை, கோஷ்டம், கற்கண்டு, சடாமாஞ்சில், விளாம்பிசின் வகைக்குப்பலம் 2, காரப்பொகரிசி, பலம் 1¾ (கஙு), தேன், மட்டிப்பால், நீரயாசிப்பால், வகைக்குப் பலம் 1¼ (கவ), தாளிசப்பத்திரி, விலாமிச்சவேர், இலியூரம்பட்டை, கஸ்தூரி மஞ்சள், சிறுநாகப்பூ, அகிற்கட்டை, தேவதாருக்கட்டை, பூலாக்கிழங்கு, நன்னாரிவேர், பச்சையிலை, லவங்கப்பட்டை, வெட்டிவேர், சண்பகமொக்கு, கோரைக்கிழங்கு, வகைக்கு பலம் 1, கிராமபு பலம் ¾ (ஙு), சாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலம் வகைக்குப் பலம் ½ (௨) இவைகளை எல்லாம் சூர்ணித்து மேல் சொல்லியபடி செய்துக்கொள்க. வத்திகளைக் கொளுத்திவைக்க நாற்றத்தைப் போக்கும்.

☞ இந்த வத்திகள் சுவாமிகளுக்கும் அதி விசேஷமாய் உபயோகித்து வருகிறார்கள்.

---

## 57-வது அத்தியாயம்.

---

### * லேபனங்கள்.

சில மனிதர்களின் தேகத்தில் கற்றாழை நாற்றம், கருவாடு நாற்றம் வீசுவதால், உள்ளுக்கு மருந்துகளைச் சாப்பிடுவதுந் தவிர மேலுக்கு லேபனஞ்செய்வதில் சகுணத்தைத் தருவதால் அவைகள் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

### புதுக்கோட்டை சந்தனபில்லை.

1. தாளிசப்பத்திரி பலம் 32, பூலாக்கிழங்கு பலம் 24, சடாமாஞ்சில், இலியூரம்பட்டை, வகைக்குப்பலம் 16, கோஷ்டம், சோம்பு. வேர், சஹ-பலம், நாகணம், வகைக்குப்பலம் 8, சாதிக்காய்.

---

* லேபனம் என்பது வாசனத் திரவ்வியங்களைச் சந்தனம் (இதற்கு சந்தன பில்லைகள் என்று ெ கரைத்து உடம்பில் பூசக்கொள்வதாம்.

டை,சித்தரத்தை, கோரைக் கிழங்கு, வகைக்குப் பலம் 5, இவைகளை பொன் நிறமாய் வறுத்து சூர்ணித்து அத்துடன் ஏலம், கிராம்பு, பச்சை யிலை புனுகுச் செக்கை, வகைக்குப்பலம் 8, குங்குமப்பூ, கோரோசனை வகைக்குப்பலம் 10, பச்சைக்கர்ப்பூரம் பலம் 4, இவைகளை உலர்த்தி சூர்ணித்து சேர்த்து மைபோல் பன்னீரால் அரைத்து அத்துடன் 40 பலம் மலாகா சந்தனக்கட்டை அரைத்து சேர்த்து, பிறகு எல்லாம் சேர்த்து அரைத்து அத்துடன் சவ்வாது விராகனிடை 2 சேர்த்து மிஸ்ரித்து பில்லைகளாக அச்சியால் தட்டி உலர்த்தி ஒரு சீசாவில் போட்டு வைத்துக்கொண்டு தினம் 2 தடவை கொஞ்சம் ஜலத்தில் சேர்த்து உடம்பில் பூசிக்கொள்ள கற்றாழை நாற்றம், கருவாடுநாற்றம் குணமாகும். ஸ்திரீபோக விருப்பம் உண்டாகும்.

2. பச்சைகர்ப்பூரம், குங்குமப்பூ, வகைக்குவிராகனிடை $\frac{3}{4}$ (ஙு), ஏலம், கிராம்பு, சாதிப்பத்திரி, வகைக்கு விராகனிடை $\frac{1}{2}$ (ஹ), சாதிக்காய், விராகனிடை 1, புனுகுச்சட்டம், குலாபு அத்தர், சாம்பிராணித்தயிலம் வகைக்கு விராகனிடை 3, பன்னீர் விராகனிடை 6, கியாசிப்பால் விராகனிடை 2, மட்டிப்பால் விராகனிடை $2\frac{1}{2}$ சந்தநாதி அத்தர் விராகனிடை 5, சவ்வாது விராகனிடை $\frac{1}{2}$, மலாகா சந்தணக்கட்டை விராகனிடை 16, இவைகளில் ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி, இந்நான்கும் ஜலத்தால் மைபோலரைத்து பிறகு அத்துடன் சந்தனக்கட்டை ஜலத்தால் அரைத்து சேர்த்து, பிறகு மற்றவைகளும் சேர்த்து மைபோல் அரைத்து அச்சியால பில்லைகளாக்கி உலர்த்தி, கொஞ்சம் ஜலத்தில் கரைத்து உடம்பில் பூசிவர ஷை வியாதிகள் தீரும்.

☞ இந்த சந்தன பில்லைகள் சுபகாரியங்களுக்கு அதி விசேஷமாக உபயோகித்து வருகிறார்கள்.

---

## 58-வது அத்தியாயம்.

---

இதுவரையிலும் அவுஷதங்களின் குணங்கள், செய்கைகள், ...வைகளால் குணமாகும் ரோகங்கள் முதலிய அநேக விஷயங் சொல்லலாயிற்று. இனி, ரோகங்களின் வகுப்புகளும், ...ம், அவைகள் குணமாவதற்கு அவுஷதங்களும் இந்த ...ல் சொல்லப்படும்.

...ள லக்ஷணங்களால் இன்னரோகம் என்றும், இன் ...ர், இன்ன மருந்தை கொடுத்து அனுகூலப்படு

த்தலாமென்றும் நிகழியிக்க "ரோகநிர்ணய சாரம்' என்னும் புஸ்தகத்தில் பார்வையிடவும்.

## குழந்தைகளின் ரோகங்களுக்கு அவுஷதங்கள்

**சுரமாந்தத்திற்கு:—**

(1). பாலசஞ்சிவி மாத்திரை
(2). கோரோசன மாத்திரை
(3). பாலவிநோத சஞ்சிவி மாத்திரை
(4). கஸ்தூரிமாத்திரை
(5). மஹாரசபஸ்மம்
(6). சுவர்ணாஜத பஸ்மம்
(7). வீரபத்திரசிந்தாமணி

இவைகள் இந்த புஸ்தகத்தில் சொல்லியபடி செய்துக்கொடுக்க குணமாகும்.

(8). குடிவிளா இலை, வெள்ளைப்பூண்டு, அவுரி இலை இவைகளை வகைக்கு 1 அவுன்ஸ் வெதுப்பிக் கசாயஞ் செய்து ஒரு பாலடை வீதம் கொடுத்துவர குணமாகும்.

**ஊதுமாந்தத்திற்கு:—**

(1). வேலிப்பருத்தியிலையை வதக்கி எடுத்தச் சாற்றுடன் சீரகம், கடுகுரோகிணி சமமாக சேர்த்து அரைத்துப்பிழிந்தச்சாற்றில் ஒரு பாலடை வீதம் முலைப்பாலில் கொடுக்க குணமாகும்.

(2). ரசமாத்திரை இப்புஸ்தகத்தில் சொல்லியபடி செய்துக்கொடுக்க குணமாகும்.

**விஷமாந்தத்திற்கு:—**

நாணுவேர், நொச்சிவேர், வேளைவேர், ஓமம், பொடுதலை, வெள்ளைப்பூண்டு, வசம்பு இவைகள் வகைக்கு விராகனிடை 1 நொறுக்கி வெதுப்பி கசாயஞ்செய்து ஒரு பாலடை வீதம் கொடுக்க குணமாகும்.

**நீர்மாந்தத்திற்கு:—**

மூக்கரட்டை, வெங்காயம் இவைகளின்சாறு வகைக்கு படி $\frac{1}{8}$ (ஞு), ஆமணக்கெண்ணெய் படி $\frac{1}{8}$ (ஞு) சேர்த்துக்காய்ச்சி வடித்து ஒரு பாலடை வீதம் கொடுத்துவர குணமாகும்.

**பால்மாந்தத்திற்கு:—**

வெள்ளைப்பூண்டு, மிளகு, வசம்பு, இந்துப்பு, பொடுதலைக்காய் இவைகள் வகைக்கு ஒரு திராம் நொறுக்கி வெதுப்பிக் கசாயஞ்செய்து 1 பாலடை வீதம் கொடுத்துவர குணமாகும்.

**செரியாமாந்தத்திற்கு:—**

வசம்பு, சடாமாஞ்சில், ஓமம், சுக்கு, மிளகு, வெள்ளைப்பூண்டு, கருஞ்சீரகம், ஆமை ஓடு, இவைகள் சமமாக நொறுக்கி கசாயஞ்செய்து ஒரு பாலடை வீதம் கொடுத்துவர குணமாகும்.

**சுழிமாந்தத்திற்கு:—**

(1) இண்டின்சாறு, வெங்காயச்சாறு, ஆமணக்கெண்ணெய் வகைக்கு 2 அவுன்ஸ் சேர்த்து எரித்து வடித்து ஒரு பாலடை வீதம் கொடுத்துவர குணமாகும்.

(2) சுக்கு, கழற்சிப்பருப்பு, மஞ்சள், ஒற்றலைப்பூண்டு, பெருங்காயம் வகைக்கு விராகனிடை 1, சேர்த்து முலைப்பாலால் அரைத்து ½ சேர் வேப்பெண்ணெயில் கலந்து எரித்து வடித்து ஒரு விரா. வீதம் முலைப்பாலில் சேர்த்துக்கொடுத்துவர குணமாகும்.

**தலைமாந்தத்திற்கு:—**

வெள்ளறுகு, வெதுப்படக்கி, வேலிப்பருத்தி, பெருந்தும்பை இவைகளின்சாறு வகைக்கு1 அவுன்ஸ் சேர்த்து அதில் திப்பிலி, வசம்பு, பூண்டு, சதகுப்பை, தேசாவரம், வகைக்கு ஒரு திராம் அரைத்துக்கரைத்து ஒரு பாலடை வீதம் கொடுத்துவர குணமாகும்.

☞ மேல் சொல்லிய 8 வித மாந்தரோகங்களைத்தவிர வயிறு உப்பினுல் உப்பு மாந்தமென்றும், மலங்கட்டினுல் கட்டுமாந்தமென்றும், கண் சொருகினுல் சொருகிமாந்த மென்றும், வாதமதிகமானுல் வாதமாந்த மென்றும் இவ்விதமாக பித்த மாந்தமென்றும், சிலேஷ்மமாந்த மென்றும், இழுப்பு மாந்தமென்றும், சந்நிபாதமாந்தமென்றும் பலவாறாக சொல்வார்கள். ஆகையால் ரோகங்களின் லக்ஷணங்களை அறிந்து மருந்துகளை சேர்த்துக்கொடுக்க வேண்டியது.

**மாந்தரோகங்கள் (8) க்கு:—**

(1). ரொசல் சால்ட்டு 10 கிறேன்ஸ், ரேவல்சின்னி 3—7 கிறென்ஸ் இவைகளைச்சேர்த்து காலையில்மாத்திரம் 15 நாள் ஜலத்தில் கொடுக்ககுணமாகும். (Dr. Fordyce).

(2). சீமைச்சுண்ணாம்புக் கலவைச்சூர்ணம் 18 கிறேன்ஸ், வறுத்தகார்பொனேட் சோடா 6 கிறேன்ஸ், விளாம்பிசின் 12 கிறேன்ஸ் இவைகளைச் சேர்த்து 6 பாகமாக்கி 3 மணிக்கு ஒருதரம் ஒரு பாகம் ஜலத்தில்கொடுக்க குணமாகும்.

(3). கிறேப்வுடர் 6 முதல் 9 கிறேன்ஸ், கலவை சீமை சுண்ணாம்பு 9 கிறேன்ஸ் இவைகளைச் சேர்த்து 3 பங்காக்கி ஒரு பங்குவீதம் ஜலத்தில் 3 தடவை தினம் கொடுக்க குணமாகும்.

(4). வல்லாரை, சீந்தில்தண்டு, கஞ்சாக்கோரை, துளசி, பிரமதண்டு, பழம்பாசி, குட்டிவிளா, வசம்பு, வெள்ளைப்பூண்டு, கடுகுரோகணி, வகைக்கு விராகனிடை 2 வீதம் பொடித்து 2¼ (உவ) படி ஆமணக்கெண்ணெயுடன் சேர்த்து எரித்து வடித்து ஒரு பாலடை வீதம் கொடுக்க குணமாகும்.

(3). முருங்கைப்பட்டைச்சாறு படி 2, நல்லெண்ணெய் படி 1, இவை களைச் சேர்த்து, அதில் வசம்பின் சாம்பல் விராகனிடை 5, வெள்ளைப்பூண்டு விராகனிடை 2, பசும்பாலாலரைத்துக் கரைத்து எரித்து வடித்து ஒரு பாலடைவீதம் கொடுக்க குணமாகும்.

மாந்தவலிப்புக்கு:—

(1). குப்பைமேனிச்சாறு, முடக்கொத்தான் இலைச்சாறு, மூக்கரச்சாரணை சமூலச்சாறு வகைக்கு ஒரு அவுன்ஸ், ஆமணக்கெண்ணெய் 1 அவுன்ஸ் சேர்த்து எரித்து வடித்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

(2). அப்பிரக கோரோசன மாத்திரை.
(3). சுவர்ண கோரோசன மாத்திரை.
} இப்புஸ்தகத்தில் சொல்லிய படி இவைகளைசெய்துக்கொடுக்க குணமாகும்.

குமரகண்டவலிப்புக்கு:—

நெய்கொட்டான் பழத்தெண்ணெய்யை இப்புஸ்தகத்தில் சொல்லிய படி செய்துக் கொடுக்க குணமாகும்.

வயிற்றுப் பொருமல், மார்தத்திற்கு:—

(1). குப்பைமேனிவேர்ப் பட்டை பலம் 4, வறுத்த ஓமம் விராகனிடை 2 இவைகள் ½ (உ) படி ஜலத்தில் போட்டுக் காய்ச்சி கசாயமாக்கி ஒரு பாலடைவீதம் கொடுக்க குணமாகும்.

(2). ஓமம், வசம்பு வகைக்கு 1 திராம் இளவறுப்பாய் வறுத்துச் சூர்ணித்து வேலிப்பருத்தியிலையை வதக்கி எடுத்தச் சாற்றில் சேர்த்து ஒரு பாலடைவீதம் கொடுக்க குணமாகும்.

கருங்கிரந்திக்கு:—

(1). ஆமணக்கெண்ணெய், கருங்கழுதை லத்திச்சாறு, அவுரிஇலைச்சாறு வகைக்கு படி ¼ (வ), சேர்த்து அதில் வசம்பு, வெள்ளைப்பூண்டு வகைக்கு விராகனிடை 2, பொடித்துபோட்டு எரித்துவடித்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

(2). ஒரு பாலடை கழுதைப் பாலில் 2-3துளி ஓணான் ரத்தத்தை விட்டு கொடுக்க குணமாகும். கடும்பத்தியமாயிருக்கவும்.

செங்கிரந்திக்கு:—

(1). முருங்கையிலைச்சாற்றை முறித்து ஒருபாலடைக் கொடுக்க தீரும்.

(2). முலைப்பாலில் கோரோசனையை உரைத்துக் கொடுக்க குணமாகும்.

கிரந்தி 9 க்கும்:—

செம்பருத்தி எண்ணெய்:— செம்பருத்திச்சாறு, தேங்காய்பால், ஆமணக்கெண்ணெய் வகைக்குப் படி 2, சேர்த்து அதில் சுக்கு, மிளகு திப்பிலி, ஏலம், கிராம்பு, சுத்திசெய்த ரசக்கர்ப்பூரம் வகைக்

டெ தேங்காய்பாலால் அரைத்துக் கரைத்து, எரித்து, வடித்து ஒரு விராகனிடைவீதம் கொடுத்துவர குணமாகும். இந்த எண்ணெய் சூலை 18க்கும் கொடுக்கலாம். நல்ல மருந்து.

**சுரத்துக்கு:—**

(1). கீழ்க்காய்நெல்லிவேர்ச்சாறு, பாதிரிவேர்ச்சாறு வகைக்கு ஒரு கிராம், முலைப்பால் 2 கிராம் சேர்த்துக் கொடுத்துவர குணமாகும்.

(2). கோரோசனமாத்திரை
(3). சுரபூபதி மாத்திரை
(4). பால சுரஹர மாத்திரை
(5). பாலவிநோத சஞ்சீவி மாத்திரை
(6). பாலசஞ்சீவி மாத்திரை
(7). பாலசுரகுடாரி மாத்திரை
(8). பாலசுர விஷஹரமாத்திரை

டெ மாத்திரைகள் கொடுக்கக்குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

**தோஷம் (9) க்கு:—**

மஞ்சள், வசம்பு, அதிமதுரம், முத்தகாசு, தேவதாரம், கடுக்காய் வகைக்கு விராகனிடை 4 சூர்ணித்து பொடுதலைச்சாற்றால் அரைத்து பருத்திவிதை அளவாக மாத்திரைகளாக்கி உலர்த்தி ஒரு மாத்திரைவீதம் தேன் அல்லது முலைப்பாலில் உரைத்துக் கொடுக்க குணமாகும்.

**கணம் (8) க்கு:—**

(1). கணத்தெண்ணெய், (2) வெங்காய எண்ணெய், (3) வெந்திய எண்ணெய், இந்த எண்ணெய்கள் கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் செய்முறைகள் பார்வையிடவும்.

**கணசுரத்துக்கு:—**

கணத்தெண்ணெய் கொடுக்க குணமாகும். செய்முறை இப்புத்தகத்தில் காண்க.

**அதிசாரத்திற்கு:—**

ஒருசாதிக்காயை துளைத்து 2 கிறேன்ஸ் அபினியை அதில் வைத்து மஞ்சளை அரைத்து அதற்கு கவசமிட்டு புடம்போட்டு வெந்தவுடனே மஞ்சளை நீக்கி முலைப்பாலால் ஒருமணிநேரமரைத்து கடுகுபிரமாணம் மாத்திரைகளாக்கி நிழலில் உலர்த்தி ஒருமாத்திரைவீதம் முலைப்பாலில் உரைத்துக் கொடுத்துவர குணமாகும். அதிகமாய் கொடுத்தால் மயக்கம் காணும், கெடுதி நேரிடும்.

**சீதபேதிக்கு:—**

(1). கட்டுவாதிச்சூர்ணம் கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

(2). வில்வப்பழத்து ஓடு சதையுடன் உலர்ந்ததை நொறுக்கி ஜலத்தில் போட்டுக் காய்ச்சின கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து [illegible]ாகும்.

(3). கார்ன் பிளோர் (Corn flour) கஞ்சியைக் கொடுக்க குணமாகும்.

(4). சோடா சூர்ணம், 5—10 கிறேன்ஸ் ஜலத்தில் கொடுத்துவர குணமாகும்.

(5). குளோரோடின் (Chlorodyne) 5—10 துளி ஜலத்திலாவது அல்லது காசிக்கட்டிக் கஷாயத்திலாவது கொடுக்க குணமாகும்.

கரப்பான் (18) க்கு :—

(1). கரப்பான் எண்ணெய், (2). உலகோத்தம செந்தூரம்—இவைகள் கொடுக்க குணமாகும். இப்புத்தகத்தில் செய்முறைகள் காண்க.

சிரங்குக்கு :—சந்தனம், சீர் வெட்டிமுத்து வகைக்கு விராகனிடை 5. ஜலத்தால் அரைத்து பூசிவர குணமாகும்.

கால்க்கடுவானுக்கும், மண்டைக்கடுவானுக்கும் :—

(1). ஆமணக்கெண்ணெய்படி $\frac{1}{4}$ (வ) யில் வெங்காயம், வசம்பு, இலுப்பைபட்டை, சதுரக்கள்ளிப்பட்டை, பாலைப்பட்டை, வகைக்கு விராகனிடை 5 ஜலத்தால் அரைத்துக் கரைத்து எரித்து வடித்து ஒரு பாலடை வீதம் 2 நாள் கொடுக்க குணமாகும்.

(2). செம்மரத்தை ஜலத்தால் உரைத்து தடவிவர குணமாகும்.

(3). கோவைக்கொடியை துண்டுகளாக்கி ஒவ்வொரு துண்டின் துவாரத்தில் ஊதினால் வரும் பாலே பூசிவர குணமாகும்.

குளிர்சுரத்திற்கு :—பாலசுரஹாரமாத்திரை இப்புஸ்தகத்தில் சொல்லியபடி செய்துக்கொடுக்க குணமாகும்.

சன்னிக்கும், மாந்தவலிப்புக்கும் :—

(1), பாலசுரஹாரமாத்திரை, (2), கஸ்தூரிமாத்திரை, (3), சுவர்ண கோரோசனமாத்திரை, (4), அப்பிரேககோரோசன மாத்திரை இவைகள் இப்புஸ்தகத்தில் பார்வையிட்டு செய்துக்கொடுக்க குணமாகும்.

இசிவுக்கு :—

(1). சுவர்ணகோரோசன மாத்திரை. (2). அப்பிரேக கோரோசனமாத்திரை. (3). மகாரசபஸ்மம். (4). கஸ்தூரிமாத்திரை. இவைகள் கொடுக்க குணமாகும். இப்புத்தகத்தில் பார்வையிட்டு செய்துக் கொடுக்கவும்.

வயிறுஉப்பல், மந்தத்துக்கு :—

உப்பை வறுத்துக்கொட்டின ஒரு சட்டியில் 5 விரா. வெள்ளைப்பூண்டைப் போட்டு வறுத்து சிவக்கும்போது $2\frac{1}{2}$ விரா. ஓமத்தைச்சேர்த்து வறுத்து ஜலஞ் சேர் $\frac{1}{2}$ (ரு), விட்டுக்காய்ச்சி $\frac{1}{4}$ (வ) சேராக்கி, அதில் $\frac{1}{4}$ (வ) விரா. பெருங்காயத்தைச் சேர்த்து 2—3 பாலடை வீதம் கொடுத்துவர குணமாகும்.

வயிற்றுப்பலுக்கு :—

நுணுயிலை ஒருபிடி, ஓமம், மிளகு, சுக்கு, வேப்பிலை வகைக்கு விரா. 2 இவைகளில் நுணுயிலையும் வேப்பிலையும் ஒரு சட்டியில் போட்டு வறுத்து சிவக்கும்போது மற்றவைகள் பொடித்துப்போட்டு ஒரு சேர் ஜலமிட்டுக்காய்ச்சி ¼ (வ) சேராக்கி அதில் 4 பாலடை வீதம் கொடுத்துவரத்தீரும்.

தோப்புள்புண்ணுக்கு :—

வறுத்த சீனுகாரத்தை தூளாக்கி மேல்போட்டுவர குணமாகும்.

இருமலுக்கும் - ரத்தவிருத்திக்கும்.

¼ (வ) படி கோதுமையை ஒருபடி ஜலத்தில் ஒரு நாள் ஊறவைத்து மைபோல் அரைத்து அந்த ஜலத்தில் கரைத்து வடித்துக்காய்ச்சி ¼ (வ) சேராக்கி சர்க்கரை (சீனி) சேர் 1, சேர்த்து சுண்டக்காய்ச்சி புன்னைக்காய் அளவு தினம் 2 தடவைக் கொடுத்துவர குணமாகும்.

கபரோகங்களுக்கு :—

அப்பிரேக கோரோசனை மாத்திரை இப்புத்தகத்தில் சொல்லியபடி செய்துக் கொடுக்க குணமாகும்.

வயிற்றில் எண்ணெய் தங்கினால்—

(1). வெந்தியமும் ஜலமும் சேர்த்து கசாயமிட்டு கொடுக்க குணமாகும்.

(2). ஆவாரை வேரும் ஜலமும் சேர்த்து கசாயமிட்டு கொடுக்க தீரும்.

(3). ஆமணக்கு வேரும் ஜலமும் சேர்த்து கசாயமிட்டு கொடுக்க தீரும்.

(4). நாயுருவி வேரும் ஜலமும் சேர்த்து கசாயமிட்டு கொடுக்க தீரும்.

சாம்பல், மண், சாப்பிட்டால்—

(1). கத்தரிக்காய் சாற்றில் பெருங்காயத்தைச்சேர்த்து ஒரு பாலடை வீதம் கொடுத்துவர தீரும்.

(2). முள்ளங்கிச்சாற்றில் பெருங்காயத்தைச் சேர்த்துக்கொடுக்க தீரும்.

(3). எருமைச்சாணியை ஒரு துணியில்போட்டு பிழிந்து ஒரு பாலடை வீதம் கொடுத்துவரத் தீரும்.

பால் உண்ணாவிடில்—

அதிமதுரத்தை முலைப்பாலால் உரைத்து முலைக்காம்புக்குத்தடவி வாயில் வைத்துக்குடிக்கச் செய்ய பால் குடிக்கும்.

குடித்தபாலை கக்கினால்—

வெள்ளைப்பூண்டும் ஓமமும் வெதுப்பி கசாயஞ்செய்துக் கொடுத்துவர குணமாகும்.

**வாந்தியை நீங்க—**

நன்னாரிவேர்ப்பட்டைச்சாற்றில் மயில் இறகு சாம்பல் அல்லது மிளகு, வசம்பு இவைகளின் சாம்பலை சேர்த்துக்கொடுக்க குணமாகும்.

**ஜலுப்புக்கு:—**

(1). தூதுளைச்சாறு ஒரு பாலடை உள்ளுக்குக் கொடுக்கத்தீரும்.

(2). துளசியிலைச் சாறு ஒரு பாலடை உள்ளுக்குக் கொடுக்கத் தீரும்.

(3). வெற்றிலைச் சாற்றில் குங்குமம் சேர்த்துக் கொதிக்கவைத்து மூக்கு, புருவம் முதலிய இடங்களில் பற்றுப் போட குணமாகும்.

(4). சாதிக்காயை ஜலத்தில் உரைத்து சுடவைத்துப் பற்றுப்போட குணமாகும்.

(5). கோரோசன மாத்திரைக் கொடுக்க குணமாகும்.

**பேதியைநிற்க:—**

மரமஞ்சள், கடுக்காய்ப்பூ, அதிவிடையம், சிறுநாகப்பூ, போஸ்தக்காய் வகைக்கு பலம் 1, சடாமாஞ்சில் பலம் ¼ (வ) இவைகளைச்சூர்ணித்து ¼ படி கொதிக்கும் ஜலத்தில் போட்டு 2-3 மணிநேரம் ஊறவைத்து வடித்து 2 பாலடைவீதம் 5--6 மணிநேரத்துக்கு ஒரு தடவை கொடுத்துவர தீரும்.

**பேதிஉண்டாக:—**

(1). நாட்டுக்காட்டாமணக்குச் சாறு ஒருபாலடை கொடுக்க மலங்கழியும்.

(2). ரஸபஸ்மம் 1-2 கிரேன்ஸ் தேனில் கொடுத்து அதின்மேல் வெற்றிலைச் சாற்றில் கோரோசனை உரைத்துக் கொடுக்க மலங்கழியும்.

(3). சிற்றாமணக்கெண்ணெயும் முலைப்பாலும் சமமாக சேர்த்து மிஸ்ரித்துக்கொடுக்க மலம் இறங்கும்.

**பேதி, வாந்தி, வயிற்றுவலி, அஜீர்ணம், மாந்தம் இவைகளுக்கு:—**

ஓமத் தீநீர்-(Omum water)-ஓமத்தயிலம்-(Omum oil)—2 வீசை ஓமத்தை மெல்லியதுணியில் முடித்து அடியில் படாமல் வாலையில் தொங்கவைத்து 6 படி ஜலம் விட்டு எரித்து 4 படியாக்கி வடித்துக் கொள்ளவும். தீநீரின்மேல் தயிலம் மிதக்கும் கோழி இறகால் அதைசேகரித்துக் கொள்ளவும். ½ முதல் 1 அவுன்ஸ் ஓமத்தீநீரை ½ (ற)—1 அவுன்ஸ் ஜலத்தில் சேர்த்துக் கொடுக்கவும்; அல்லது 1 முதல் 2 துளி ஓமத்தயிலத்தை சர்க்கரையில் சேர்த்து கொடுக்க குணமாகும்.

**கக்குவானுக்கு:—**

(1). லகுகட்டுவாங்கமாத்திரை } இவைகளை இப்புஸ்தகத்தில் சொல்லி
(2). வியாக்கிரியாதி ரசாயனம் } யபடிசெய்துக் கொடுக்ககுணமாகும்

(3). மூன்று எலிச்சதை, வௌவால் சதை, நத்தை சதை, வேங்கைப்புலியின் கண்டத்தோல் இவைகளில் எதையாகிலும் பசும் நெய்யில் போட்டுக் காய்ச்சி வடித்த நெய் 3-4 விராகனிடை வீதம் கொடுத்து வர குணமாகும்.

(4). மிளகு, மயிலிறகு இவைகளின் சாம்பலை சமமாக சேர்த்து ½ விராகனிடை வீதம் பசும் நெய்யில் கொடுக்க குணமாகும்.

**வாய்ரணத்துக்கு:—**

(1). 20 கிறேன்ஸ் படிகாரத்தூள், 1 அவுன்ஸ் தேன் இவைகளைச்சேர்த்து காலை மாலை குழந்தையின் வாய் ரணத்துக்கு தடவிவர குணமாகும்.

(2). பசும் நெய்யில் கோரோசனை உரைத்து வாய் ரணத்துக்குத் தடவிவர குணமாகும்.

**நீர்க்கட்டுக்கு:—**

வெங்காரத்தைப் பொறித்து 1முதல் 5 கிறேன்ஸ் (வயதுக்குத்தக்கப்படி) மூலைப்பாலில் கொடுக்க குணமாகும்.

**நீர் அண்டத்திற்கு:—**

லைகர் அமோனிய அசிடேடிஸ் 2 அவுன்ஸ், நவச்சாரம் 1 திராம், ஜலம் 4 அவுன்ஸ், இவைகளைச் சேர்த்து அதில் துணியை நனைத்து மடித்து நீர் அண்டத்தின்மேல் போட்டு அடிக்கடி அதின் மேல் இந்தமருந்தைப்போட்டு ஈரம் காக்க குணமாகும். (Mr. Bransby Cooper)

**அண்டவிக்கத்திற்கு:—**

(1). நவக்ஷாரம் 1 அவுன்ஸ், இரட்டித்து வடித்த சாராயம் 1 அவுன்ஸ், ஜலம் 15 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து அதில் துணியை மடித்து நனைத்து நீர் அண்டம், கட்டி இவைகளின் மேல் போட்டு ஈரங்காக்க குணமாகும்.

(2). பத்திரக்காளிஎண்ணெய்:- ஒருபடி ஆமணக்கெண்ணெயில் கழற்சிப் பருப்பு பலம் 4, வெள்ளைப்பூண்டு பலம் 1, மிளகு, சுக்கு, வசம்பு பலம் ¼ (வ), நொச்சியிலை பலம் ½ (ஐ) இவைகளை பசும்பாலாலரைத்துக் கரைத்து எரித்து வடித்து ஒருபாலடை வீதம் 3 நாள்கொடுக்க குணமாகும்.

(3). சிற்றாமணக்கெண்ணெயும் சிற்றாமணக்கு இலையும் சேர்த்து வதக்கிக் கட்ட குணமாகும்.

(4). கழற்சிப்பருப்பு, சுக்கு, சாரணைவேர், முடக்கொத்தான்வேர் வகைக்கு 1 அவுன்ஸ் பொடித்து 12 அவுன்ஸ் ஜலத்தில் போட்டு 6 அவுன்ஸ் கசாயமாகும்படி எரித்து வடித்து ஒருபாலடை வீதம் தினம் 2 தடவை கொடுக்க குணமாகும்.

# ஸ்திரீகளுக்குக்காணும் ரோகங்களுக்கு அவுஷதங்கள்.

## மலட்டு ரோகங்களுக்கு அவுஷதங்கள்.

| புருஷ ஸ்திரீகள். | மலட்டுரோகங்களின் தொகைகள். | புருஷன் ஸ்திரீயுடன் போகஞ் செய்யுங்காலத்தில் ஸ்திரீக்கு காணும் ரோகங்களின் குறிகள். | ஸ்திரீயின் கருக்குழியில் உண்டாயிருக்கும் ரோகங்கள். | ரோகங்களை நிவர்த்தியாக்க மருந்துகள். |
|---|---|---|---|---|
| பெண்பால் | 1 | தலைநோவு ... ... | பாசி உண்டாயிருக்கிறது | இவ்வாறு ரோகங்களுக்கு ஸ்ரீதேவி எண்ணெய்ச்சாப்பிட்டால் குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க. |
| | 2 | சர்வாங்கநோவு .. | வாயு ஷை | |
| | 3 | நெஞ்சுவலி ... ... | சதை வளர்ந்திருக்கிறது | |
| | 4 | முதுகுநோவு... ... | கிருமிகள் உண்டாயிருக்கிறது | |
| | 5 | கண்டச்சதைநோவு .. | ரத்தங்கட்டியிருக்கிறது | |
| | 6 | ஏப்பங்காணுதல் .. | மாதத்துக் கொழுப்படைந்திருக்கிறது | |
| ஆண்பால் | 1 | விந்து இறுகப்பு இராது | | இப்படியான ரோகங்களுக்கும் இப்புஸ்தகத்தில் சொல்லிய தாதுபுஷ்டி லேகியங்களைச் சாப்பிட்டுவர தீரும். |
| | 2 | விந்து ஜலத்திலிட கரைந்து மிதக்கும் | | |
| | 3 | மூத்திரத்தில் நுரைகள் கட்டும் | | |

ஔஷதக்கட்டுக்கு:—

(1). அயச்செந்தூரம் (English—oxide of Iron) ½ (அ) திராம், வாலேந்திர பௌலம் 20 கிரேன்ஸ், சுக்குப் பாணிதம் தேவையானது இவைகளைச்சேர்த்து 18 மாத்திரைகளாக்கி 2-3 மாத்திரை வீதம் அந்திசந்தி கொடுத்துவர தீரும் (Mr. Savory).

(2). காட்டாமணக்குக்கிழங்கை அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர தீரும்.

(3). குருஞ்சாச்சாறும் பசும்பாலும் வகைக்கு ஒருபடி சேர்த்து ஒரு ஆழாக்கு வீதம் 3 நாள் காலையில் கொடுக்க குணமாகும்.

(4). ஏகாதசிருத்திர செந்தூரம்
(5). குமட்டிக்காய்க் குழம்பு
(6). ஸ்ரீதேவி எண்ணெய்
} இவைகளை செய்துக் கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

**சூதகத்தைக் கிரமமாக உண்டாக்க;—**

வெங்காரத்தூள் 15 கிறேன்ஸ், கிராம்புத்தயிலம் ஒருதுளி, வாலேந்திர போளம் 12 கிறேன்ஸ், குங்குமப்பூ 3 கிறேன்ஸ் இவைகளை சேர்த்து அரைத்து தினம் 1 அல்லது 2 தடவை கொடுக்க குணமாகும். (Dr. T. Fuller)

**கர்ப்பவெட்டைக்கு;—**

கணத்தெண்ணெய்க்கொடுக்க குணமாகும். செய்முறை இப்புஸ்தகத்தில் காண்க.

## கர்ப்ப ஸ்திரீகளுக்கு 10-மாதங்களில் வரும் கர்ப்ப வலிக்கு அவுஷதங்கள் அடியில் காண்க.

| அடியிற் கண்ட மாதங்களில் கர்ப்பம் வலித்தால் | அவுஷதங்கள் |
|---|---|
| 1-வது மாதத்தில் | தாமரைப்பூ, சந்தனம், விலாமிச்சவேர்வகைக்குவிரா. 2 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுக்க குணமாகும். |
| 2 வது ஷை | தக்கோலமும் தாமரைப்பூவும் வகைக்கு விரா. 5 சேர்த்து அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 3-வது ஷை | வெந்தாமரைப்பூ, செங்கழுநீர்கிழங்கு வகைக்கு விரா. 2 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 4-வது ஷை | நெய்தற்கிழங்கும் கோச்சிவேரும் வகைக்கு விரா. 3 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 5-வது ஷை | ஆம்பற பூவும் விலாமிச்சவேரும் வகைக்கு விரா. 3 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 6-வது ஷை | திப்பிலி, திராக்ஷை, நெய்தற்கிழங்கு வகைக்கு விரா. 2 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 7-வது ஷை | விலாமிச்சவேர், சந்தனம், தக்கொலம்வகைக்கு விரா. 1 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 8-வது ஷை | தாமரைப்பூ, நெய்தற்கிழங்கு வகைக்கு விரா. 2 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 9-வது ஷை | அரசம்பட்டை, மருதம்பட்டை வகைக்கு விரா. 3 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |
| 10-வது ஷை | சர்க்கரையும், இலுப்பைப்பூவும் வகைக்கு விரா. 2 அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுத்துவர குணமாகும். |

**சூதகவாயு, சூசிகாவாயு இவைகளுக்கு:—**

(1). குப்பைமேனி, பொற்றலைக்கரிப்பான், சிறுசிறுப்படை, நிலவாகைவேர் இவைகளை உலர்த்தி வகைக்கு விரா. 5 சேர்த்து சூர்ணித்து திரிக்கடிவீதம் தேனில் 20 நாள் கொடுக்க குணமாகும்.

(2) ஸ்ரீதேவி எண்ணெய் செய்துக்கொடுக்க குணமாகும்.

**சூதகவாயுவுக்கு:—**

(1). ஏகாதசிருத்திர செந்தூரம்.

(2). போஜனகுடாரி மாத்திரை.

(3). அகஸ்தியர் குழம்பு.

(4) ஸ்ரீதேவி எண்ணெய் இவைகள்க்கொடுக்க குணமாகும். இவைகளின் செய்முறைகள் இந்த புஸ்தகத்தில் காண்க.

**சூதகவலிக்கு:—**

(1) துத்தியிலை, மிளகு, வெள்ளைப்பூண்டு வகைக்கு பலம் 1, வசம்பு விரா. 1 இவைகளை ஜலமிட்டு அரைத்து 3 பங்காக்கி மாதாந்திர ருதுகாலமாகிய 3 நாளைக்கும் காலையில் ஒரு பாகம் கொடுக்க குணமாகும்.

(2). விருத்தி எண்ணெய்
(3). ஸ்ரீதேவி எண்ணெய்
(4). ரசலிங்க மெழுகு
(5). கும்மட்டிக்காய்க்குழம்பு
} இவைகளைக்கொடுக்க குணமாகும். இவைகளின் செய்முறைகள் இந்த புஸ்தகத்தில் காண்க.

**கர்ப்பசூலை (6), சூதகவலி, சூசிகாவாயு இவைகளுக்கு:—**

(1) கல்லுப்பு சேர் 4, ரசம் சேர் 1, இவைகளை வில்வயிலைச்சாற்றால் நாலு சாமம் அரைத்து உலர்த்தி குகையிலிட்டு உருக்கி எடுத்து அதை அந்தர தாமரையிலைச்சாற்றால் 4 சாமம் அரைத்து பில்லைதட்டி உலர்த்தி வரராகல் புடம்போட்டு எடுத்து ஒரு பணவிடை வீதம் தேனில் காலை மாலை 3 நாள் கொடுக்க குணமாகும்.

(2) ஸ்ரீதேவி எண்ணெய் செய்துக்கொடுக்க குணமாகும்.

**சூதக ஜன்னிக்கு:—**

(1) இங்கு நவக்ஷாரமது 5 திராம், கர்ப்பூர ஜலம் 5 அவுன்ஸ், குங்குமப்பூ 1½ (கற) கிறேன்ஸ், ஜலம் 3 திராம் இவைகளில் குங்குமப்பூவை ஜலத்தில் அரைத்து பின்பு எல்லாஞ்சேர்த்து தினம் 2 பெரியக்கரண்டிவீதம் கொடுத்துவர குணமாகும்.

(2) ஸ்ரீதேவி எண்ணெய்
(3) ஏகாதசிருத்திரசெந்தூரம்
} இவைகளைக்கொடுக்க குணமாகும். செய்முறை இப்புஸ்தகத்தில் காண்க.

**கர்ப்பஸ்திரீக்கு காணும் துவாலைக்கு:—**

நெய்தற்கிழங்கு, அதிமதுரம், சந்தனம், கன்னாரிவேர், வெள்ளிலோத்

கிராம் வகைக்கு விரா. ½ (ற) அரைத்து பச்சரிசி கழுநீரில் கொடுக்க குணமாகும்.

**ஷை துவாலையால்காணும் தாகம், மூர்ச்சைக்கு:—**

அரசு, ஆல், மா, அத்தி, இவைகளின் கொழுந்தை வகைக்கு 1 அவுன்ஸ் சேர்த்துக்கசாயம் செய்து ¼ (வ) சேர் வீதம் கொடுக்க குணமாகும்.

**கர்ப்பஸ்திரீயின் சுரத்துக்கு:—**

(1) சிற்றாமுட்டிவேர், பேராமுட்டிவேர், சீந்திற்கொடி, திப்பிலி, சுக்கு, நிலவேம்பு வகைக்கு விரா. 1, பொடித்துப்போட்டுக் கசாயம்செய்து ¼ (வ) சேர் வீதம் தினம் 2 தடவைக்கொடுத்துவர குணமாகும்.

(2) குவைனு பில்ஸ் (Quina Pills) கொடுக்க குணமாகும்.

இதின் செய்முறை இந்த புஸ்தகத்தில் காண்க.

**கர்ப்பஸ்திரீயின் நீர் சுரப்புக்கு:—**

நன்னாரிவேர் அல்லது ரோஜாப்பூ விரா. 3 போட்டு கசாயம் செய்துக் கொடுக்க குணமாகும்.

**கர்ப்பவாயுக்கு:—**

விழுதி எண்ணெய் கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

**கர்ப்பத்திலுண்டாகும் புழுக்களுக்கு:—**

விழுதி எண்ணெய் கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

**கர்ப்பஸ்திரீயின் கல்அடைப்புக்கு:—**

(1) பசும்பாலால் மாதுளம்பழத்து விதையை அரைத்து ஒரு கிராம் வீதம் கொடுத்துவர குணமாகும்.

(2) சிவப்பு நெருஞ்சியை முலைப்பாலால் அரைத்து ஒரு கிராம் வீதம் கொடுத்துவர குணமாகும்.

**முலைக்காம்பு ரணத்துக்கு:—**

வெங்காரம் 1 கிராம், சாராயம் 4 கிராம், ஜலம் 3½ அவுன்ஸ் இவைகளைச்சேர்த்து அதில் துணியை நனைத்து ரணத்தின்மேல்போட குணமாகும்.

**முலைக்காம்பு வெடிப்புக்கு:—**

காசிக்கட்டி பாவணத்திரவம் தடவிவர குணமாகும்.

**ஸ்தன்னியகட்டிக்கு:—**

நவக்ஷாரம் 1 கிராம், பன்னீர் 1 பையின்ட் இவைகளைச்சேர்த்து அதில் துணியை நனைத்து கட்டியின்மேல் போட்டுவர குணமாகும்.

**குய்யத்தில் காணுந்தினவுக்கு:—**

நவக்ஷார ஜெயிநீர் ½ (ற) முதல் 1 கிராம் ஒரு பையின்ட் ஜலத்தில்கரைத்துக்குய்யத்தில் அடிக்க குணமாகும்.

**பிரசுதிகாவாயு மந்தப்பட்டல்:—**

எர்கோட் 20 முதல் 40 கிரேன்ஸ், வெங்காரம் 10 கிரேன்ஸ், லவங்கப்பட்டை ஜலம் 1½ (சஉ) அவுன்ஸ் இவைகளைச்சேர்த்து பிரசுதிகாவாயு மந்தப்பட்டதற்குக் கொடுக்கவும். (Dr. Rigby.)

**வயிற்றில் பிள்ளை பிழைத்திருப்பதை அறிய;—**

வயிற்றில் பசும் வெண்ணெய்யைத்தடவ, அது உருகினால் பிழைத்திருக்கிறதென்றும் உருகாவிட்டால் இறந்ததென்று அறிக.

**வயிற்றில்இறந்தப் பிள்ளைவிழ :—**

(1). நிலக்கும்பிழம் பட்டையை ஜலத்தால் அரைத்துக் கொடுக்க விழும்.

(2). பிரண்டைவேரும் குருஞ்சாவேரும் வகைக்கு விரா. 5 அரைத்து வயிற்றில் பூச விழும்.

(3). உத்தாமணிவேரை விரா ½ (௨) அரைத்து பசும்பாலில் கரைத்துக் கொடுக்க விழும்.

**நச்சுக்கொடிவிழ :—**

கருவேப்பிலை, வேப்பம், முருங்கை இவைகளின் கொழுந்து வகைக்கு 1 அவுன்ஸ் சேர்த்து அத்துடன் ஒரு கடுக்காய் நொறுக்கிச்சேர்த்து ஒருபடி ஜலத்தில் கரைத்து ⅛ (ஐ) படியாக்கிக் கொடுக்கவிழும்

**பிரசவித்தஸ்திரீயின் சுவாசத்துக்கு :—**

(1). முருங்கைப்பட்டை, கழற்சிப்பருப்பு, பனைவெல்லம் வகைக்கு விரா. 1 சேர்த்து மைப்போல இடித்துப்பாக்களவுக் கொடுத்துவர தீரும்.

(2). கழற்சிப்பருப்பு, பனைவெல்லம் வகைக்கு விரா. 2 சேர்த்து மைப்போல் இடித்து தினம் 2 தடவை ஒரு விரா. வீதம் கொடுத்துவர குணமாகும்.

(3). சந்தனம், அதிமதுரம், கோஷ்டம், சாஸ்திரபேதி, தக்கோலம், முல்லைவேர், கோரைக்கிழங்கு, விலாமிச்சுவேர், வெட்டிவேர், நெல்லிப்பருப்பு, இவைகளை வகைக்கு விரா. 5 சேர்த்து இளநீர் ஜலத்தால் அரைத்து சுண்டைக்காய் அளவாக மாத்திரைகளாக்கி உலர்த்தி ஒரு மாத்திரை வீதம் இ நீரில் கரைத்து 12 நாள் கொடுக்க தீரும்.

**பிரசவித்தஸ்திரீயின் கீழ்வயிறு, மார்பு, சிரசு, இவைகளின் குத்தல், நோவுக்கு :—**

ஏலம், சுக்கு, மிளகு, திப்பிலி, லவங்கப்பத்திரி, லவங்கப்பட்டை இவ்வாறும் வகைக்கு விரா. 2 சேர்த்து உலர்த்தி சூர்ணித்து 3 விரா. வீதம் வெல்லம் அல்லது கழுநீர் இவைகளிலெதிலாகிலுஞ் சேர்த்து 2 தடவை கொடுக்க குணமாகும்.

**பிரசவித்த ஸ்திரீக்கு 3-வது மாதத்தில் காணும் ஆயாசயஸ்தானத்தின் ரக்ஷைக்கு :—**

அதிவிடையம், சிற்றாமுட்டிவேர், சந்தனக்கட்டை, பற்படாகம், வெட்டிவேர், சிந்தில் தண்டு, பூனைப்புழுக்கம்வேர், கொத்தமல்லி விதை வகைக்குப்பலம் 1 சேர்த்து நாலுபடி ஜலத்தில் போட்டு எரித்து 1 படியாக்கி, $\frac{1}{8}$ (ஜு) படி. வீதம் அந்தி சந்தி 2 தடவை குணமாகும் வரையில் கொடுத்து வரவும்.

**பிரசவித்த ஸ்திரீயின் மார்பில் பால்சுரக்க :—**

(1). பார்லே அரிசி கஞ்சியை கொடுத்துவர பாலுண்டாகும்.

(2). 5 விரா. தோல்நீக்கின வெள்ளைப்பூண்டை 1—2 சேர் பசுவின்பாலில் போட்டு வேகவைத்துக் கடைந்து அத்துடன் எலரிசித்தூள் விரா. 1, சீனி விரா. 5 சேர்த்து பாயசம் போல்செய்து தினம் காலை 6 மணிக்குக் கொடுத்து 3—4 மணி நேரம் சென்று போஜனம் செய்துவர பால் உண்டாகும்.

(3). சிற்றாமணக்கு இலையை வதக்கி மார்பில் போட பால்சுரக்கும்.

**பிரசவித்த ஸ்திரீயின் மார்பின் பாலை வறண்டுபோக ;—**

(1). மல்லிகைப்பூ அல்லது கோளிகீரை, வைத்துக்கட்ட பால் வறண்டு போகும்.

(2). செம்மரத்தை உரைத்ாவது அல்லது தவரம்பருப்பை உரைத்தாவது, பெல்லிடொனா சத்துவும், கிளிஸரின் எண்ணெயும் சேர்த்தாவது பற்றுப்போட, மார்புவீக்கத்தின் நோய்தீரும், பால்வறண்டு போகும்.

**பிரசவித்தஸ்திரீயின் வயிற்றுவலிக்கு.—**

அபினிப்பாவனத்திரவம் 15 முதல் 20 துளி ஜலத்தில் கொடுக்க குணமாகும்.

---

## சுரங்கள் (64)-க்கு அவுஷதங்கள்.

---

☞ இதுவரையிலும் குழந்தைகளுக்கும் ஸ்திரீகளுக்கும் உண்டாகும் ரோகங்களில் சில ரோகங்களுக்கு அவுஷதங்கள் சொல்லலாயிற்று. இனிசொல்லப்படும் அவுஷதங்கள் புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்.

**சுரங்கள் 64-க்கு:—**

(1) சந்திரோதய மாத்திரை
(2) திரிலோகரக்ஷாமணி மாத்திரை
(3) லிங்கசெந்தூரம்
(4) ரசசெந்தூரம்

(5) பயிரவமாத்திரை
(6) சுரபூபதி மாத்திரை
(7) பானுபிரகாச மாத்திரை
(8) பாஷாண மாத்திரை
(9) ரசலிங்க மாத்திரை
(10) தாளகமாத்திரை
(11) ரசகர்ப்பூர மாத்திரை
(12) லிங்கமாத்திரை
(13) கஸ்தூரி மாத்திரை
(14) சுவர்ணகோரோசன மாத்திரை
(15) அப்பிரககோரோசனமாத்திரை
(16) நமசிவாய செந்தூரம்
(17) வீரபத்திரசிந்தாமணி
(18) பஞ்சாக்ஷர செந்தூரம்
(19) உலகோத்தம செந்தூரம்
(20) ரசபயிரவ செந்தூரம்
(21) ஏகாதசிருத்திர செந்தூரம்
(22) தாளக பஸ்மம்
(23) துருசி பஸ்மம்
(24) பவள பஸ்மம்
(25) மகா ரசபஸ்மம்
(26) ரசகர்ப்பூரக்கட்டு
(27) பாஷாணக்கட்டு
(28) லிங்கமெழுகு
(29) வீரமெழுகு
(30) பாஷாணமெழுகு
(31) லிங்கக்குழம்பு
(32) கும்மட்டிக்காயக்குழம்பு
(33) ராஜவில்வாதிலேகியம்
(34) ராஜமார்த்தாண்ட லேகியம்

இவைகள் இப்புஸ்தகத்தில் சொல்லியபடி செய்து கொடுக்க குணமாகும். அன்றியும் 14—16—17—19 இந்த அத்தியாயங்களில் சொல்லிய அவுஷதங்களை புத்தியால் ஒன்றோடொன்று சேர்த்து மிக்ஸ்செர் செய்து கொடுப்பதால் அதிசீக்கிரத்தில் குணமாகும்.

உள்சுரத்துக்கு:—

(1) லைகர் அமோனிய அசிடெடிஸ் 2 டிராம், கர்ப்பூரஜலம் 6 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து 6 மணிக்கொருதரம் 2 அவுன்ஸ் வீதம் கொடுக்க குணமாகும், (Dr. Ainslie)

(2) சாஸ்திரபேதிதூள், சீனி வகைக்கு விரா. 1, பசும்பாலைக்காய்ச்சி அதில் போட்டு காலையில் 5 நாள் கொடுத்துவர குணமாகும்.

தாபசுரத்துக்கு:—

(1) இந்த புஸ்தகத்தில் சொல்லிய அர்த்தநாரீஸ்வரன் மாத்திரைக்கொடுக்க குணமாகும்.

(2) நெல்லிவற்றல், வெட்டிவேர், கோஷ்டம், அதிமதுரம், விலாமிச்சுவேர், முத்தகாசு, சந்தனம், நெற்பொரி வகைக்கு விரா. 2½ சூர்ணித்து ½ படி இளநீர் ஜலத்தில் கரைத்து, ⅛ (ஐ) படி ஆகும்படி எரித்த கஷாயத்தில் பாதி காலையிலும், பாக்கி பாதி மாலையிலும் கொடுக்க குணமாகும்.

குளிர்சுரத்துக்கு:—

(1) அபினி பாவன திராவகமும் ஸோப்லினிமேண்டும் சமனிடையாகச் சேர்த்து நடுமுதுகில் தேய்த்தால் குழந்தையின் குளிர்சுரத்தின் குளிர் நிற்கும்.

(2) அபினி பாவன திரவம் 60 துளி, ஸல்பியுரிக் ஈதர் 1 கிராம், கர்ப்பூரஜலம் 1 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து குளிர்வரும்போதுக்கொடுக்க குளிர்நிற்கும்.

(3) மிளகு 40 கிறேன்ஸ், பெருங்காயம் 20 கிறேன்ஸ், கழற்சிப்பருப்பு 100 கிறேன்ஸ், தேன் தேவையானது இவைகளைச் சேர்த்து மெழுகு போலரைத்து 30 மாத்திரைகளாக்கி பெரியவருக்கு 2 மாத்திரையும் சிறியவருக்கு 1 மாத்திரையும் தினம் 2—3 தடவை கொடுத்துவர குணமாகும்.

(4) குவைனு 4 முதல் 20 கிறேன்ஸ் (சுரம்வருவதற்குமுன்) குல்கந்து சேர்த்து மாத்திரை ரூபமாகவாவது அல்லது ஒரு பீங்கானில் போட்டு விளாவின கந்தக திராவகம் 5 துளிவிட்டு மிஸ்ரித்து பின்பு அத்துடன் ஒரு அவுன்ஸ் பெப்பர்மெண்டு ஜலத்தை அல்லது சுத்தஜலத்தை விட்டு சேர்த்துக்கொடுத்துவர குணமாகும்.

(5) ரசமாத்திரை.
(6) அர்த்த நாரீஸ்வரன் மாத்திரை.
(7) பாலசுரஹர மாத்திரை.
(8) சுரகுடாரி மாத்திரை.
(9) தாளகக்கட்டு.
(10) அகஸ்தியர் குழம்பு

இவைகளை செய்துக்கொடுக்க குணமாகும்.

விஷசுரத்துக்கு:—

(1) சர்க்கரைபாகு 2 அவுன்ஸ், வெந்நீர் 14 அவுன்ஸ், விளாவின கறிஉப்பு திராவகம் 1 கிராம் இவைகளைச் சேர்த்து 1 அவுன்ஸ் முதல் 2 அவுன்ஸ் வீதம் கொடுத்துவர குணமாகும். (Dr. Gregory)

(2) விளாவின கறிஉப்பு திராவகம் 1 கிராம், பார்லி அரிசி கஞ்சி 1 பையிண்டு, சர்க்கரை ½ (ந) அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து 2 முதல் 4 அவுன்ஸ் வீதம் தினம் 2—3 தடவை கொடுத்துவர குணமாகும்.

(3) நிலவேம்பு, பேய்ப்புடல், ஆடாதோடைவேர்க்கு, பேய்ப்பீர்க்கம்வேர், வெட்பாலையரிசி வகைக்கு விரா. 2 பொடித்து, ½ (ந) படி ஜலத்தில் போட்டு எரித்து நாலிலொன்றாக்கின கசாயத்தைக் கொடுத்துவர குணமாகும்.

(4) நிலவேம்பு, பேய்ப்புடல், வேப்பம்பட்டை, சீந்திற்கொடி, சுக்கு, கடுக்காய், வகைக்கு விரா. 10, பொடித்து 2 படி ஜலத்தில் போட்டு எரித்து நாலிலொன்றாக்கி ½ (ந) சேர் வீதம் கொடுத்துவர குணமாகும்.

பழைய சுரத்துக்கு:—

(1) இந்த புஸ்தகத்தில் சொல்லிய அர்த்த நாரீசுவரன் மாத்திரைக்கொடுக்க குணமாகும்.

(2) பற்படாகம், சிறுதேக்கு, கோஷ்டம், சீந்திற்கொடி, திப்பிலி, ஆடாதோடை, முத்தகாசு, நிலவேம்பு, சுக்கு, சிறுகாஞ்சோரி வகைக்கு விரா. 10, பொடித்து 8படி ஜலத்திலிட்டு எரித்து ஒருபடியாக்கி $\frac{1}{16}$ (பஉ)படி வீதம் கொடுத்துவர குணமாகும்.

அஸ்திசுரத்துக்கு :—

(1) மகா கூஷ்பாண்டலேகியம்.
(2) ரஸபஸ்மம்.
(3) அப்பிரகபஸ்மம்.
(4) ராஜஅப்பிரேக செந்தூரம்.
(5) வீரபத்திரசிந்தாமணி.
(6) அர்த்தநாரீஸ்வரன் மாத்திரை.
(7) மகா சந்தநாதித்தயிலம்.
(8) ராஜாங்க கொம்பரக்குத்தயிலம்
(9) மகா அசுவகந்திசூர்ணம்.
(10) மகாதாளிசப்பத்திரி சூர்ணம்.

இவைகளை இப்புத்தகத்தில் சொல்லியபடி செய்துக்கொடுக்க குணமாகும்.

அராத்திய சுரத்துக்கு :—

(1) இந்த புஸ்தகத்தில் சொல்லிய அகஸ்தியர் குழம்பு கொடுக்க குணமாகும்.

(2) தேவதாரம், சுக்கு, கொத்தமல்லி, வகைக்கு விரா. 10 சேர்த்து பொடித்து ஒருபடி ஜலத்தில் போட்டு எரித்து கால்படியாக்கி, இதில் நாலிலொருபாகம் தினம் 2 தடவைக் கொடுத்து வரத்தீரும்.

அதிசார சுரத்துக்கு :—

(1) அர்த்த நாரீஸ்வரன் மாத்திரைக்கொடுக்க குணமாகும்.

(2) வில்வப்பழச்சதை, நிலவேம்பு, முத்தக்காசு, மாம்பட்டை, சுக்கு, பெருமரத்துப்பட்டை வகைக்கு விரா. 10, பொடித்து 2 படி ஜலத்திலிட்டு ½ படி ஆகும்படி எரித்து வடித்து $\frac{1}{16}$ (பஉ) படி வீதம் கொடுத்துவர குணமாகும்.

நடுக்கல்சுரத்திற்கு :—

(1) சுக்கு, கோஷ்டம், தேவதாரம், கடுக்காய், பற்படாகம், குப்பிமேனி, சிறுதேக்கு, கண்டங்கத்திரி வகைக்கு விரா. 5 வீதம் சேர்த்து பொடித்து ஒருபடி ஜலத்தில் போட்டு ⅛ (ஞ) படியாகும்படி எரித்துக் கொடுக்க குணமாகும்.

(2) மிளகு விரா. 5 பொடித்து கால்படி ஜலத்திலிட்டு எரித்து $\frac{1}{16}$ (பஉ) படியாக்கி கொடுக்க குணமாகும்.

அஜீர்ண சுரத்திற்கு :—

(1) சுக்கு, கடுக்காய், தானிக்காய், நெல்லிவற்றல், பேராமுட்டி, சிற்றாமுட்டி வகைக்கு விரா. 1 பொடித்துப்போட்டு கசாயம் செய்துக் கொடுக்க குணமாகும்.

(2) ஓமம், வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், தானிக்காய், சங்கம்வேர், சித்திர மூலம், திப்பிலி மூலம், வகைக்கு விரா. 1 பொடித்து 2 சேர் ஜலத்தில் போட்டு ½ சேர் ஆகும்படி எரித்துக் கொடுக்க குணமாகும்.

விடாதசுரத்திற்கு :—

மிளகு விரா. ½, அவுரிவேர் விரா. 1, இவைகளை அரைத்து நீரில் கரைத்து அதில் கண்ணுப்பு ½ பணவிடை போட்டு மிஸ்ரித்துக் கொடுத்துவர குணமாகும்.

வாதசுரத்திற்கு :—

(1) அர்த்த நாரீஸ்வரன் மாத்திரை.
(2) அகஸ்தியர் குழம்பு.
} இவைகள் கொடுக்க குணமாகும், இந்த புஸ்தகத்தில் காண்க.

பித்தசுரத்திற்கு :—

(1) சுக்கு, கிராம்பு, கோரைக்கிழங்கு, நிலவேம்பு, கொத்துமல்லிவிதை வகைக்கு விரா. 5, பேய்ப்புடல் விரா. 20 இவைகளைப்பொடித்து ஜலத்திலிட்டுக் கஷாயம் செய்து அத்துடன் கொஞ்சம் தேன்விட்டு 2 அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்துவர குணமாகும்.

(2) ரசபஸ்பவெ செந்தூரம்.
(3) அகஸ்தியர் குழம்பு.
} இவைகளைக் கொடுக்க குணமாகும்.

சிலேஷ்ம சுரத்திற்கு :—

(1) செம்முள்ளி, சண்டை, தூதுவளை, கண்டங்கத்திரி இவைகளின் வேர்கள், சுக்கு, வகைக்கு விரா. 6 பொடித்து 2 படி ஜலத்தில் போட்டு எரித்து ¼ (ல)படி யாக்கி, $\frac{1}{16}$ (டீ)படி வீதம் தினம் 2 தடவை கொஞ்சம் திப்பிலிதூள் சேர்த்துக் கொடுக்க குணமாகும்.

(2) ரசபஸ்பவெ செந்தூரம். (3) அர்த்த நாரீஸ்வரன் மாத்திரை. (4) அகஸ்தியர் குழம்பு இவைகளைக் கொடுக்க குணமாகும்.

திரிதோஷசுரம், விஸ்போடக சுரம் இவைகளுக்கு :—

லைகர் அமோனியா அசிடேடிஸ் 2 அவுன்ஸ், ஸ்பிரிட் ஈதர் நைட்ரஸ், வைன் ஆண்டிமோனி வகைக்கு 2 திராம், சுத்தஜலம் 4½ (5) அவுன்ஸ் இவைகள் சேர்த்து 1½ (ந) அவுன்ஸ் வீதம் தினம் 2-3 தடவை கொடுக்க குணமாகும்.

முன்றாம் நான்காம் முறை சுரத்திற்கு :—

1) சுரம் வருமுன் 15 முதல் 25 கிரேன்ஸ் குவைனாவில் 5 துளி விளாவின சக்ககத் திராவகத்தை விட்டு 2 அவுன்ஸ் ஜலத்தில் மிஸ்ரித்துக் கொடுக்க குணமாகும்.

(2) இந்த புஸ்தகத்தில் சொல்லிய ஞாபகசிலை மாத்திரைக் கொடுக்க குணமாகும்.

**மாறல் சுரத்திற்கு :—**

டை குவைனு மிக்ஸ்சேர் கொடுக்க குணமாகும்.

**சந்நிபாதசுரம் (சந்நி—13)க்கு :—**

(1) உலகோத்தம செந்தூரம்.
(2) ராஜ அப்பிரேக செந்தூரம்.
(3) ரசவீர செந்தூரம்.
(4) நமசிவாய செந்தூரம்.
(5) மகா ரசபஸ்மம்.
(6) வீரபஸ்மம்.
(7) அப்பிரேக பஸ்மம்.
(8) துரிசு பஸ்மம்.
(9) வீர செந்தூரம்.
(10) ருத்திர செந்தூரம்.
(11) லிங்க செந்தூரம்.
(12) ரச செந்தூரம்.
(13) திரிவிக்கிரம ரசசெந்தூரம்.
(14) ரசபயிரவ செந்தூரம்.
(15) ஏகாதசிருத்திர செந்தூரம்.
(16) சுவர்ணகோரோசனை மாத்திரை.
(17) அப்பிரேககோரோசனைமாத்திரை.
(18) பயிரவ மாத்திரை.
(19) பானுபிரகாச மாத்திரை.
(20) கஸ்தூரி மாத்திரை.
(21) மஞ்சைசிலை மாத்திரை.
(22) ஆனந்தபயிரவ மாத்திரை.
(23) திரிலோகசூடாமணி மாத்திரை.
(24) சந்திரோதய மாத்திரை.
(25) சித்தாநந்தபயிரவ மாத்திரை.
(26) ரசாநந்தபயிரவ மாத்திரை.
(27) லாகராகந்த மாத்திரை.
(28) லிங்கக் கட்டு.
(29) பாஷாணக் கட்டு.
(30) வீரக் கட்டு.
(31) வீரமெழுகு.
(32) லிங்கமெழுகு.
(33) பாஷாணமெழுகு.
(34) அகஸ்தியர் குழம்பு.
(35) வங்கேசுவர ரச கஸ்யம்.
(36) சர்வேசுவர ரச கஸ்யம்.

இவைகளில் எதைக் கொடுத்தபோதிலும் குணமாகும். இவைகளின் செய்முறைகள் இந்த புஸ்தகத்தில் காண்க.

(37) குளோரெட் ஆப் பொட்டாஷ் 8 கிரேன்ஸ், கந்தகப்பு 20 கிரேன்ஸ், பைகார் பொனெட் ஆப் சோடா 30 கிரேன்ஸ், இவைகளை சேர்த்து பொடிசெய்து 2—3 மணிக்கு ஒரு தடவை ஜலத்தில் கொடுக்க குணமாகும். (Dr. Stevens).

**யானைக்கால்சுரத்துக்கு :—**

சீந்திற்கொடி கஷாயத்தை தினம் காலையில் சாப்பிட்டுவர குணமாகும். இதை விடாமல் சாப்பிட்டால் நின்று விடும்.

**யானைக்கால்சுரம், குஷ்டம் இவைகளுக்கு :—**

வெள்ளைப் பாஷாணம் 1 கிரேன், மிளகு 30 கிரேன்ஸ், தேன் தேவையானது இவைகளைச் சேர்த்து 10 மாத்திரைகளாக்கி ஒரு மாத்திரை வீதம் 3 தடவை கொடுக்க குணமாகும்.

**யானைக்கால்ரோகம், அதின் சுரம்-பாம்புக்கடி இவைகளுக்கு :—**

வெள்ளைப் பாஷாணம் 6 கிரேன்ஸ், மிளகு 1 இராத், வ்ளாம்பிசின் தேவையானது இவைகளைச் சேர்த்து 90 மாத்திரைகளாக்கி ஒரு மாத்திரை வீதம் காலை மாலை கொடுக்க குணமாகும்.

உஷ்ணசுரத்திற்கு:—

ஒரு அவுன்ஸ் வில்வவேர் பட்டையை ஒரு பையிண்டு ஜலத்தில் போட்டு காய்ச்சி ½ (அ) பயிண்டு ஆக்கி ⅛ (ஙு) ஆழாக்கு வீதம் தினம் 1-2 தடவைக் கொடுக்க குணமாகும்.

சுரத்தில் வியர்வை பிரப்பிக்க:—

(1) நவக்ஷார உப்பு 20 கிரேன்ஸ், எலுமிச்சம்பழச்சாறு 6 திராம், டொலுப்பாணிதம், சாதிக்காய்பாவன திரவம் வகைக்கு ½ (அ) திராம், இவைகளைச் சேர்த்துக் கொடுக்கவும்.

(2) லைகர் அமோனியா அசிடேடிஸ் 3 திராம், கர்ப்பூரஜலம் 15 அவுன்ஸ், வெடி உப்பு 4 கிரேன்ஸ், ஆரஞ்சித்தோல்பாணிதம் 1 திராம், இவைகளைச் சேர்த்துக் கொடுக்கவும்.

(3) பொட்டாஸ் கார்போனேட் 10 கிரேன்ஸ், கர்ப்பூர ஜலம் 12 திராம், எலுமிச்சம்பழச்சாறு 2 திராம் இவைகளைச் சேர்க்க பொங்கும்போது சாப்பிடவும்.

(4) வெடி உப்பு 20 கிரேன்ஸ், நவக்ஷாரம் 12 கிரேன்ஸ், ஜலம் 3 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து தினம் 2—3 தடவைக் கொடுக்கவும். (Dr. Thomas)

(5) பொட்டிலுப்பு 1½ (கஅ) திராம், வாந்தி உப்பு 1 கிரேன், ரசபஸ்மம் 4 கிரேன்ஸ் இவைகளைச் சேர்த்து ஒரு தடவைக்கு எட்டிலொரு பாகம் 2 மணிக்கு ஒருதரம் கொடுத்து வரவும். (Dr. Dewees.)

சுரத்தில் உஷ்ணம் தணிவதற்கு:—

(1) நவக்ஷாரம் 1 அவுன்ஸ், இரட்டித்து வடித்த சாராயம் 1 அவுன்ஸ், ஜலம் 15 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து உடம்பின்மேல் தடவவும்.

(2) வெடியுப்பு 5 அவுன்ஸ், நவக்ஷாரம் 5 அவுன்ஸ், ஜலம் 16 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து உடம்பின்மேல் துவட்டவும். (Sir A. Cooper)

சுரத்தில் தாகம் தணிக்க:—

(1) வெடியுப்பு 10 கிரேன்ஸ், சர்க்கரை 20 கிரேன்ஸ், இவைகளைச் சேர்த்து ஒரு ஒயின்கிளாஸ் பெப்பர்மெண்டு ஜலத்தில் கரைத்துக் கொடுக்கவும். (D. R. Druitt).

(2) திராக்ஷ உப்பு ½ (அ) அவுன்ஸ், சர்க்கரை 4 அவுன்ஸ், எலுமிச்சம்பழரசம் ¼ (வ) அவுன்ஸ், நீர் 3 பையிண்டு இவைகளைச் சேர்த்து 1-2 அவுன்ஸ் வீதம் கொடுத்து வரவும்.

(3) குளோரேட் ஆப் பொடாஸ் 1 திராம், ஜலம் ஒரு பையிண்டு இவைகளைச் சேர்த்து சன்னிபாதசுரம், விடாத சுரம் இவைகளில் காணும் தாகத்துக்குக் கொடுக்கவும். (Dr. Watson).

## நேத்திர ரோகங்கள் 94-க்கு அவுஷதங்கள்

**நேத்திர ரோகங்கள் 94-க்கு:—**

(1) சிறுகீரை, பூலா, பொன்னாங்காணி இவைகளின்வேர், துத்தம், துருசி, திப்பிலி, புளியம்பூ இவைகள் வகைக்கு விராகனிடை 5, சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் மைபோலரைத்து நீண்ட மாத்திரைகள் செய்து உலர்த்தி ஷை பழச்சாற்றால் உரைத்துக் கண்ணிலிட குணமாகும்.

(2) அமிர்தவல்லித் தயிலம். (3) மகா மிருகாமலத் தயிலம்.

(4) அயச்செந்தூரம் இவைகளால் குணமாகும். செய்முறைகள் இப்புஸ்தகத்தில் காண்க. இன்னும் அநேக மருந்துகள் 14-வது, 16-வது, அத்தியாயங்களில் காணலாம்.

(5) பால்துத்தம் பலம் ½ (?), துரிசு பலம் 1, வெள்ளைசங்கு பலம் 2, இவைகளை கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றால் மைபோலரைத்து நீளமாய் கயிறுபோல் மாத்திரைகள் செய்து உலர்த்தி முலைப்பாலில் உரைத்து கண்ணிலிட குணமாகும்.

**கண்புழுவட்டு—துர்மாமிசம்—பூவிழுதல் பூலர்வடிதல்—இவைகளுக்கு:**
ஜெரிகைவெள்ளியை உருக்கி அரத்தால் ராவின பொடி விராகனிடை 10 சுத்திசெய்து, ஜாதியிலை (பிச்சியிலை) சாற்றால் 4 ஜாமம் அரைத்து பசும்வெண்ணெயில் கலந்து பீங்கானில் வைத்துக்கொண்டு கண்ணில் மையிடுவதுபோலிட குணமாகும்.

**கண் சிவப்புக்கு:—**

(1) நவச்சாரத்தை ஜலத்தில் கரைத்து அதில் அலிஸியிதை மாவைச்சேர்த்து போல்டிஸ் செய்து கண்களின்மேல் வைத்துக் கட்ட குணமாகும். (Tyrrell.)

(2) பிரமதண்டு செடியின்பாலை கண்ணிலிட குணமாகும்.

**கண்ணில் இறங்கும் மேகநீர் போக:—**
காளித்தயிலத்தை இப்புஸ்தகத்தில சொல்லியபடி செய்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

**கண்எரிவுக்கு:—**

(1) மகா சந்தனாதித் தயிலம்.
(2) நெல்லிக்காய் தயிலம்.
(3) பொன்னாங்காணித் தயிலம்.

} இவைகளை புஸ்தகத்தில் பார்வையிட்டு செய்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

**அந்திமாலை:—**

(1) மகா மிருகாமலத் தயிலத்தை செய்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

(2) மிளகை வெள்ளாட்டுப் பிச்சப்பையில் கொண்டமட்டும் செலுத்தி ஜலம் வெளியே வராமல் வாயைத்தைத்து நிழலில் தூக்கிக் கட்டி வைத்து மிளகு உலர்ந்த பிறகு ஒரு மிளகை ஜலத்தால் உரைத்து தினம் 2 தடவை கண்ணிலிட குணமாகும். இதை ½ (அ)—1 மண்டலம் கண்ணிலிடவேண்டியது.

**கண்ணோவுக்கு:—**

(1) லைகர் அமோனிய அசிடேடிஸ் 2 அவுன்ஸ், அபினிப்பாவனத்திரவம் 1 டிராம், பன்னீர் 6 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து அதில் துணியை மடித்து நனைத்து கண்களின்மேல்போட குணமாகும்.

(2) 3 கிறேன்ஸ் படிகாரத்தை 1 அவுன்ஸ் ஜலத்தில் கரைத்து குழந்தையின் கண்ணோவுக்கு தினம் தினம் 4--5 தடவை கண்ணிலிடவும், கண்களைக்கழுவவும் அல்லது துணியைமடித்து நனைத்து கண்களின்மேல் போடவும். பெரியவர்களுக்கு அக்கமாய் சீனாகாரத்தைச் சேர்த்துக்கொண்டு ஜலத்தை கண்ணிலிட குணமாகும்.

(3) போஸ்காயும், துத்தியிலையும் ஓரளவாக ஜலத்தில்போட்டு காய்ச்சி சுட சுட ஒற்றடம் கொடுக்க குணமாகும்.

இன்னும் அநேக மருந்துகள் 14-16 அத்தியாயத்தில் காண்க.

**கண்குளிர்ச்சிக்கு:—**

4 பலம் சிற்றாமணுக்கு வேரை அரைத்து ஒரு படி பசும்பாலில் சேர்த்துக்காய்ச்சி உரைகுத்திக் கடைந்தெடுத்த வெண்ணெயை கண்ணிலிட கண்கள் குளிர்ச்சியாகும்.

**கண்ரெப்பை வீக்கத்திற்கு:—**

(1) பசும்பாலைக் காய்ச்சி சுட சுட ஒற்றடம் கொடுக்க குணமாகும்.

(2) மிளகை ஜலத்தால் உரைத்துத் தடவிவர குணமாகும்.

(3) சங்குவை கருவேப்பிலைச் சாற்றாலுரைத்துத் தடவிவர குணமாகும்.

**கண் அமாசத்திற்கு :—**

துரிசுக்கட்டியை ரெப்பைக்குள் தடவி வர குணமாகும்.

**கண்சிவப்பு— பூ இவைகளுக்கு :—**

புளியம்விதைத்தோல், தேற்றாவிதை, கடுக்காய்தோல் வகைக்கு வி ரா. 1 மைபோலரைத்து துணியில் போட்டு முடித்து பசும்பாலில் ஊறவைத்துக் கண்ணில் பிழிந்தால் குணமாகும்.

**கண்புகைச்சலுக்கு :—**

(1). பவள பஸ்மம்.

(2). மகாசந்தனாதித் தயிலம்.

(3). மகா அசுவகெந்தி பலாலாக்ஷாதித் தயிலம்.

(4). முசுமுசுக்கைத் தயிலம்.

இவைகளை இப்புத்தகத்தில் சொல்லியபடி செய்து உபயோகிக்க குணமாகும்.

**கண்வாயுதீர :—**

கருஞ்செம்பைத்தயிலத்தை செய்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

**கண்படலம் 7க்கு :—**

(1). கையாந்தகரைத் தயிலம்.
(2). நெல்லிக்காய்த் தயிலம்.
இவைகளை ஸ்நானஞ் செய்துவர குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

**கண்காசம் 6 க்கு :—**

(1). கையாந்தகரைத் தயிலம்.
(2). நெல்லிக்காய்த் தயிலம்.
(3). மகாமிருகாமலத் தயிலம்.
இவைகளை இப்புஸ்தகத்தில் கண்டவியபடி செய்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

(4). வெள்ளைப்பூண்டை கோமூத்திரத்தில் அரைத்து இராத்திரியில் படுக்கைக்குப் போகும்பொழுது கண்ணின்மேல் 7 நாள் பற்றுப்போட குணமாகும். பெருங்காயந் தத நீக்கி இச்சாபத்தியமாயிருக்கவும்.

(5). சமுத்திரத்திலுள்ள ஆமையின் ஒட்டை ஜலத்தில் வேகவைத்து நிழலில் உலர்த்தி முலைப்பாலில் உரைத்து கண்ணிலிட குணமாகும்.

## கர்ணரோகங்கள் (25)க்கு அவுஷதங்கள்.

**கர்ணரோகங்கள் 25 க்கு:—**

(1) 10 விரா. நிலப்பனைக்கிழங்கை அரைத்து ஒருபடி நல்லெண்ணெயில் சேர்த்து எரித்து வடித்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

**முசுமுட்டைஎண்ணெய்:—**

(2) குக்கில், வசம்பு, பூநாகம், முசுமுட்டை, கோழிமுட்டை மஞ்சட்கரு, வெள்ளைப்பூண்டு, கண்டங்கத்திரி, வகைக்கு விரா. 2 அரைத்து ½ (அ) படி வேப்பெண்ணெயில் சேர்த்து எரித்துவடித்து 4-5 துளி காதிலிட குணமாகும்.

**ரசானந்த சஞ்சீவி எண்ணெய் :—**

(3) ரசம், கந்தகம், வெள்ளைப்பாஷாணம், அபினி, அதிமதுரம், வகைக்கு விரா. ½ சூர்ணித்து நல்லெண்ணெய் சேர் 3, பசும் நெய் பலம் 6 சேர்த்து அதில் கரைத்து, எரித்து, வடித்து 4-5 துளி காதிலிட்டு ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

(4) வெங்காயம் விரா. 2, வசம்பு விரா. 2, மஞ்சள் விரா. 4, பொடித்து ஒருபடி வேப்பெண்ணெயில் கரைத்து எரித்து வடித்துகாதில் விட்டுவர குணமாகும்.

(5) அமிர்தவல்லித்தயிலத்தை ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

(6) இஞ்சித்தயிலத்தை ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.
இவைகளின் செய்முறைகள் இப்புஸ்தகத்தில் காண்க.

(7) சுக்கு, இந்துப்பு, திப்பிலி, கோரைக்கிழங்கு, பெருங்காயம், வசம்பு, வெள்ளைப்பூண்டு வகைக்கு விரா. 1 சேர்த்து, 8 பலம் எருக்கம் புழுப்புச்சாற்றுல் அரைத்து, 8 பலம் நல்லெண்ணெயில் சேர்த்து

எரித்து மெழுகுபதத்தில் வடித்து ஒரு சீசாவில் போட்டு வைத்துக் கொண்டு 4-5 துளி காதிலிட்டுவர குணமாகும்.

**காதில் சீழ்வருதலுக்கு:—**

(1) ஒருசேர் வேப்பெண்ணெயில் வசம்பு, வெள்ளைப்பூண்டு, பெருங்காயம், வகைக்கு விராக. 1 சூரணித்து போட்டு எரித்து வடித்து காதிலிட்டுவர குணமாகும்.

(2) ஒரு சேர் வேப்பெண்ணெயில் ¼ (வ) சேர் வில்வப்பழசதையை போட்டு எரித்து வடித்து காதிலிட்டுவர குணமாகும்.

(3) அபினிப்பாவனத் திரவம் 4 கிராம், தேங்காய் எண்ணெய் நாலுகிராம் இவைகளைச் சேர்த்து குலுக்கி காதிலிட்டுவர குணமாகும்.

**காதிரைச்சலுக்கு:—**

(1) 5 அவுன்ஸ் நல்லெண்ணெயும், 4 அவுன்ஸ் நைவேளைச்சாறும் சேர்த்து எரித்து வடித்து காதிலிட்டுவர குணமாகும்.

(2) முசுமுசுக்கை இலைச்சாறு படி ⅛ (ஞ), நல்லெண்ணெய் படி ⅛ (ஞ), இவைகளைச் சேர்த்து அதில் வெள்ளைப்பூண்டு விராக. 3 டை சாற்றால் அரைத்து கரைத்து எரித்து வடித்து காதிலிட்டுவர குணமாகும்.

**காதுக்குத்தலுக்கு:—**

(1) இஞ்சிச்சாறு ¾ (ரு) கிராம், குதிரைலத்திச்சாறு 1 கிராம் இவைகளை சேர்த்து 4—5 துளி காதிலிட குணமாகும்.

(2) 2 அவுன்ஸ் புங்கெண்ணெயில் 3 கிராம் பன்றிமுள்ளைச் சிதைத்துப் போட்டு எரித்து வடித்து காதிலிட்டு பஞ்சால் அடைத்து 4 நாள் வரையில் காற்றுப்புகாமல் வைத்திருக்க குணமாகும்.

**காதுப்புழுவிற்கு:—**

முருங்கை இலைச்சாறு 3 அவுன்ஸ், நல்லெண்ணெய் 4 அவுன்ஸ் சேர்த்து எரித்து வடித்து காதிலிட குணமாகும்.

**காதுஎழுச்சிக்கு:—**

1 அவுன்ஸ் நல்லெண்ணெயில் கிலுகிலுப்பைபசேர் ⅟₁₆ (ஐ) அவுன்ஸ் அரைத்துப் போட்டு எரித்து வடித்து 5-6 துளி காதிலிட குணமாகும்.

**காதுவலிக்கு:—**

அபினிப்பாவன திரவமும் தேங்காய் எண்ணெயும் சமனிடையாய் சேர்த்து 5-6 துளி காதிலிட குணமாகும்.

## சிரோரோகங்கள் (19)-க்கு அவுஷதங்கள்.

**சிரோரோகம் (19)-க்கு:—**

(1) மகாவில்வாதித்தயிலம்
(2) அமிர்தவல்லித்தயிலம் } இவைகளை இப்புஸ்தகத்தில் சொல்லியபடி செய்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

**ஒற்றைத்தலைவலிக்கு-(ஒருதலைவலி):—**

(1) இஞ்சிச்சாறும், நல்லெண்ணெயும் வகைக்கு 4 அவுன்ஸ் சேர்த்து எரித்து வடித்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

(2) மார்த்தாண்டபயிரவத்தயிலம் } இவைகளை ஸ்நானஞ்செய்துவர குணமாகும். செய்முறை இப்புஸ்தகத்தில் காண்க.
(3) மீரகத்தயிலம்

(4) வெள்ளைப்பாஷாண ஜெயநீர் 4—5 துளி ஒரு அவுன்ஸ் ஜலத்தில் போட்டு தினம் 3—4 தடவை கொடுக்க குணமாகும்.

(5) கஞ்சாஇலைச்சாறு படி 1, நல்லெண்ணெய் படி 1 சேர்த்து எரித்து வடித்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

**இருபக்கத்தலைவலிக்கு:—**

பேய்ப்புடல்சாறும், நல்லெண்ணெயும் வகைக்கு சேர் 1 சேர்த்து எரித்து வடித்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

**சகலதலைவலிக்கும்:—**

மெந்தல் (Menthal)-யை நெற்றி, பொருத்து முதலிய இடங்களில் தேய்த்தால் குணமாகும்.

**நீர்கோண்டமண்டையடிக்கு:—**

கற்பூரம், மிளகு, சதகுப்பை, கடுகு, திப்பிலி, மஞ்சள், மரமஞ்சள் வகைக்கு விரா. 4 இவைகளை குன்றிமணி இலைச்சாற்றால் மைபோல அரைத்து மல்லுத்துணியில் தடவித் திரியாக்கி உலர்த்தி கொளுத்தி நாசியில் அதின் புகையை இழுக்க குணமாகும்.

**கபாலவாயு—கபாலவலி—மண்டையிடி—ஒற்றைத்தலைவலி இவைகளுக்கு:—**

(1) குப்பைமேனிச்சாறு படி 3, நல்லெண்ணெய் படி 4 சேர்த்து எரித்து வடித்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

(2) எருக்கம்வேர் விரா. 5, கரிசாலம் விரா. 5 இவயிரண்டும் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் மைபோலரைத்து, மல்லுத்துணியில் தடவித்திரியாக்கி உலர்த்தி கொளுத்தி நாசியில் புகைபிடிக்க குணமாகும்.

**மண்டைகபத்திற்கு:—**

சர்வேசுவர ரசகற்பம் உபயோகித்தால் குணமாகும்.

**மண்டைசிலேஷ்மத்திற்கு:—**

வங்கேசுவர ரசகற்பம் உபயோகித்தால் குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

**தலைப்புழுவெட்டுக்கு:—**

குஷ்டகுடாரி எண்ணெய் இப்புஸ்தகத்தில் சொல்லியபடி செய்து போடுக்க குணமாகும்.

மண்டையிடி--கபாலசூலைக்கு--மினசநாஸகணபதி தயிலத்தை ஸ்நானஞ் செய்தால் குணமாகும். செய்முறை இப்புஸ்தகத்தில் காண்க.

கபாலவாதம்:—

நெல்லிக்காய் தயிலத்தை இப்புஸ்தகத்தில் சொல்லியபடி ஸ்நானஞ் செய்துவர குணமாகும்.

தலைமயக்கம்—தலைசுற்றலுக்கு:—

ராஜாங்க கொம்மரக்கு தயிலத்தை ஸ்நானஞ்செய்துவர குணமாகும். இப்புஸ்தகத்தில் செய்முறை காண்க.

கபாலசூலைக்கு:—

உலோகோத்தம செந்தூரத்தைக் கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் செய்முறை காண்க.

## சுவாசகாசம், க்ஷயம், இருமல், முதலிய கபரோகங்களுக்கு அவுஷதங்கள்.

காசம் முதலிய 96 கபரோகங்களுக்கு:—

(1) திப்பிலி பலம் 10, மிளகு பலம் 5, சுக்கு பலம் 5, குரோசாணி ஓமம், சோம்பு, சீரகம், அம்பராஷ்டகம், சின்னராஷ்டகம், தாளிசபத்திரி, லவங்கப்பத்திரி, லவங்கப்பட்டை, கடுக்காய், தானிக்காய், நெல்லிமுள்ளி, லவங்கம், ஏலம், சித்திரமூலம் வகைக்கு பலம் 1 இவைகளை இளவறுப்பாய் வறுத்துச் சூர்ணித்து அத்துடன் சீனி சேர் 4 சேர்த்து தேன்விட்டு பிசைந்துக் கொட்டைப்பாக்களவு அந்தி சந்தி சாப்பிட்டுவர குணமாகும்.

(2) ராஜ அப்பிரக செந்தூரம்
(3) திப்பிலி ரசாயனம்
(4) சிங்கிபஸ்மம்
(5) அயச்செந்தூரம்,
(6) ராஜமார்த்தாண்ட லேகியம்,
(7) சந்திரகாசத் தயிலம்
(8) வீரபஸ்மம்
(9) வெள்ளி பஸ்மம்

இவைகளை இந்த புஸ்தகத்தில் சொல்லியபடி செய்து கொடுக்க குணமாகும்.

சிலேஷ்மம் (20)-க்கு:—

(1) மகாதாம்பிர பஸ்மம்
(2) கல்நார் பஸ்மம்.
(3) மண்டூர செந்தூரம்.

இவைகளை இந்த புஸ்தகத்தில் பார்வையிட்டு செய்துக்கொடுக்க குணமாகும்.

மார்புச்சளிக்கு—

நவக்ஷார உப்பு, இபிக்காகுவனா, கர்ப்பூரம், வகைக்கு 3 முதல் 4 கிறேன் சேர்த்து அனுபானத்தில் கொடுக்க குணமாகும்.

**மார்புகபநோவுக்கு:—**

வார்தி உப்பு 1 கிறேன்ஸ், வெடி உப்பு 2 கிராம், [illegible] கு 12 அவுன்ஸ், கர்ப்பூரப்பாவனை இராம் ½ [illegible] சேர்த்து அதிமதுரங்கசாயத்தில் ½ அவுன்ஸ் வீதம் தினம் 6 தடவைக் கொடுக்க குணமாகும்.

**மார்புச்சளி—மார்பு கபநோவுக்கு:—**

வாதுமைப்பருப்புப்பாகு 12 அவுன்ஸ், வெடிஉப்பு 2 இராம், வார்தி உப்பு 1 கிறேன், கலவைக்கர்ப்பூரத்திராவம் ½ [illegible] சேர்த்து ½ அவுன்ஸ் வீதம் ஒருமணிக்கு ஒரு [illegible] மாகும். (Dr Graves)

**கோழை வெளியாக்க:—**

லைகர் பொட்டாஸ், நரிவெங்காயப்பாவனை இராம் [illegible] 15 துளி, கலவை கர்ப்பூரப்பாவனைத்திராவம் ½ [illegible] அவுன்ஸ் இவைகளைச் சேர்த்துக்கொடுக்க குணமாகும். [illegible] Williams.,

**சுவாச காசத்திற்கு:—**

பொட்டிஉப்பை அதிகஜலத்தில் கரைத்து அதில் ஒரு தளமான கடுதாசியை தோய்த்து கொஞ்சநேரம் ஊறவைத்து பின்பு காற்றில் உலர்த்தி ஒரு சங்கானில் வைத்துக்கொளுத்திப் புகையை உட்கொண்டால் உடனே குணமாகும். (Dr. Waring.)

**காசம் (5)-க்கு:—**

(1) ஒரு விராகனிடை யானையின் நகத்தை கத்தியால்சீவி ஒரு சேர் வேப்பெண்ணெயைக் காய்ச்சி அதில் போட்டுக் கருகும் [illegible] பதத்தில் எடுத்து வடித்து ஒரு விராகனிடை வீதம் [illegible] குணமாகும்.

(2) ¼ (வ) தங்கரேக்கை போஜனஞ்செய்யும்போது முதல் அன்னத்தின் மேல்போட்டு நெய்யைக்காய்ச்சி விட்டுபிசைந்து சாப்பிட்டு பிறகு வழக்கப்படி பத்தியமாய் சாப்பிட்டுவர குணமாகும்.

(3) தாளகக்கட்டு.
(4) திப்பிலிரசாயனம்.
(5) பாவனத்திப்பிலி.
(6) உலகோத்தம செந்தூரம்.
(7) திரிவிக்கிரம ரச செந்தூரம்.
(8) சுவர்ணகோரோசனமாத்திரை.
(9) திரிலோக ரக்ஷாமணிமாத்திரை.
(10) பஞ்சாக்ஷரசெந்தூரம்.
(11) மகா ரஜதபஸ்பம்.
(12) மகா ரசபஸ்பம்.
(13) பவளபஸ்பம்.
(14) தருபஸ்பம்.
(15) [illegible]
(16) [illegible]
(17) [illegible]
(18) மகா தாளிசப்பத்திரி சூரணம்.

(19) வீரபத்திர சிந்தாமணி.
(20) மகா தூதுளை கிருதம்.
(21) நமசிவாய செந்தூரம்.

இவைகளை இந்த புஸ்தகத்தில் சொல்லிய முறைகளின்படி செய்துஉபயோகித்தால் குணமாகும். அன்றியும் 14வது-16-வது அத்தியாயத்தில் சொல்லிய மருந்துகளை மிக்ஸ்சேர் செய்துக்கொடுக்க குணமாகும்.

**சுவாசம் (5)-க்கு:—**

(1) பஞ்சாக்ஷர செந்தூரம்.
(2) திரிவிக்கிரம ரச செந்தூரம்.
(3) சுவர்ண கோரோசன மாத்திரை.
(4) திரிலோக ரக்ஷாமணி மாத்திரை.
(5) பிரவாள பஸ்மம்.
(6) லிங்கமெழுகு.
(7) பாவனத்திப்பிலி.
(8) மகா தூதுளை கிருதம்.
(9) மகா அசுவகெந்தி சூர்ணம்.
(10) [illegible] மாத்திரை.

இவைகளை உபயோகிக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் செய்முறைகள் காண்க.

**ரத்தகாசம் ரத்தவாமனம் இவைகளுக்கு:—**

படிகாரம் 2 கிராம், பசும்பால் 18 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து காய்ச்சி ஆறினபின் 1½ அவுன்ஸ் வீதம் தினம் 3 தடவை கொடுக்க குணமாகும்.

**பித்தகாசத்திற்கு:—**

முசுமுசுக்கைத் தயிலத்தை ஸ்நானஞ் செய்துவர குணமாகும். செய்முறை இப்புஸ்தகத்தில் காண்க.

**மந்தாரகாசத்திற்கு:—**

திரிலோகரக்ஷாமணி மாத்திரை கொடுக்க குணமாகும். செய்முறை இப்புஸ்தகத்தில் காண்க.

**ஈளைக்கு:—**

(1) வீரபத்திர சிந்தாமணி.
(2) தாளகக்கட்டு.
(3) பவளபஸ்மம்.
(4) துருசிபஸ்மம்.
(5) [illegible] தூதுளை சூர்ணம்.
(6) ராஜ வில்வாதிலேகியம்.
(7) வச்சிரவல்லி லேகியம்.
(8) மகா தாளிசப்பத்திரி சூர்ணம்.

இவைகளைக் கொடுக்க குணமாகும். செய்முறை இப்புஸ்தகத்தில்காண்க. அன்றியும் 14வது-16-வது அத்தியாயத்தில் அநேக மருந்துகள் காணலாம்.

**க்ஷயரோகம் 4-க்கு:—**

(1) காட்லிவர் ஆயில்.
(2) திரிலோகரக்ஷாமணி மாத்திரை.
(3) திரிவிக்கிரம ரச செந்தூரம்.
(4) அப்பிரக பஸ்மம்.
(5) தாளகபஸ்மம்.
(6) மகா தாம்பிர பஸ்மம்.

**கபத்தைவெளியாக்க:**

[illegible] கிறேன்ஸ், இபிக்காக்கியுவனு 3 கிறேன்ஸ், பொ [illegible]) திராம், [illegible]களைச் சேர்த்து ¼ மணிக்கு ஒரு தட [illegible]) யங்கு கொடுக்க கபத்தை வெளிப்படுத்தும். (Dr. Paris)

---

## கிரகணி ரோகங்கள் (11) க்கு அவுஷதங்கள்.

**கிரகணி (1) க்கு:—**

(1). மாதுளம் பிஞ்சு, சாதிக்காய், சாதிப்பத்திரி, கருவப்பிசின், காந்தம், கர்ப்பூரம், [illegible]கம், இவ்வேழும் வகைக்குப்பலம் 1 சுத்திசெய்து சேர்த்து அத்திப்பாலால் 2 சாமம் அரைத்து குன்றிமணி அளவாக மாத்திரைகளாக்கி ஒரு மாத்திரை வீதம் தினம் 2—3 தடவை வெல்லத்தில் கொடுத்துவர குணமாகும்.

(2). லகு சூதசேகர மாத்திரை.
(3). நாராயண மண்டூரசெந்தூரம்.
(4). அய செந்தூரம்.
(5). அயக்காந்த செந்தூரம்.
(6). உபரசாதம செந்தூரம்.
(7). சுயமக்னி.
(8). அப்பிரேக பஸ்மம்.
(9). வெள்ளிய பஸ்மம்.
(10). கந்தக ரசாயனம்.
(11). பொஜன குடாரி மாத்திரை.
(12). மகா கூழ்பாண்டக் கிருதம்.
(13). ராஜ அமிர்தசஞ்சீவி லேகியம்.
(14). ராஜ சிந்தாதி லேகியம்.
(15). ராஜ வில்வாதி லேகியம்.
(16). மகா தாளிசப்பத்திரி சூர்ணம்.
(17). ராஜ ஹம்ஸபொடலி மாத்திரை.

இவைகளைக்கொடுக்க குணமாகும். இந்த புஸ்தகத்தில் இவைகளின் செய்முறைகள் காண்க.

**வாயு கிரகணி—உஷ்ணபேதிக்கு:—**

100 வருஷஞ் சென்ற வேப்பமரத்தின் உலர்ந்தப் பட்டை விரா. 100, மிளகு வி. [illegible]0 இவைகளைச்சேர்த்து சூர்ணித்து அத்துடன் சர்க்கரை விரா. [illegible] சேர்த்து, 2 விரா. வீதம் 7 நாள் கொடுக்க குணமாகும்.

**வாத—பித்த—சிலேஷ்ம—கிரணிகளுக்கு:—**

ஒருபலஞ் சீரகத்தை ஒருபலம் கொட்டாங் கரந்தையுடன் சேர்த்து மைபோலரைத்து சிறு வடைகளாகத் தட்டி நல்லெண்ணெயில் வறுத்துச் சாப்பிட குணமாகும்.

**வயிறுகடுப்புக்கு:—**

(1). வெள்ளிய பஸ்மம்.
(2). நாக பஸ்மம்.

இவைகளை புஸ்தகத்தில் சொல்லியபடி செய்துக் கொடுக்க குணமாகும்.

(3). சீரகம் விரா. 1, வெங்காயம் விரா. 2, கர்க்கடக சிங்கி விரா. 4, இளவறுப்பாய் வறுத்து சூர்ணித்து திரிக்கடி வீதம் எருமைத்தயிரில் கொடுக்கத் தீரும்.

(4). 7 பலம் சீரகத்தை இளவறுப்பாய் வறுத்து சூர்ணித்து ஒரு பலம் சீனாக்கற்கண்டு பொடியையச்சேர்த்து 3 விரா. வீதம் பகல் வெய்யில் கொடுக்க குணமாகும்.

(5). ஒரு பலம் ஒரு தலை வெள்ளைப்பூண்டுக்கு கறிசல்லை அரைத்து கவசமிட்டு உமிக்காந்தலில் வெதுப்பி, பருப்பை எடுத்து அரைத்துத் தயிரில்கொடுக்க குணமாகும்.

(6) வெங்காயம் விரா. 1, சீரகம் விரா. ½ (௳), கர்க்கடகசிங்கி விரா. ¼ (௳) இவைகளை இளவறுப்பாய் வறுத்துச் சூர்ணித்து [illegible] கொடுக்கக் குணமாகும்.

**மூலக்கடுப்பு—வயிற்றுக்கடுப்பு—ரத்தகிராணி—சிதகிராணிக்கு:—**

வெந்தியம், செல்விகற்றல், சுண்டைக்காய் வற்றல், [illegible], கறிவேப்பிலை, ஓமம், மாதுளம் பழத்தோல் வகைக்கு விரா. 1 இவைகளை இளவறுப்பாய் வறுத்து சூர்ணித்து 3 விரா. வீதம் தயிரில் கொடுக்க குணமாகும்.

**சகல கழிச்சலுக்கு:—**

புளியாரை, வாழைப்பூ, வகைக்கு 4 அவுன்ஸ் சேர்த்து பிட்டவியலாக அவித்துப் பிழிந்தச்சாற்றில் தேன் 10 துளி விட்டுக்கொடுக்க குணமாகும்.

---

## அதிசார ரோகங்கள் (6)க்கு அவுஷதங்கள்.

**அதிசாரம் (6) க்கு:—**

(1). ஜாதிகட்டுவாங்க மாத்திரை. (5). வெள்ளி பஸ்மம்.
(2). பயிரவடி மாத்திரை. (6). கந்தக ரசாயனம்.
(3). மகா ரச பஸ்மம். (7). நாறு வில்வாதி லேகியம்.
(4). சுவர்ண ரஜத பஸ்மம். (8). அமிர்த சஞ்சீவி லேகியம்.

இவைகளைக்கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் செய்முறைகள் காண்க.

(9). விளாவின சந்தகத்திராவகம் 2 டிராம், சீனி 4 டிராம், கலவை ஏரிசிப் பாவனத்திரவம் 4 டிராம், பெப்பர்மெண்டு ஜலம் 6 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து 4 மணிக்கு ஒரு தடவை இரண்டு கரண்டி கொடுத்துவரத்தீரும் (Mr. E Shepherd)

(10) சீமை எண்ணெய் (Olive oil) 1 அவுன்ஸ், ஐயோடின் 20 கிரேன்ஸ் இவைகளைச்சேர்த்து வயிற்றின் மேல் தேய்த்தால் அதிசாரம், குடலைப் பற்றிய ரோகங்கள் குணமாகும். (Mr. M. Diamond)

(11) தருசி 1¼ கிரேன்ஸ், அபின் 1¼ கிரேன்ஸ், குல்கந்து தேவையானது இவைகளைச் சேர்த்து 3 மாத்திரைகளாக்கி 1 மாத்திரை வீதம்

தினம் 3 தடவை கொடுக்க நீடித்த அதிசாரம், ரத்தபேதி குணமாகும். (Dr. Joy)

(12) கருநாவி, கஞ்சாவித்து, அதிவிடையம், சாதிக்காய், மாங்கொட்டைப் பருப்பு, அபினி வகைக்கு பலம் 1, இவைகளை சிந்திற்கொடிச் சாற்றாலரைத்து குன்றிமணி பிரமாணம் மாத்திரைகள் செய்து ஒரு மாத்திரை வீதம் அனுபானத்திலிட குணமாகும்.

(13) முருக்கின் அரிசியும், காட்டாத்திப்பூவும், வகைக்கு விரா. 10 சூர்ணித்து திரிகடி வீதம் இஞ்சிச்சாற்றில் கொடுக்கக் குணமாகும்.

சுரமில்லாத அதிசாரத்திற்கு:—

காசுக்கட்டி 10 கிரேன்ஸ், கருவாப்பட்டைத்தூள் 10 கிரேன்ஸ் இவைகளைச் சேர்த்து தேனில் கொடுக்க குணமாகும்.

அதிசாரம், சீதபேதி முதலியவைகளுக்கு:—

சாதிக்காய், சாதிப்பத்திரி, மாசிக்காய், கடுக்காய்ப்பூ, சீரகம், அதிவிடையம், லவங்கப்பட்டை, அபினி, வெந்தியம், கசகசா, கோரோசனை, வகைக்கு விரா. 1, முலைப்பாலாலரைத்து உளுந்துபிரமாணம், மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி பெரியவர்களுக்கு 2 மாத்திரையும், குழந்தைகளுக்கு ½ முதல் 1 மாத்திரையும் தேனில் கொடுக்க குணமாகும்.

மந்தபேதிக்கு:—

யவக்ஷாரஉப்பு, 5 கிரேன்ஸ், பெப்பர்மெண்டு ஜலம் 1½ (க,௨) அவுன்ஸ், சிராஜாப்பு பாணியும் 1 திராம், இவைகளைச் சேர்த்துக் கொடுக்க குணமாகும்.

அஜீர்ணபேதிக்கு:—

2 விரா. ஓமமும் ஒருபிடி பிரண்டையும் சேர்த்து அரைத்து ½ (௨) படி ஜலத்தில் போட்டு எரித்து ¼ (ஐ) படியாக்கிக் கொடுக்க குணமாகும்

---

## சீதபேதி ரோகத்திற்கு அவுஷதங்கள்.

சீதபேதிக்கு:—

(1) டோவர்ஸ் பவுடரும் காடிக்காரமும் கிரமத்துடன் சேர்த்துக் கொடுக்க குணமாகும்.

(2) சுக்கு பலம் 1, சொம்பு விரா. 1, கண்டத்திப்பிலி விரா. 1 எருமைத் தயிரால் மைபோலரைத்து சுத்தமான சிறு துணிகளில் கொஞ்சங் கொஞ்சமாக வைத்து முடித்து ஒரு சட்டியில் ¼ (ஐ) படி எருமை மோர் விட்டு அதில் மை முடிச்சுகள் எல்லாம் போட்டு எரிக்க அவைகள் வெந்து மேலே மிதக்கும்; அப்போது எடுத்து ஜலத்துடன்

உண்ணாக்கு அரிக்கும் கிரந்திக்கு :—

நக்ஷத்திர மாணிக்கவிருதம் கொடுக்க குணமாகும். செய்முறை இப்புத்தகத்தில் காண்க.

ஈறு ரணத்திற்கு :—

பன்னீர், தேன் வகைக்கு 1 அவுன்ஸ், விளாவின கறியுப்புத் திராவகம் 1 கிராம் இவைகளைச் சேர்த்து தினம் 3--4 தடவை ஈறின்மேல் தடவி வர குணமாகும்.

கண்ட ரண தாபத்திற்கு :—

விளாவின பொட்டிலுப்புத் திராவகம் 1¼ கிராம், தேன் 2 அவுன்ஸ் பன்னீர் 6 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து அடிக்கடி வாயை கொப்பளிக்க குணமாகும்,

ரசவாடை பிடிப்புக்கு :—

(1) வெங்காரம் விரா. 5 பொடித்து 1¼ சேர் ஜலத்தில் கரைத்து தேன் விரா. 5 சேர்த்து வாயை கொப்பளித்துவர குணமாகும்.

(2) கருவேலம் பட்டையை சிதைத்து ஜலத்தில் போட்டுக் காய்ச்சின கசாயத்தால் வாயை கொப்பளிக்க குணமாகும்.

தொண்டை கரகரப்புக்கு :—

(1) பசும்பாலில் கொஞ்சம் மஞ்சள் சூர்ணத்தைப் போட்டுக் காய்ச்சிச் சாப்பிட குணமாகும்.

(2) கம்பளியால் செய்த கழுத்துப்பட்டையை கழுத்தைச் சுற்றிக் கட்டுவதினால் குணமாகும்.

(3) மூக்காவேளைவேர் விரா. ¼ (வ), முசுமுசுக்கைவேர் விரா. 1 இவைகளைப் பொடித்து ¼ (வ) படி பசும்பாலில் போட்டுக் காய்ச்சிக் கொடுக்க குணமாகும்.

சுண்ணாம்பைச்சாப்பிட்டு வாய்ரணமானால் :—

மஞ்சளை அரைத்து ரணத்தின்மேல் தடவி 5 நிமிஷம் வைத்திருந்து, பிறகு வாயை ஜலத்தால் கொப்பளிக்கவும் அவ்விதமாய் தினம் 3—4 தடவை செய்ய குணமாகும்.

நெஞ்சுரணத்திற்கு:—

படிக்காரம் 2 கிராம் மாசிக்காய் கசாயம் 18 அவுன்ஸ், தேன் 2 கிராம் இவைகளை சேர்த்து வாய்கொப்பளிக்க குணமாகும்.

தொண்டைரணம், ரசவாடைபிடிப்பு, எயிறுபுண், இவைகளுக்கு:—

[illegible]ாலெந்திர பௌலப்பாவனதிரவம் 2—4 கிராம், ஜலம் 4 அவுன்ஸ் [illegible]லது சின்கோனகசாயம் 4 அவுன்ஸ் இவைகளைச்சேர்த்து வாயை [illegible]க்க குணமாகும்.

**தொண்டைப்புற்றுக்கு:—**

வேம்பாடம்பட்டை எண்ணெயைக்கொடுக்க குணமாகும். இப்புத்தகத்தில் காண்க.

**தொண்டைகம்மலுக்கும், வாய்ரணத்திற்கும், உள்நாக்கு வளர்ந்ததற்கும்:-**

ஒரு துண்டு காசிக்கட்டியை வாயில் அடக்கிவைத்தால் குணமாகும்

**தொண்டைநோவுக்கு:—**

100 கிரேன்ஸ் மொளகாய்த்தூள், 6—8 அவுன்ஸ் ரோசாப்பூ கஷாயம் இவைகளை சேர்த்து வாயை கொப்பளிக்க குணமாகும்.

**வாய்ரணத்திற்கு:—**

(1) படிக்காரம் விராகனிடை 2, ஜலம் சேர் 1, தேன் விராகனிடை 2 இவைகளைச் சேர்த்து வாயைகொப்பளிக்க குணமாகும்.

(2) கருவேலம்பட்டை கஷாயத்தை வாயை கொப்பளிக்க குணமாகும்.

**சொத்தைப்பல் நோவுக்கு:—**

அபினியாவது அல்லது அதின் பானைத்திராவகமாவது சொத்தைப்பல்லில் விட நோய் தணியும்.

**தந்தவாயுக்கு:—**

(1) ஒரு சிறு கலயத்தில் கறி உப்பு 4 அவுன்ஸ், சேங்கொட்டை 8 அவுன்ஸ் நொறுக்கிப்போட்டு அதின்மேல் ஒரு விரற்கடை உயரம் எருக்கம்பால்விட்டு ஓட்டால்மூடி சீலைமண்செய்து வரராகல் புடம்போட்டு எடுத்துச்சூர்ணித்து தந்தசுத்திசெய்துவர குணமாகும். பற்கள் கருகாது.

(2) எருக்கம்பழுப்பு சேர் 2, மாங்கொட்டைப்பருப்பு, சேங்கொட்டை, கொட்டைப்பாக்கு வகைக்கு 70, கறிஉப்பு படி ¼ (வ), இலுப்பை இலை சேர் 12, களிப்பாக்குப் பலம் 2½ (௨), இவைகளைத் தனித்தனியே சருவ்வபக்குவமாக எறித்து அத்துடன் காசிக்கட்டி, துரிசு வகைக்குப் பலம் 1¼ (கவ) சேர்த்து சூர்ணித்து பல் விளக்க குணமாகும்.

**பல்பூச்சிகள் நீங்க :—**

உமிக்காந்தலில் 100 கண்டங்கத்திரிப் பழத்தை கருகிப்போகாமல் சுட்டுபாகல் இலைச்சாற்றால் மைபோல் அரைத்து ஒரு சேர் நல்லெண்ணெயில் கரைத்து 8 நாள் சூரியபுடம்போட்டு எடுத்து பல்லில் பூசிவர நீங்கும்.

**நாக்கில் ஜலம்ஊறி வராததோஷத்திற்கு :—**

தங்கம், சுத்திசெய்த வெள்ளி, முத்து, பவளம் ரத்தினராகமும், மான்கொம்பு, மயிலிறகு சாம்பல் இவைகளை தேன்விட்டு உரைத்து அமிர்

தவல்லி சூர்ணத்தை அத்துடன் சேர்த்து நாக்கில் தடவிவர, ஜலம் ஊறிவரக்கூடி, தோஷம் குணமாகும். இதற்கு கண்டா அவுஷதமென்று பெயர்.

குரல்நோய்க்கு:—

(1) வீரப்பத்திர சிந்தாமணி.
(2) உடல்கொத்தமச் செந்தூரம்.

இவைகளைக் கொடுக்க குணமாகும். செய்முறைகள் இப்புஸ்தகத்தில் காண்க.

நாக்குவரிப்புக்கு:—

நட்சத்திர மாணிக்கக்கிருதம் செய்துகொடுக்க குணமாகும்.

நாக்குக்கொப்பளத்திற்கு:—

வேம்பாடம்பட்டை எண்ணெய் செய்துக் கொடுக்க குணமாகும்.

நாக்குவெடிப்புக்கு:—

வேம்பாடம்பட்டை எண்ணெய் செய்துகொடுக்க குணமாகும்.

நாக்குப்புற்றுக்கு:—

(1) வேம்பாடம்பட்டை எண்ணெய்.
(2) நட்சத்திர மாணிக்கக்கிருதம்.

இவைகள் செய்து கொடுக்க குணமாகும்.

வாய்க்கிரந்திக்கு:—

(1) ராஜ ஏலாதிச் சூர்ணம்.
(2) வேம்பாடம்பட்டை எண்ணெய்.

இவைகளை செய்து கொடுக்க குணமாகும்.

வாய்ப்புற்றுக்கு:—

(1) வேம்பாடம்பட்டை எண்ணெய்.
(2) கஷ்டாக்ஷ செந்தூரம்.

இவைகளை செய்து கொடுக்க குணமாகும்.

வாய்நாற்றத்திற்கு:—

(1) வேம்பாடம்பட்டை எண்ணெய்.
(2) பொன்னாங்காணி கிருதம்.

இவைகளை கொடுக்க குணமாகும். இப்புஸ்தகத்தில் காண்க.

அரிக்கிரந்திக்கு:—

ராஜஏலாதிச் சூர்ணம் செய்துகொடுக்க குணமாகும்.

நெஞ்சேரிவுக்கு

(1) ராஜ மார்த்தாண்ட லேகியம்.
(2) ராஜ வில்வாதி லேகியம்.

இவைகளைச் செய்துக் கொடுக்க குணமாகும்.

உதடுவெடிப்புக்கு:—

வேம்பாடம் பட்டை எண்ணெய்யை செய்து கொடுக்க குணமாகும்.

பல்லெயிறுக்கட்டிக்கீழ் வடிதலுக்கு:—

வேம்பாடம் பட்டை எண்ணையை செய்து கொடுக்க குணமாகும்.

கருநாக்குதலுக்கு:— நட்சத்திரமாணிக்க கிருதம் செய்துகொடுக்கத்தீரும்.

ரோகங்கள் (27), மேகம் (20), மேகவாதரோகம், மேகரணங்கள் முதலிய அநேக பயங்கரமான ரோகங்கள் குணமாகும்.

(2) ரணசிகிச்சைகள் செய்வதாலும் குணமாகும்.

---

## காமாலைரோகங்கள் (13)-க்கு அவுஷதங்கள்.

காமாலை (13)-க்கு:—

(1) மண்டூர செந்தூரம்
(2) அயச்செந்தூரம்
(3) வீரபத்திர சிந்தாமணி
(4) துரிசு பஸ்பம்
(5) மகாகூழ்ப்பாண்ட கிருதம்
(6) ராஜஅமிர்த சஞ்சீவி லேகியம்
(7) மகா கூழ்ப்பாண்ட லேகியம்.

இவைகளை இந்த புஸ்தகத்தில் சொல்லியபடி செய்து கொடுக்க குணமாகும். இன்னும் அநேக மருந்துகள் 14-வது, 16-வது அத்தியாயத்தில் காண்க.

மஞ்சட்காமாலைக்கு:—

(1) ரேவல் சின்னி (Rhubarb Powder) 10 கிரேன்ஸ், டார்டரேட் ஆப் பொட்டாஸ் 1 டிராம், பரிமள லேகியம் 20 கிரேன்ஸ், பெப்பர்மெண்டு ஜலம் 2 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து 8 மணிக்கு ஒருதரம் கொடுக்க குணமாகும். (Dr. E. J. Clark).

(2) காட்டுக்கொட்டைமணக்கு இலையை அரைத்து புன்னைக்காயளவு எருமை வெண்ணெயில் தினம் 2 தடவை 3 நாள் கொடுக்க குணமாகும்.

---

## வாந்திபேதிக்கு அவுஷதங்கள்.

(1) க்ளோரின் வெடியுப்புத் திராவகம் 1 டிராம், பெப்பர்மெண்டு ஜலம் அல்லது கர்ப்பூர ஜலம் 1 அவுன்ஸ், அபினிப்பானத்திராவகம் 30 துளி இவைகளைச்சேர்த்து அதில் ¼ (வ) பங்கு வீதம் கஞ்சியில சேர்த்து 3-4 மணிக்கு ஒருதடவை கொடுக்க குணமாகும். (Mr. Hope).

(2) குளோரேட் ஆப்பொட்டாஷ் 8 கிரேன்ஸ், கறியுப்பு 20 கிரேன்ஸ், கார்பொனேட் ஆப்சோடா 30கிரேன்ஸ் இவைகளைச் சேர்த்து ஜலத்தில் கரைத்து 2-3 மணிக்கு ஒரு தடவைக்கொடுக்க வாந்திபேதி, சந்நிபாத சுரம் குணமாகும். (Dr. Stevens).

(3) வங்கவுப்பு 2 கிரேன்ஸ், ரசபஸ்பம் 2 கிரேன்ஸ், கர்ப்பூரம் 1 கிரேன், அபினி 1 கிரேன், இவைகளைச்சேர்த்து ஒரு மாத்திரையாக்கி 2 அல்லது 3 மணிக்கு ஒரு தரம் கொடுக்க குணமாகும். (Dr. Paterson).

---

## மூத்திரரோகம்—பிரமியம்—பிரமேகம்—கிரிச்சரம்—பவுத்திரம்—அனாயாப்பு இவைகளுக்கு அவுஷதங்கள்.

**மதுமூத்திரம்.—**

நவக்ஷார உப்பு 5—8 கிரேன்ஸ் யுடன் டிபினிபாவனத்திரவம் சேர்த்து நிலவேம்புக் கஷாயத்தில் கொடுத்து மாமிஸம் மீலாவகை இவைகளின் பத்தியத்தில் வைக்க குணமாகும். (Dr. Barlow)

**நீரிழிவுக்கு:—**

(1) மேகுலாந்தகமாத்திரை
(2) கனதம்தெண்ணெய்
(3) மகாசந்தனாதிதயிலம்

இவைகளைக் கொடுக்க குணமாகும். அனுபந்த 14-வது அத்தியாயத்தில் மருந்துகள் விசேஷமாய் காணலாம்.

**நீர்க்கட்டுக்கு:—**

(1) லைகர் பொட்டாஸ் 2 இராம், பொட்டிலுப்பு 2 இராம், ஸ்பிரிட் ஈதர் நைட்ரஸ் 3 இராம், நரிவெங்காயப்பாவனத்திரவம் 6 இராம், வெந்நீர் 6 அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து ஒரு பெரிய கரண்டி வீதம் தினம் 3 தடவை ஒரு வைன்கிளாஸ் ஜலத்தில் கொடுக்க மூத்திரத்தை விருத்திக்கும். (Mr. Fergussion).

(2) மேககுலாந்தக ஷர்பத்து (4) நன்னாரி ஷர்பத்து
(3) கூழ்ப்பாண்டஷர்பத்து (5) ராஜவில்வாதி லேகியம்

இவைகளைக் கொடுக்க குணமாகும். இந்த புஸ்தகத்தில் காண்க.

**நீர்க்கோவைக்கு:—**

அசிடேட் ஆப் பொடாஷ் 1 இராம், டிஜிடேலிஸ் பாவனத்திரவம் 8 துளி, எரிவண்டுப்பாவனத்திரவம் 15 துளி, ஸ்பிரிட் ஈதர் நைடரஸ் ½ (உ) இராம், ஜலம் 1½ (கஉ) அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து தினம் 3 தடவைக் கொடுக்க குணமாகும். (Dr. Budd.)

**நீர்வற்றம்—மலக்கட்டு—தூதகக்கட்டு இவைகளுக்கு:—**

மக்கியும், இராகூஷஉப்பும் வயதுக்குத்தக்கபடி சேர்த்துக் கொடுக்க குணமாகும்.

**நீர்வற்றத்திற்கு:—**

(1) மக்கி 12 கிரேன்ஸ், கரியபோளம் 30 கிரேன்ஸ், இராகூஷஉப்பு 36 கிரேன்ஸ் இவைகளைச்சேர்த்து அரைத்து 24 மாத்திரைகளாக்கி 2 மாத்திரைகள் வீதம் தினம் 3 தடவைக் கொடுத்துவர குணமாகும்.

**நீர்ச்சுருக்கத்திற்கு:—**

(1) மகா கூழ்ப்பாண்டகிருதம். (3) மகா கூழ்ப்பாண்ட லேகியம்.
(2) புளியாரைகிருதம். (4) அகஸ்தியர்குழம்பு.

இவைகளைக்கொடுக்க குணமாகும். இந்த புஸ்தகத்தில் காண்க.

**நீரெரிவு—நீர்க்கடுப்பு இவைகளுக்கு:—**

(1) மகா வல்லாதகாமிருதம்.
(2) மரத்துவெள்ளிலவர்த்தம்.
(3) பவளபஸ்மம்.
} இவைகளைச் செய்துகொடுக்கக் குணமாகும்.

(4) நெருஞ்சிச்சாறு 1 அவுன்ஸ், இளநீர் ஜலம் 2 அவுன்ஸ், ஸ்பிரிட் ஈதர் நைட்டரஸ் 25 துளி, கற்கண்டுபொடி 2 திராம் இவைகளைச்சேர்த்துச் சாப்பிட்டுவர நீரெரிவு, நீர்சுருக்கு குணமாகும்.

**கிரிச்சரம் 4 க்கு:—**

(1) ராஜ அப்பிரேக செந்தூரம்.
(2) மகா ரஜதபஸ்மம்.
(3) அப்பிரக பஸ்மம்.
} இவைகளை கொடுக்க குணமாகும். அன்றியும் 14-வது 16-வது அத்தியாயத்தில் அநேக மருந்துகள் காணலாம்.

**மாவைக்கரைத்ததுபோல் மூத்திரத்திற்கு:—**

விளாவின கறி உப்பு திராவகம் 1 திராம், பார்லி அரிசிகஞ்சி 1 பைண்ட், சர்க்கரை ½ (உ) அவுன்ஸ் இவைகளைச் சேர்த்து 2 முதல் 4 அவுன்ஸ் வீதம் தினம் 3 தடவைக் கொடுக்க குணமாகும்.

**அஸ்மரிரோகத்திற்கு—(கல்லடைப்புக்கு):—**

(1) கார்பொனேட் ஆப் பொட்டாஷ் ½ முதல் 1 திராம், விளாம்பிசின் பாகு 1½ (கஉ) அவுன்ஸ், குளோராசாணி ஓமப் பாவனைத்திராவகம் 1 முதல் 1½ (கஉ) திராம் இவைகளைச் சேர்த்துக்கொடுக்க குணமாகும்.

(2) மகா ரஜதபஸ்மம்.
(3) அஸ்மரிகுழம்பு.
} இவைகளைக் கொடுக்க குணமாகும். செய்முறை இந்த புஸ்தகத்தில் காண்க.

**மகோதரத்திற்கு—(பெருவயிறுக்கு):—**

(1) திராக்ஷஉப்பு ½ (உ) திராம், நரிவெங்காயத்தூள் 2 கிரேன்ஸ், சுக்குத்தூள் 4 கிரேன்ஸ் இவைகளை சேர்த்து 8 மணிக்கு ஒருதரம் ஜலத்தில் கொடுக்க குணமாகும். (Dr. a. T. Thomson.)

(2) திராக்ஷ உப்பு 1 அவுன்ஸ், பொட்டிலுப்பு 2 திராம் வெங்காரம் 2 திராம், டிஜிடெலிஸ் தூள் 20 கிரேன்ஸ், இவைகளைச்சேர்த்து 12 பாகமாக்கி தினம் 2—3 தடவை ஒவ்வொரு பாகமாக ஜலத்தில் கொடுத்துவர குணமாகும். (Dr. Copland)

(3) அகஸ்தியர் குழம்பு.
(4) லிங்கக் குழம்பு.
(5) ராஜலோகச் சூர்ணம்.
(6) துரிசுபஸ்மம்.
(7) அயச்செந்தூரம்.
(8) ஆவாரை லேகியம்.

இவைகளைக் கொடுக்க குணமாகும், இந்தபுஸ்தகத்தில் காண்க.

**மூத்திரரோகம்-(20)-க்கு:—**

ரஜதபஸ்மம் கொடுக்க குணமாகும்.

